# வசவ புராணம்

என வழங்கும்

# நந்திதேவர் கதைகள்



தயாரிப்பு: அரு. ராமநாதன்

மூலங்களைப் பரிசோதித்து
எழுதியவர்:
துர்க்காதாஸ் எஸ். கே. ஸ்வாமி

பிரேமா



பிரசுரம்

[illegible]





விலை. ரு 4—00



# பொருளடக்கம்



## 1. திருக்கயிலையில் ஒரு நாள்

"உண்டாக்கிய செல்வம்; உருவாக்கிய வீடு; ஆளுகிற நிலம்; அன்னம் போன்ற மனைவி—இவை முக்தித் தடையாகும். அதனால் அவற்றை மறந்திடு!'' என்றார் ஒருவர். அவர் கருத்தினால் எல்லாவற்றையும் அறும்படி வென்றவர். அசைவற்ற பெரிய பதவியை யுடையவர். பிரளய காலப் பெரு நெருப்பிற்கும் மெலியாதவர். பிறவிகளில் புகுந்து பிறவாதவர். ஏழுலகங்களாலும் அறிய முடியாதவர். எப்பொழுது எதனாலும் தடைப்படாதவர். மோக்ஷமாகிய செல்வத்தையுடையவர். சிவபக்தர் கூட்டத்தை எந்நேரமும் தம் பக்கத்திலிலேயே

பெற்றிருப்பவர். விரிசடையில் பிறை நிலா சூடியவர். தோன்றித் தோன்றி அழிகிற உடம்பு இல்லாதவர். அவரே சிவபெருமானுவார். அத்தகைய சிவபெருமானை ''வாழக் கடவை!'' என்று துதிப்பவர்கள் வையத்தில் பிறந்து வருத்தம் அடையார்கள்!

தேவர்களும், தரும சிந்தையுடையவரும் தவத்தாரும் இம்மை மறுமைப் பயன்களை அறிந்தவருமாகிய இவர்கள், ''தலைவனே! எம் இறைவனே!'' என்று திருவடிகள் இரண்டையும் வணங்க, சிவபெருமான் இனிதாக வீற்றிருந்து கிருபை செய்வார். அவர் அருமையாகிய தேவாமிருதம் போன்ற திருவுருவமுடையவர். தேவர்கள் நாள்தோறும் வந்து, அன்புடன் வணங்க, கருணைததும்பும் கண்களையுடையவர். அத்தகைய சிவபெருமானது கீர்த்தியைப் போன்றது திருக்கயிலை மலை.

நஞ்சுண்ட நம்பிரானுக்கு, நான் பொருந்தியதால் ஒப்பற்ற மலையாவேன் என்று அந்தத் திருக்கயிலைமலை நினைத்து, நல்லொழுக்கமும் அமுதமும் ஒருங்கே திரண்டு ஆகாயமளாவ அழகுற எழுந்ததுபோல் விளங்கும்.

பிருமதேவனின் ஆற்றலும், தேவர்களின் ஆற்றலும் அறிவு மிக்கத் திருமாலின் அழகு மிக்க ஆற்றலும் பெருந்தவ முனிவர்களது ஆற்றலும் யாவும் ஒன்ருய்ச் சேர்ந்து சிவபெருமானது ஆசனமான மலையாவோம் என்று எண்ணியதைபோல் அந்தத் திருகயிலாயமலை தோற்றமளித்ததோ? சந்திரன் முதல் நட்சத்திரங்கள்வரை அனைத்திற்கும் அழகைத் தருகிற தனிப் பெருஞ்ஜோதி தாவி, திரண்டு எக்காலமும் அழியாதிருக்கும் பொருட்டு சிவபெருமானது வாகனமாகித் திருக்கயிலை மலை ஆயிற்ருே?

இவ்வாறு உயர்ந்து பெரிதாயிருக்கும் திருக்கயிலாய மலையின் சிகரத்தின்மீது ஒரு மண்டபம் உண்டு. அது நிறை ஒளி வீசும்படி செழுமையான நவரத்தினங்களால் அழகுற அமைந்த மண்டபமாகும். அதைத் தாங்கி நிற்கும் சந்திர காந்தக் கற்றளத்தின் மீது, கோடியிளஞ் சூரியர்கள், ஒளி செய்தாற் போன்று ஒரு சிம்மாசனம் உண்டு. திருமாலுக்கும், பிரும்மனுக்கும் தலைவனுகிய சிவபெருமான், வேதங்கள் ஒலி செய்ய, அந்தச் சிம்மாசனத்தில் வீற்றிருந்தார்.

அந்தச் சமயத்தில் செந்தாமரைக் கண்ணனை திருமாலும், பிரும்மனும், ஆயிரங்கண்ணனுகிய இந்திரனும், பதினேரு ருத்திரரும், அஷ்டதிக் பாலகரும், ஆகாய சஞ்சாரிகளான பன்னிரண்டு சூரியர்களும், அஷ்டவசுக்களும், நவசித்தரும், சப்தரிஷிகளும், சனந்தனர் முதலிய முனிவர்களும், கருடர்,

கின்னரர், யக்ஷர், நாகர், வித்யாதரர், நாரதர், கிம்புருடர் முதலியோர் யாவரும் சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் அரியணையின் அருகே ஒவ்வொரு பக்கத்திலும் தியானித்த வண்ணம் நின்று, நான்கு வேதங்களும் முழங்க "ஹரனே, 'சிவனே', சங்கரனே,' பரிபூரணனந்தனே!" என்று போற்றித் துதித்துக் கொண்டிருந்தார்கள்.

அப்பொழுது திருமகள் நாதனாகிய திருமால் மீது சிவ பெருமான் சாய்ந்து கொண்டும், பிரும்மன் மீது பாம்புமாலை அணிந்த தம் தாமரைத் திருக் கையை வைத்துக் கொண்டும் வீற்றிருந்தார். இந்திரன் திருவடியை பையத்தடவ, சந்திர னும் சூரியனும் தூய்மையான கவரிகளை வீசி நிற்க, குபேரன் அடப்பம் தாங்க, வேதங்கள், வேதாகமங்கள், மந்திரங்கள் முதலியவற்றில் வல்லவர்கள் அவரவர் இடத்தில் அமர்ந் திருக்க, கின்னரரும், வீணை முதலிய இசைக்கருவிகளில் வல்ல வரும், மத்தளம், தாளம் முதலியவற்றை இசைக்க வல்ல பெருந்தவத்தினரும் நின்று முழக்கமிட, தாம் வாழ்கிற பெரிய சபையில் பிருங்கி முனிவர் பெரு மகிழ்ச்சியோடு அபிநயம் மிகுந்த நடனம் செய்யும் தன்மையை ஆர்வத்தோடு பார்த்துக் கொண்டிருந்தனர். அப்பொழுது ஒழுக்க சீலர்களான சிவகண நாதர்கள் சிவபெருமானை வணங்கிக் கொண்டிருந்தனர்.

இந்நிலையில் தைரியசாலியான நாரத முனிவர் வந்து சிவபெருமானின் சபைக்கு செல்லுதற்குரிய சமயத்தை அறிந்து, உள்ளே பிரவேசித்து சிவபெருமானை வணங்கி அன்பின் புன்சிரிப்போடு நின்றார். சிவபெருமானை பூவுலகத் திற்கு அழைத்துச் செல்லுவதற்காகவே நாரதர் வந்திருந்தார். அதைச் சிவபெருமான் புரிந்துகொண்டு நாரதரை அன்போடு நோக்கிவிட்டு உமாதேவியை வரவழைத்து தம் இடப்பக்கத் தில் வைத்து மகிழ்ந்தார். பிறகு நாரதரை நோக்கி, "நாரத முனிவனே, நீ வந்த செய்தியைச் சொல்" என்று முக்கண்ண ரான சிவபெருமான் கேட்டார். உடனே நாரதர் தம் தூய்மை யான இரு கையையும் கூப்பி சிவபெருமானை நோக்கி, "எந்தையே! பூமியில் உமது பெரும் புகழ் மங்கிவிட்டது. உம்மைப் போற்றும் இனிய பக்தியும், ஐந்தெழுத்து (பஞ்சா க்ஷர) மந்திர ஜபமும் மறைந்துவிட்டன. மனிதர்களின் உடல் களில் திருவெண்ணீறும், பிரகாசமான ருத்திராக்ஷ மாலையும் காணாமற் போய்விட்டன. அற்பமாகிய சமண மதம் மேலோங்கிப் பரவிச் சைவ சமயத்தின் பெருமை சரிந்து மறைந்துவிட்டது! விஷத்திற்கு ஒப்பான அரக்கர்கள், தேவர் களை மயக்குவதுபோல், சமணர்கள் செய்யும் துன்பத்தினால் உனது புகழ்பாடும் பக்தர்கள், குடத்திலே வைத் திருக்கும் தீபத்தைப்போல, பூமியில் மறைந்து போய் அடங் கிக் கிடக்கிறார்கள். வலியவர்களான சமணர்களோ மலை

மேலிருக்கும் தீபம்போல், அந்தத் தென் திசையை மூடிவிட்டதால் சைவ சமயம் சரிந்து வேத சிவாகமங்களின் செய்கை ஓடி ஒளிந்து கொண்டிருக்கிறது! எங்கும் அறியாமை என்னும் இருள் சூழ்ந்ததால் உனது பக்தர்கள் ஐந்து எழுத்து மந்திரத்தை உச்சரிக்கவே பயந்து எப்பொழுது இந்தத் துன்பத்திலிருந்து விடுபடுவோம் என்று வருந்திக் கொண்டிருக்கிறார்கள். ஏழு உலகங்களையும் ஆள்கிற சிவபெருமானே, நீர் தென் திசைக்குச் சென்று அச்சமணர்களை அடக்கி மனத்தாலும், சொல்லாலும் செயலாலும் உம்மையே துதிக்கும் மூவகை பக்தியையே வளரச் செய்து, உம் புகழையும் பெருமையையும் அங்கே நிலை நிறுத்தி, பக்தர்கள் பக்குவமடையும் வண்ணம் அருள் செய்யவேண்டும்” என்றார்.



“நாரதா! நீ உண்மையே எடுத்துச் சொன்னாய்! என்னிடமிருக்கும் நந்திதேவன் எனக்கு இணையான பெருமையை உடையவன். உன்னுடைய வேண்டுகோளுக்கு இணங்கிச் சிறிதளவும் சந்தேகமின்றி நான் இரண்டாம் சிவவேடம் தரித்து தென்திசைச் சென்று, புன்னெறியைப் புரட்டியெறிந்து செம்மையான சைவ சமயம் அங்கு வளர்ந்து புகழ் பெறும்படி உபதேசம் செய்வேன்” என்று சிவபெருமான் சிரித்தார். அப்போது பால் வடியும் பரிசுத்தமான அவர் முகத்தைப் பார்வதி பார்த்து, “பக்தியின்மீது ஏற்பட்ட பரிசுத்தமோ, இல்லை பரிசுத்தமான சரீரமோ” என்று கேட்டாள்.

சிவபெருமான், உமையாளை நோக்கி, “நம் நந்திதேவன் பக்தியால் என்னை நிகர்த்தவன். இன்னும் சொல்லப் போனால் நானே நந்திதேவன், இதற்குரிய காரணங்களையும் கேள்” என்று சொல்லத் துவங்கினார்.

பூர்வகாலத்தில் சிலாத முனிவர் என்று அருந்தவ முனிவர் ஒருவர், ஸ்ரீசைல பர்வதத்தின் நிருதி மூலையையடைந்து நீரையும் காற்றையும் புசித்து, சிறிதும் மனம் அலைப்புருமல் சித்த ஒருமிப்போடு மூன்று கோடியாண்டுகள் அகோரத் தவஞ் செய்தார். அதன் பிறகு மீண்டும் மூன்று கோடியாண்டுகள் கடுகளவான கற்களையே ஆகாரமாக உட்கொண்டு கடுந்தவம் புரிந்து வந்தார். அதைக் கண்டு தேவர்களும் வியந்தனர். யானும் அந்த முனிவன் முன் காட்சியளித்து, "தடுமாற்றமில்லாத தவஞானியே! உனக்கு வேண்டியதைக் கேள்; கொடுப்போம்!"

அதற்கு சிலாத முனிவர் *எட்டுறுப்புக்களும் தரையில் படும்படி என்னை வணங்கியெழுந்து, இரு கைகளையும் தலைமேல் குவித்து, "தேவ தேவா! எனக்கு உம்மைப்போல் ஒரு புத்திரன் வேண்டும். கொடுக்கக் கடவீர்!" என்று கேட்டார்.

நானும் "அவ்வாறே கொடுப்போம்" என்று சொன்னேன். அப்போது அம்முனிவர் "ஆனல் அத்தனே, அந்தப் புத்திரன் உனது ஸ்ரீ பாதபக்தியின் பங்கில் மன ஈடுபாடு சிறிதளவு குறைந்தால்கூட அந்தப் புதல்வனது தலையை வெட்டுவேன்! புத்திரன் எனவும் மதியேன்! அதற்கு பெருமாளே, நீர் சம்மதித்து அப்போது என்னைத் தடுக்க வரமாட்டீர் என்று ஒப்புக்கொண்டால் அத்தகைய பிள்ளை வரத்தைக் கொடும்! இல்லையெனில், அப்போது தடுக்க வருவீரென்ருல், அறிவாளனே, எனக்குக் குழந்தையாசையில்லை; அத்தகைய பிள்ளை வரமும் வேண்டாம்!" என்ருர்.

என்னிடம் அவருக்குள்ள பக்திப் பெருக்கைக் கண்டு நான் மிகவும் மகிழ்ந்து, "பக்தனே! நீ கேட்டபடியே வரத்தைக் கொடுப்போம். என்னிடமுள்ள இந்த நந்திதேவன் மும்மலங்களுமற்றவன், அநாதியே பிறந்தவன், தர்ம வடிவினன், சிவாயநம எனும் ஸ்ரீ பஞ்சாக்ஷர வடிவான இவன் யோகியாவான். இவனது பாதங்கள் பூமியில் பொருந்தி உண்டாகிற நான்கு யுகங்களில் நான்கு, மூன்று, இரண்டு, ஒன்று ஆகப் பொருந்தியிருக்கும். இது மெய் (இவன் இரண்டாஞ்சம்பு-சிவபெருமான்,) ஆவான். உலக முழுவதும் வியாபித்திருக்கும் எமக்கு இந்த நந்திதேவன் வாகனமாகி எம்மை நிரந்தரமாய்ச் சுமப்பதாலேயே இவன் நமக்கு ஒப்பாவான். இவன் எங்கும் நிறைந்திருப்பவனுவான். ஆகையால் இவனே உனக்கு மைந்தனுகப் பிறப்பான்!" என்று சொல்லிவிட்டு, நந்தி

---

* *எட்டுறுப்புக்கள்: கையிரண்டு, கால் இரண்டு, தோள் இரண்டு, மார்பு, நெற்றி.*

தேவனை நோக்கி, "நந்தி! நீ பூலோகம் சென்று இவனுக்குப் புத்திரனாக அன்போடு பிறக்கவில்லையென்றால் உனக்குப் பதில் நானே போய்ப் பிறக்கவேண்டியிருக்கும்!" என்றேன். அதனால் நம் நந்திதேவன் பூலோகத்தில் சிலாத முனிவருக்குப் புத்திரனாகப் பிறக்கச் சம்மதித்தான். ஆனால் தீமை பொருந்திய வயிற்றினையடையாமல், யோனி வாயிலாகப் பிறவாதவனாகவே (அயோனிஜனாகவே) பிறந்தான்! அவ்வாறு அவன் போய்ப் பிறந்த காலத்திலிருந்தே, எமது பாத சிந்தனை, பக்தி, சிவானந்தம் ஆகியவற்றோடு கூடப் பிறந்து, சிவபரதத்துவத்தின் சிறப்பே இவன் உண்ணுதற்குரிய தாய்ப்பாலாகி, ஸ்ரீ சத்குருபதத் தியானமே தானருந்தும் எண்ணெயாகி, திருமறையும் வாய்மையுமே இவன் பேசும் மழலைச் சொல்லாகி உன்னத வீரசைவ மார்க்க ஒழுக்கமே இவன் மனத்தில் ஆசாரமாகி, மறைக்காமல் கொடுக்கும் நல்ல கருணையே உடம்பாகி விளங்கினான். என்மீது பக்தி சிரத்தையும் பேரன்பும் மிகக் கொண்டு, மிக வேகத்தோடு பெருக்கெடுத்தோடும் நதியில், ஒரு காலை நன்றாக ஊன்றி, மற்றொரு காலை மேல் நோக்க நீட்டி, கழுத்தளவு நீரில் மூழ்கி, தாமரைபோல் முக மலர்ச்சியோடு தவம் புரிந்தான். நதி வெள்ளத்தால் மனம் இழுபடாமலும் குளிரில் நடுங்காமலும் வெகு காலம் தவமிருந்தான். பூமியும் கடல்களும் மலைகளும் நடுங்கவும் சந்திரசூரிய நட்சத்திரங்கள் ஒளி குறையவும் ஆயிரந்தலை ஆதிசேடனும் பிரமனும் திருமாலும் அஷ்டதிக்குப் பாலகரும் புத்தி மயங்கவும் எண்திசை யானைகளும் அஷ்ட நாகங்களும் தத்தம் திசைகள் விட்டு நிலை பெயர்ந்து நிற்கவும், தேவர்கள் அனைவரும் துதிக்கவும், மண்ணுலகத்தார் வருந்திச் சோரவும் நந்திதேவன் தவம் புரிந்து வந்தான். அதைக்கண்டு பதினெண் கணத்தாரும் வாழ்த்த, பிரம்மா, விஷ்ணு, முதலியோர், 'குழந்தையான இவன் எதற்காக இத்தகைய கடுந்தவத்தைச் செய்கிறான்?' என்று தமக்குள்ளே சொல்லிக்கொண்டார்கள். பின்னர், அவர்கள் சிவபிரானை என்னிடம் வந்து, நந்திதேவனின் தவத்தைக் குறித்து விசாரித்தார்கள்.

அப்பொழுது நான் அவர்களை நோக்கி, "தேவர்களே! அவன் உங்கள் தாழ்ந்த பதவிகளை இச்சித்துத் தவஞ் செய்யவில்லை. அவன் உங்களையும் மதிப்பதில்லை. நம்முடைய மேலான பதவியைக்கூட அவன் விரும்பான். எம்மை விரும்பியே நந்திதேவன் நல்ல தவஞ் செய்கிறான். நீங்கள் இதற்காக உங்கள் அழகான முகங்கள் வாடக் குழப்பம் அடைய வேண்டாம்!" என்று கூறினேன். அப்படிச் சொல்லியும் தேவர்கள் சந்தேகம் ஒழியாதிருப்பதைக் கண்ட நான், அவர்களையும் அழைத்துக்கொண்டு, நந்திதேவன் தவஞ் செய்யுமிடத்தை அணுகி, அவன் முன்னால் தோன்றி,




"உனக்கு என்ன வேண்டுமோ, அதைக்கேள்! யாம் கொடுப்போம்" என்றேன். என்னை நந்திதேவன், வணங்கித் துதித்து, "ஐயனே! யாராவது நற்பொருளை நிந்தித்து வெறும் மண்ணை விரும்புவார்களோ? நல்லறிவை மறந்துவிட்டு, கெட்ட மயக்கத்தைப் பெறுவதற்கு எண்ணுவாருண்டோ? என்னை அடிமை கொண்டு கிருபை செய்யத் தோன்றிய தலைவனே வணக்கம்! நான் அறிந்துகொள்ளக் காட்டுகின்ற ஒளியை யுடையவனே, போற்றி! உலக மாதாவாகிய உமா தேவியை ஒரு பாகத்தில் உடையவனே போற்றி! பதவி என்று சொல்லப்படுகின்ற சித்த விருப்பம் இல்லாதவனாகிய அடியேன் உனது நன்மை செய்யும் ஸ்ரீ பாத பக்தி என்கின்ற இன்பமே நியமமாக உதவி செய்து என்னை ஆளக்கடவாய்!" என்று அரி பிரம்மாதியர்கள் சந்தேகம் தீர விண்ணப்பித்தான். நான் நந்திதேவனை ஆசீர்வதித்து இருகைகளாலும் இறுகத் தழுவி, "நந்தி! உன் தேகத்தின் தூண்டுகையில் யாம் விருப்பங்கொண்டதாலேயே உன்னை எந்தக்காலமும் என் வாகன ஸ்தானத்தில் கொண்டேன். இந்தப் பெருமையை நான்கு வேதங்களும் சொல்கின்றன!" என்று நான் கூறி, பல சிவகணங்களும் மதிக்கத்தக்க தலைமைப்பதவியையும் சர்வஞ்ஞத்தையும் கொடுத்தேன்.

அப்போது அயன், அரி, இந்திரன், தேவர்கள் முதலானவர்கள், நந்திதேவனைத் துதித்து வணங்கினார்கள். பிறகு அவர்களை அவரவர் இருப்பிடம் சேரச் சொன்னேன். நானும் செழுமையான திருக்கயிலாயமலையை வந்தடைந்தேன். அதன்

பிறகு, நந்திதேவன் பெருந்தவஞ் செய்த ஸ்ரீ சைலத்தின் நிருதி மூலையானது தருமம் தழைத்தோங்குவதற்குரிய சுத்த ஸ்தலமாகவும் மோக்ஷ க்ஷேத்திரமாகவும் விளங்கி, நந்தி மண்டலம் என்ற பெயரையும் பெற்றது. இந்த நந்தி மண்டலத்திலிருப்போருக்கு நல்ல பதவியை நான் வழங்கி வந்தேன். நந்தியை வணங்கியவருக்கு மோக்ஷ சுகத்தையும் மக்கட் பேற்றையும், பக்தியையும் ஊக்கத்தையும் காரிய சித்தியையும் எல்லா வரங்களையும் அளித்து வருகிறேன்.

"உடுக்கை போன்ற இடையுடைய உமையே! இந்த நந்திதேவன் பழமையானவன்; என் வடிவமுடையவன். எனக்கு ஒப்பானவன்."

இவ்வாறு சிவபெருமான் கூறியதும், உமாதேவி அவரை வணங்கி மனம் மகிழ்ந்து, அந்த நந்திதேவனது உருவத்தை அன்புடன் பார்த்துக் களித்து விட்டு, சிவனுரை நோக்கி, "நாதா! நந்திகேசுரனுக்கும் தங்களுக்கும் பேதமில்லையென்ற வார்த்தை உண்மையாக இல்லாதிருக்குமானால், இவரது நல்லொழுக்கம், நியாயம், மோக்ஷ ஞானம், கலகமில்லாத மனம், அகங்காரமில்லாத புத்தி, திடமான பக்தி, நற்குணம், அன்பு, சிவநேசம் ஆகிய இவையெல்லாம் இவரைப்போல வேறு யாரிடத்தில் அமைந்திருக்கும்? பதினுன்கு உலகங்களில் எங்குமே ஏகமாய், பரவியிருக்கும் தங்களையே சுமக்கும் வலிமை யுள்ளவரும் தங்களுக்குச் சமானமானவரும் வேறு எவர் உண்டு? இதை இன்றல்லவோ இவ்விடத்தில் அடியாள் அறிந்தேன்" என்று சொன்னுள். சிவபெருமான், தம் அருகே இருந்த நாரதரை நோக்கி, "நந்திதேவரின் சிறப்பு இதுவாகும்!" என்ருர். அதைக் கேட்டதும் நந்திதேவர், கண்களில் பக்திப் பரவசத்தால் கண்ணீர் மல்க, அந்தி வானத்தை ஒத்த திருமேனியையுடைய சிவனுரை வணங்கி, *ஐம்புலன்களும் நான்கு கரணங்களும் உடலும் மெய்ச்சிலிர்ப்படைய நின்ருர். அப்போது சிவபெருமான், அன்பினுல் மகிழ்ந்து, "இது வேதம்; இது வீர சைவத்திற்குக் காரணம்; இது ஏனைய சமய வேறுபாடு. இது ஸத்பக்தி; இது சிவநாம மகிமை இது சிவநேசம்; இது பரத்தின் உண்மைப் பொருள், இவை சைவ மந்திரங்கள்; இது தர்மவிரதம், இது நியாயம், இது ஆதி; இது முடிவு" என்று எல்லாவற்றையும் விளக்கிக் கூறிவிட்டு, நந்திதேவனை நோக்கி, "நந்தி தேவனே! இந்த ஞானம் உலகம் முழுமையும் விளங்கும்படி இவற்றை அருளினம். நம் தலைவியான உமையாளுக்கும் சிவகணத் தலைவருக்கும் முன்னமே அனுக்கிரகித்த அறிவினுக்குத் தேர்ந்த

---

* ஐம்புலன்கள்; மெய், வாய், கண், மூக்கு, செவி, நான்கு கரணங்கள்; மனம், புத்தி, சித்தம், அகங்காரம்.

பேருணர்வை உனக்கும் கூறியருளினம். அந்தக் காலத்தில் நீ எம்மை நீங்காதவனுவாய்; யாம் நின்னை மறந்தேனும் நீங்கமாட்டோம். நந்திதேவா! உலகம் உய்ய, நீ இரண்டாவது சிவமாகப் பூமியில் அவதரிப்பாயாக'' என்று பரமசிவன் கட்டளையிட அவரை நந்திதேவன் தொழுது, "எல்லாவிடங்களிலும் நீரே இறைவன்; நீரே என் உயிர்! என் பக்தியும் நீரே ஆகுக!'' என்றான்.

அதற்குச் சிவபிரான், "புண்ணியவானே! நாம் பூமியில் உன் பொருட்டுக் குருவாகத் தோன்றித் திருவுளத்தின் கிருபை செய்வோம். உன் கரத்தில் இஷ்டலிங்கமாகப் பொருந்தியிருப்போம், ஜங்கம லிங்கமாகி உன்னிடத்தில் எப்போதும் சேர்ந்திருப்போம்! உடல், பொருள், ஆவி என்பவற்றை மதித்து நீ கொடுக்க, யாம் பெறுவோம். எப்பொழுதும் உன்னைவிட்டுப் பிரியமாட்டோம்!'' என்றார். இவ்வாறு, ஜகத்காரணரான சிவபிரான் அனுக்கிரகம் செய்ய, நந்திதேவர் அவரை வணங்கித் துதித்து எழுந்து, உலகிலுள்ள தர்க்கவாதஞ் செய்கிற இதர சமயத்தார்களை வெற்றிகொள்ளவும் வீர சைவர்கள் கடைத்தேறவும் உத்திரவு பெற்று, உலகில் அவதாரம் செய்யப் புறப்பட்டார்.

தேவர்களும் மண்ணுலகத்தாரும் வணங்கும் ஸ்ரீசைலத்தின் மேற்குத் திசையில், உலகம் உய்ய கயிலையிலிருந்து நீங்கிய நந்திதேவர், சிவபிரானது திருவருளால் சீரும் சிறப்புமுடைய கன்னட நாட்டில் அவதாரம் செய்ய விழைந்தார். இனி கன்னட நாட்டின் சிறப்பைக் கூறுவோம்.

# 2. நாட்டுச் சிறப்பும் வசவண்ணர் பிறப்பும்

பரமசிவனது வெண்ணிற ரிஷபவாகனமே பற்பல வடிவங்களாகி ஆகாயத்தில் அவ்வவ்விடங்களிலே வெளுத்துப் பரவியதைப்போல மேகங்கள் பரவியிருக்கும். நீலகண்டப் பெருமான் உண்ட நஞ்சானது பரந்து சென்று கறுத்தது போல மேகங்கள் கறுத்து அவனது சடையின் அழகைப்போல மின்னலிட்டு, அவனது திருக்கையின் உடுக்கையைப்போல் ஒலி செய்யும். அவை மலைமீதேறி, தேவர்கள் அமிர்தத்தைப் பொழிவதைப் போலப் பரவி அமுத மழையாகப் பொழியும். அந்த மழை பூமிமுழுதும் பெருக்கெடுத்து ஆறுகளாகவும் நதிகளாகவும் கன்னட தேசத்தில் பாயும்.

இவ்விதமாக மழைநீர் பாய்ந்ததும் கன்னட நாட்டு உழவர்கள் பயிர்த்தொழிலில் ஈடுபடுவார்கள். அவர்கள் ஏர்களில் எருமைக்கடாக்களைக் கட்டி உழுகிற ஒலியும், வாய்க்கால்களில் வரால், வாளை, சேல் முதலிய மீன்கள் துள்ளுகின்ற ஒலியும், மலர்களில் வட்டமிடும் வண்டுகளின் ரீங்காரமும், கரும்பாலை ஓட்டுவோரின் சப்தமும், கடல் ஓசைபோலிருக்கும்.

அங்கு, உழவர்கள் தம்மீது பாய்கின்ற வரால், கயல் முதலிய மீன்களைத் தள்ளுவதால் நீரைக்கட்டப் பொழுதில்லை என்பார்கள். சங்கீன்ற முத்துக்களை ஓய்வில்லாமல் எடுத்து நக்ஷத்திரக் குவியலைப்போல் முத்துக் குவியல்களாகக் குவிப்பார்கள்.

கரும்பை ஒடித்துப் பாய்கிற இரட்டைக்கயல்கள் சப்திக்க, முத்துக்கள் தம் உடல் முழுவதும் வீங்கச் சிதறின என்பார்கள். கரும்பை ஒரு கையிலும் தாமரை, நீலோற்பல மலர்களை மற்றொரு கையிலும் ஏந்திய கன்னட மன்னர்கள் மன்மதனைப்போல எங்கும் நிற்பார்கள். கரும்புகளிலிருந்து சொரிந்த முத்துக்கள் வாழைகளில் மறைந்தன என்பார்கள். வாழைகளின் இனிய பழங்களின் தேனும் மலர்களும் கரும்புகள் மீது பொழிந்தன என்பார்கள். வானளாவிய தென்னைகளில் முற்றிய தேங்காய்கள், அடர்ந்த பாக்கு மரங்களின் பிடர் விரிய விழ்ந்தன என்பார்கள். பலாப்பழங்கள் வெடித்துக் கீழே



விழுகிற தேனும் மாங்கனிகளின் தேனும் குளிர்ந்த மழைபோல் குதூகலமூட்டுகின் றன என்பார்கள். சோலைகளில் நடப்பவர் கள் சோலையின் நிழலையேக் கைக்குடை யாக விரும்பிச் சென்று தம் காலிலுள்ள சேற்றைத் தேனினால் கழுவிக்கொண்டு செல்வார்கள்.

அங்கு, பசுக்கள் கவ்வுகிற கமுகம் பாளை ஓசையும், சம்பா நெற்களிலிருந்து அரிசியுதிக்கின்ற ஒலியும், வண்டுகளின ஒலியும், கமுக மரங்கள் பழங்களை உதிர்க் கும் ஓசையும் இலைகள் வீசும் காற்றில் ஒலி செய்யும் முழக்கமும் திருவிழா ஒலிபோ லிருக்கும்!

கன்னட உழவர்களும் மன்னர்களும் இந்திரனை வாழ்த்தி, செந்நெற்கதிர்களை அறுத்து, அரிக்கட்டுகளை வரிசையாகவும் மேன்மையாகவும் சேர்த்து, வழக்கம்போல் சுமைகள் செய்து, அவற்றைச் சுமந்து சென்று குவித்து உயர்த்திய நெற்போர் கள் பொன்மலைகள் நிற்பதைப் போலிருக் கும்.

இவ்விதம் குவித்து உயர்த்திய நெற் போர்களை திருப்பி வைத்து, மேலே பத்தி யாய் வரிசைப்படுத்தும் உழவர்கள் எரு மைக்கடாக்களை நடத்துவதானது, பசி யாகிய இருட்டை ஒழிக்கும் தர்ம சூரியன் பொன்மலையை வலம் வருவதுபோல் தோற்றமளிக்கும்.

அவர்கள், வைக்கோலை அரிவாளினால் வளைத்து மலைகளைப்போலக் கூட்டிச் சேர்த் துயர்த்திய பிறகு, பதரை யொழிப்பார்கள். பிறகு அந்நெல்லில் அரசருக்கும் பங்கு கொடுத்து, மீதமானதை உலகம் உய்ய வாழ்கிற ஆசாரியர், தேவர், அதிதிகள், உறவினர் முதலானவர்களோடு பங்கு பெறுவார்கள்.

வேதாகம மார்க்கங்களிலிருந்து நீங்காத நான்கு வர்ணத் தாரும் இழிந்த குலத்தினரும் உயர, மாடங்களும் மாளிகை களும், வீடுகளும் மலைகளைப்போலவும் மேகங்கள் போலவும் அமைந்த ஊர்கள் எவ்விடத்தும் நிறைந்திருக்கும்!

கோயில்தோறும் திருவிழா அலங்காரமாக இருக்கும். தெருக்கள்தோறும் மாலைகளும், தோரணங்களுமாக விளங்கும்! திண்ணைகள்தோறும் ஒழுக்கத்தையுண்டாக்கும் வேதாகம ஆய்வுகள் நடைபெறும். வீடுகள் தோறும் மங்கையர் அம்மானையாடும் பாட்டொலிகள் முழங்கும். ஊர்கள்தோறும் சந்தனம், சண்பகம், ஆத்தி, மகிழ், மா, புன்னை, நார்த்தை, குரா, வில்வம் முதலிய மரங்களின் மணமும் மலர்ச்செடி கொடிகளின் இனிய மணமுமே எங்கும் நிறைந்து நிலவும்.

அங்கே, உண்மையில் பக்தியுள்ளவர்களும், சோம்பலற்றவர்களும், அருட் கூட்டத்தினரும், அழகான மேனியுடையவரும், கண்நிறையக் காணப்படுவார்கள். பஞ்சதருக்களைப் போன்ற கைகள் வாய்ந்தோர் எங்கணும் தவ முனிவர்களை உபசரிப்பார்களே தவிர எங்கும் பழிச்சொற்களைப் பொருந்த மாட்டார்கள். எங்கும் பாவ வழியில் பொருள்களைப் பெற மாட்டார்கள். பெருத்தகாதணியுடையவர்கள் எவ்விடத்திலும் நோயால் வருந்தமாட்டார்கள். எங்கும் கருதியவற்றையே முடிப்பார்கள்.

இந்த வகையான பெருஞ்சிறப்புடைய கன்னட தேசத்தில் சொல்வதற்கரிய பெருஞ் செல்வம் மிகுந்த அந்தணர் வாழும் பகுதியில் இங்குளாபுரி என்ற ஊர் ஒன்றுண்டு.

அந்த இங்குளாபுரியைச் சூழ்ந்த வயல்களில் உயர்வினுலும் இலையினுலுமேயன்றி வாழை இன்னதென்றும் செந்நெல் இன்னது என்றும் கரும்புத் தொகுதிகள் இவையென்றும் கமுகின் தொகுதிகள் இவையென்றும் பிரித்துச் சொல்ல இயலாதவண்ணம் செழுமை மிகுந்திருந்தது. கரும்பிலிருந்து சிந்திய முத்துக்கள் வாழையில் மறைந்து தோன்றுவது தீபவரிசை போல விளங்கின. அங்கு, எவ்விடத்தும் கவிஞர் பாடும் இடங்களும் ஆடவரும் மங்கையரும் ஆனந்தமாக இருக்கும் இடங்களும், கற்பக மரங்கள் நிறைந்த இடங்களுமே காணப்பட்டன. அங்குள்ள மக்கள், இனிய சொல்லுக்குக் கட்டுப்பட்டவராகவும் பெரியோர் வெறுத்தவற்றில் பிரவேசியாதவராகவும், மரும் ஜீவன்களைக் கொல்லாதவருமாக விளங்கினுர்கள். அங்கு, கற்பினையே ஆபரணமாகப் பூண்ட அழகு மங்கையரும் பாவச் செயல்களுக்கு உடன்படாதவரும் இருந்தார்கள்.

எங்கு பார்த்தாலும் வேதாகமங்களின் ஆரவாரமும், யாகஞ் செய்வதாலுண்டான ஆரவாரமும், அன்னத்தைப் பகிர்ந்தளிப்போரின் ஆரவாரமும், உண்டியின்பத்தைப் புகழ்வோரது ஆரவாரமும் கடல் ஓசையைப்போல முழங்கின.



இத்தகைய இங்குளாபுரியில் மாதிராசையர் என்று ஒருவர் இருந்தார். அவர் அங்கு வாழ்ந்துவந்த வேதியரில் சிறந்த வராயும் பெறுதற்கரிய அறநெறியில் வாழ்வோராகவும் சிவ

பிரானிடத்தில் பேரன்புகொண்டவராகவும், ஷட்கர்மங்களும் ஒழியாத குணமுடையவராகவும் தூயமனமுடையவராகவும் திகழ்ந்தார்.

இத்தகைய பெருமை வாய்ந்த மாதிராசையருக்கு, மாதாம்பை என்ற மனைவி இருந்தாள். அவள் உண்மையும் நேர்மையும் வாய்ந்தவளாகக் குலத்திலும் சிவபக்தியிலும் கற்பொழுக்கத்திலும் சிறந்து விளங்கினுள்.

அந்தத் தம்பதியருக்கு நெடுநாட்கள் பிள்ளைப்பேறு இல்லாமையால், அவர்கள் எத்தனையோ நோன்புகள் நோற்றுவந்தார்கள். ஆனுல் என்ன செய்தும் மக்கட்பேறு பெறுவதற்கு இயலவில்லை. எனவே மாதிராசையர், கல்வி கேள்விகளில் வல்லவர்களிடத்தில் இது பற்றி விசாரித்தார்.

அதற்கு சான்ருேர், ''நீங்கள் இதுவரை செய்த விரதங்கள் அனைத்திலும், உங்களுக்கு பயனைத்தரப்போவது நந்தி விரதமேயாகும்'' என்று ஆலோசித்துக் கூறினுர்கள். ஆகவே மாதாம்பிகை நந்தியெம்பெருமானை வணங்கித் துதித்து, 'நந்தி விரதம்' இருக்க முனைந்தாள். சோமவாரம் முதல் எண்ணப்பட்ட ஒன்பது தினங்கள் விரதம் அனுஷ்டித்து, நந்தியெம்பெருமானுக்கு குற்றமற்ற திருமஞ்சன அபிஷேகம் செய்து, பரிசுத்தமான சந்தனம், பூமாலை, ஆடைகள், முத்துமாலை ஆகியவற்றைத் தாமே நேர்நின்று அணிவித்தாள். பொன்ஞற் செய்த பட்டத்தை நந்தியின் நெற்றியில் கட்டித் தொங்கலான கழுத்தில் சதங்கையும் கிண்கிணியையும் பூட்டி, இரண்டு திருவடிகளிலும் சிலம்புகளை அணிவித்து, வாசனை மிக்க தூப தீபங்களை முறையாகக் காட்டி, தூய்மையான ஐவகைத் திருவமுது படைத்து, எண்ணற்ற சிவபக்தர்கள் மகிழப் பூஜித்து நிவேதனம் செய்தாள். நந்திதேவரை மாதாம்பிகை, பக்திப் பரவசத்தோடு துதித்து ''சிவபெருமானது வ்ருஷபமே! பசுபதி! என் மனம் மகிழும்படி உம்மைப்போன்ற மகன் ஒருவனை எனக்கு தந்தருள்வீரானுல் அந்தக் குழந்தைக்கு உமது பெயரையே சூட்டுவேன்'' என்று வேண்டிக்கொண்டு, வணங்கினுள். அப்போது நந்திதேவர், தமது வலப்பக்கத்துக் கொம்பிலிருந்த மலர்மாலையை உதிர்த்து அருளிந்தார். அதைப் பெற்ற 'மாதாம்பிகையின் மனம் மகிழ்ந்தது. அந்த மலர்மாலையைப் பக்தியுடன் தன் தலையில் தரித்து, தன் எண்ணம் பலித்தது என்று நம்பி, நந்திதேவரை வணங்கி, வலம் வந்து துதித்து, மின்னற் கொடியை நிகர்த்த மங்கையர் புடை சூழ்ந்துவர, மாதாம்பிகை, நல்ல சகுனத்தில் தன் மாளிகைக்குச் சென்ருள்.

பரமசிவனின் பணிவிடையை சிரமேல் தாங்கிய நந்திதேவர், மாதாம்பிகையின் அழகிய திரு வயிற்றினுள்ளே, அவ

தாரஞ் செய்து தோன்றி, சிவபெருமானது மகத்தான காரியத்தை முடிப்போம் என்ற ஞானத்துடன் கருவடிவமாக அடைந்தருளினர்.

நந்திதேவர், கர்ப்பத்தையடைந்ததால், மாதாம்பிகை நீங்கினுள். வெண்மையான நந்திதேவர் எழுந்தருளியதால் அவளது உடல் நிறமும் வெளுத்தது. திடமான சிவயோகியார் வீற்றிருந்ததால் தூக்கத்தையே அடைந்திருந்தாள்.

தூய்மையாளர் வயிற்றினுள்ளே எழுந்தருளியதால் மாதாம்பிகை உண்ணும் உணவை ஏற்காமல் உமிழ்ந்தாள். அவளது ஸ்தனக் கண்கள் கறுத்தன. இவ்விதமாகப் பத்து மாதங்கள் கடந்தன. மாதாம்பிகையின் திருவயிற்றில் இருந்த நந்திதேவர், சிவபெருமானை இடையருமல் தியானிப்பதற்குக் குறைவில்லாத சிவசமாதி யோகத்தின் ஸ்தலம் இதுதான் என்று சகலசித்திகளையும் தரத்தக்க பத்மாசனத்தில் அமர்ந்து, அஜபா மந்திரத்தால் பூதசுத்தி செய்ய முயன்று, முன்னர் சிவபெருமான் அருள் செய்த யோக சுத்தியினுல் நாடித்ரய சுத்திகளைத் தக்க முறையில் செய்து, மூவாக்கினியின்மீது பொருந்தி, சுகமான ஸுஷும்நா நாடியின் பாசக்ரந்திகளை அழித்தார். * நான்கிதழ்த் தாமரையில் நின்று, நாடுதற்கு அரிய முக்கோணத்தையடைந்து, சுஷும்நா சர்ப்பத்தை எழுப்பி, ஆறிதழ்த் தாமரையிற் சென்று, அதன் மேலுள்ள பதினுறிதழ்த்தாமரை

---

* தேகத்தில் குதம், குய்யம், நாபி, இதயம், கண்டம், புருவமய்யம் என்று ஆறு ஸ்தானங்கள் உள்ளன. அவற்றில் முறையே நான்கிதழ், ஆறிதழ், பத்திதழ், பன்னிரண்டிதழ், பதினுறிதழ், இரண்டு இதழ் என்று ஆறுவகையான கமலங்கள் உண்டு. அவை, சதுரஸ்ரம், அர்த்த சந்திரன், த்ரிகோணம், ஷட்கோணம், வ்ருத்தம், சித்ரம் என்ற ஆறு வடிவங்களையுடையவை. நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம், ஆத்மா என்று ஆறு பூதங்கள் உள்ளதும் பொன், வெள்ளை, இரத்தம், நீலம், ஸ்படிகம், மாணிக்கம் என்று ஆறு நிறங்கள் உள்ளதும் வ முதல் ஸ வரையில் ப முதல் ல வரையில் ட முதல் ப வரையில் க முதல் ட வரையில், அ முதல் அ: வரை உள்ள அக்ஷரங்களும் அம், க்ஷம் என்ற எழுத்துக்கள் உள்ளதும், ய, வா, சி, ம, ந, ஓம் என்ற ஆறு எழுத்துக்கள் உள்ளதும், ஆதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்ற ஆறு சக்கரங்களுள்ளதும் அக்ஷரங்களில் முறையே, ஆசாரலிங்கம், குருலிங்கம், சிவலிங்கம், ஜங்கமலிங்கம், பிரஸாதலிங்கம், மகாலிங்கம் என்ற ஆறு லிங்கங்களும் மூர்த்திகரித்துள்ளதாக தியானித்தல் சிவயோகமாகும்.

யில் மிகப் பொருந்தி, தெவிட்டாத இன்ப குணமுள்ள நலத்தைப்பார்த்து, ஒன்று, இரண்டு, இதழாயுள்ள பிரகாசத்தைத் தரும் கமலங்களையடைந்து, உண்மையறிவாகிய தேஜோமயத்தை நேராகத் தரிசித்து, மனம் நிறையப் பதுமங்கள் ஆறையும் தரிசித்து, மீட்டும் மேலே பார்க்கச் செய்து, நாண் பூட்டிய வில்போல, மேலேயுள்ள வீணைதண்டத்தின் நாதத்தையடைந்து மனம் லயித்து, சுகாநுபவம் பிரகாசிக்கும் மகிழ்ச்சியினால், *சிகாஸ்தானத்தில் ஆயிர இதழ்களுள்ள கமலத்தில் நின்று, நிஷ்கள லிங்கத்தைத் தரிசித்து மெய்யான சுவையுள்ள அமிர்ததாரை விழா நிற்க, மேன்மேலும் இடையருதுண்டு உயிர் முழுவதும் அமிர்த கிரணத்தையுடைய நிலவைப்போன்ற பேரொளியாகி, தீபம் போன்று தாயாரின் திருவயிற்றிலே பரமானந்த சிவயோக சமாதியுறும் பொருட்டு நந்திதேவர் அறிவுடையவராக வீற்றிருந்து, மூன்றாண்டுகள் மகிழ்ந்திருந்தார்.

இவ்விதமாக மூன்றாண்டுகள் வீற்றிருந்ததால் மாதாம்பிகை சோர்வுற்றாள். கர்ப்பச்சுமையைத் தாங்கமாட்டாமல் புலம்பலானாள். எதுவும் தோன்றாமல், 'எல்லாம் சிவன் செயல்!' என்றெண்ணி, சிவாலயம் சென்று, நந்திதேவரை வணங்கி, "ஐயனே! அநேக விரதங்களை அனுஷ்டித்தும் கைகூடுவது ஒன்றுமில்லாமல், உமது திருவடிகளையே தியானித்து அடைந்த இந்தக் கர்ப்பத்தைச் சுமந்து, நாட்களாகின்றன. மூன்றாண்டுகளாகக் கர்ப்பத்தைச் சுமக்கமாட்டாமல் சுமந்து வருகிறேன். நீரே என்னைக் காத்தருள்வீர்" என்று வேண்டுதல் செய்துவிட்டு, நடை தள்ளாடத் தன் திருமாளிகையையடைந்தாள். அன்று இரவு பஞ்சணையில் படுத்துத் தூங்கும்போது, அவளது கனவில், சிவபெருமான் பரிசுத்தமான ஜங்கம மூர்த்திபோலக் காட்சியளித்து, "உன் உடம்பின் கஷ்டமும் துன்பமும் நீங்கி நீ மனம் மகிழ, நானே

---

* உடலின் மஸ்தக ஸ்தானத்தில் ப்ரபாஜ்யோதிர் வர்ணத்தின் ஆயிரம் இதழ்த்தாமரையின் அகாரபீஜத்தின் த்யானங்கத்தின் ப்ரஹ்ம மண்டபத்தில் நிஷ்களலிங்கம் ஆனந்தமாக இருக்கும். தேகத்தின் சிகாஸ்தானத்தில் மஹாஜோதி வர்ணத்தின் மூன்றிதழ்த் தாமரையின் உகாரபீஜத்தின் போகாங்கத்தின் சிகாமண்டபத்தில் சூனியலிங்கம் விப்ராந்திமயமாக இருக்கும். தேகத்தின் சிகாஸ்தானத்தில் அகணித ஜ்யோதிர் வர்ணத்தில் ஓரிதழ்த் தாமரையின் மகார பீஜத்தில் யோகாங்கத்தின் பச்சிம மண்டபத்தில் நிரஞ்சனலிங்கம் நிரந்த நீராமயமாக இருக்கும். மெய்ஞ்ஞான ஜோதி நிலை என்பது மஹாஸ்தலத்திலுள்ள சூனிய நிரஞ்சனலிங்கங்களேயாம்.

யத்தினம் உனக்கு ஒரு மைந்தன் பிறப்பான். அவனுக்கு 'வசவன்' என்று பெயர் சூட்டுவாயாக; அவனால் இவ்வுலகத்தின் இருள் முழுதும் நீங்கிப்போம்!'' என்று கூறி மறைந்தார்.

தூக்கத்திலிருந்து கண்விழித்த மாதாம்பிகை, தன் சுற்றத்தாருக்கெல்லாம் அந்த நற்செய்தியை மகிழ்ச்சியுடன் அறிவித்தாள். பிறகு, உண்மை நிலையையுடைய ஸ்ரீநந்திகேசுரர், தம் பரிசுத்தமான மனத்தில் ஒளியுருவாகிய சிவபெருமான் திருக்கரம் தட்டி எழுப்பியதைப் போல சிவயோக சமாதியினின்றும் விழித்து, சிவனாரின் கட்டளையை நினைத்து, சிவபெருமானின் திருவடிகளை நாடித் தன் இரு கைகளையும் குவித்து, மாதாம்பிகையாரின் திருவயிற்றினின்றும் கீழ்நோக்கி, சிரசு உதயமாகும்போது, நந்திதேவரின் இதயகமலத்தில் சூக்குமரூபியாக இருந்த சிவபெருமானே, சிறந்த ஆசாரியாராக, உறவினருக்கும் தாய்க்கும் தெரியாதவாறு எதிரே தோன்றி, நந்திதேவர் சித்தியடைதற்கு ஏதுவாக அவரதுத் திருமேனியில் சிவலிங்கத்தைத் தாரணம் செய்தருளினர். பிறகு, பிறந்த குழந்தையின் மேனியில் சிவலிங்கதாரணம் செய்யப்பெற்றிருப்பதைக் கண்ட மாதாம்பையும் மற்றவர்களும் மிகவும் வியப்படைந்தார்கள்.

அப்போது, ஆசாரிய திருக்கோலத்துக்குரிய ஜடாபாரமும் திருமுடியின்மீது, நடுவே தாரணம் செய்த அழகான சிவலிங்கமும், திரிபுண்டரமணிந்த திருநெற்றியும், உருத்திராக்ஷ மாலைகள் அணிந்த மார்பும், சிவந்த தாம்பிரக் குண்டலங்களையுடையத் திருச்செவிகளும் உயர்ந்த திருப்புயத்தின்மீது யோகபட்டையும் திருக்கரத்தில் பிடித்த யோக தண்டமும் குடையும், திருமேனி முழுவதும் ரத்ன கம்பளியினால் செய்த நெடுஞ்சொக்காயும் புன்னகையும் நெடிய தாடியுமாக, குருமூர்த்தங் கொண்டு, முன்பு மறைந்து நின்று லிங்கதாரணம் செய்த சிவபெருமானாகிய ஜங்கம மூர்த்தியே, மீண்டும் யாவரும் காணத் தோற்றமளித்தார். அவரைத் தரிசித்த மாதாம்பையும் மற்றவரும் வணங்கி நின்றார்கள். அப்போது அந்த ஜங்கம மூர்த்தி மாதாம்பையை நோக்கி, ''பிறை போன்ற நெற்றியை உடையவளே! என் வாசஸ்தானம் *கூடலசங்கமம் என்ற க்ஷேத்திரமாகும். அதில் நாம் நெடுநாள் தங்கியிருப்போம். எம் பெயர் கூடலசங்கமேசன். நீ நெடுநாள் செய்த தவத்தாலும் பூவுலகில் சிவசமயம் ஓங்கக் கட்டளையிடும் பணிவிடையாலும், உன்னிடம் இந்தப் பிள்ளை தோன்றினான். ஆகையால், இவன்

* கூடலசங்கமம்: இந்தப் புனிதத்தலம் பிஜாப்பூர் மாவட்டத்தில் பாகவாடி தாலுக்காவைச் சேர்ந்த கப்படி என்ற ஊரில் உள்ளது.

மீது யாம் கொண்ட அன்பினலேயே, சிவலிங்க தாரணத்தைச் செய்தோம். எனவே, சிவலிங்கார்ப்பிதமான பால் முதலிய உணவுகளைத் தவிர, நீ யாது தரினும் அதற்குத்தடை-எமது ஆணை!'' என்று கட்டளையிட்டருளி, அங்கிருந்து மின்னலென மறைந்துவிட்டார். இவ்விதமாக அருளியது ஜங்கம மூர்த்தி யான சிவபெருமானே என்று தீர்மானித்து யாவரும் பிரமித் தார்கள். பிறகு தெளிவடைந்து, அவர் தோன்றியத் திசையை வணங்கித் தொழுதார்கள்.

ஆயிரங்கோடிச் சூரியர்கள் ஒருங்கே உதித்தாற்போல, பிறந்த குழந்தையின் திருவுருவத்தால் அஞ்ஞான இருளெல் லாம் ஒழிந்தன. குழந்தையின் தந்தையான மாதிராசையர் மிகவும் மகிழ்ந்து, குழந்தையை ஆசையுடன் பார்த்து, சிவபக்தர் பலரையும் வெகுநேரம் தங்கவைத்து, திருவெண் ணீற்றையும் கற்பூரமணம் கமழும் தாம்பூலத்தையும் அவர்கள் முன்பு வைத்து உபசரித்தார். சிவனடியார்களின் திவ்வியபாத தோகத்தால் புதல்வனின் திருமேனியை நீராட்டி, அவர்கள் அளித்த விபூதியைத் தரிப்பித்தார். வாத்தியங்கள் முழங்க யாவரும் துதிக்க, அந்தக் குழந்தைக்கு சிவபெருமான் முன்பு கட்டளையிட்ட வண்ணம், ஸ்ரீ வசுவேசுரன் என்ற பெயர் சூட்டி அழைத்து, புதியதான நவரத்தின கசிதமான தொட்டி லில் உள்ள படுக்கையில் படுக்கவைத்து மகிழ்ந்தார்.

குழந்தை வசவண்ணரோ, எதிரே இருக்கும் தீபத்தை நோக்கி நகைத்தும் 'சிவபெருமானது நிவேதனமன்று நான் முலையுண்ணேன்' என்று கையசைத்தும் பின்னர் முலைப் பாலுண்டும் தம் இரு கைகளை உதறி ஆரவாரித்தும் மகிழ்ந்திருந்தார்.

பிறகு சிவபக்தரை வணங்குபவரைப்போலக் குழந்தை யார் குப்புற விழுந்தும், பத்மாசனத்தில் இருப்பவர்போல அசைவற்று உட்கார்ந்தும் நந்திதேவரே நான் என்பதை அறிவிப்பவர்போல முற்றத்தில் தவழ்ந்தும், சாசுவதமாகிய வீர சைவ ஆசாரத்தை நிலைபெறச் செய்பவரைப் போல எழுந்து நின்றும், சன்மார்க்கம் இதுதான் என்று இங்குமங்கும் திரிந்தும், மழலை பேசியும் விளையாடலானார்.

இவ்விதமாகத் தாய் தந்தையர் மனம் மகிழப் பாலராகி, அந்தப் பருவம் கழிந்த பிறகு, நான்கு வேதங்கள், சிவாக மங்கள், புராணங்கள், வேதாங்கங்கள், கலைகள், சாஸ்திரங்கள் ஆகியவற்றைப் பிழையறக் கற்றுத் தேர்ந்து, சிவபிரான் போலத் தமக்குத் தாமேயறியும் கருத்துடையவராகி, வசுவேசர் எட்டு வயதை அடைந்தார். அப்போது அவரது தந்தையார், வசுவேசருக்கு, பிராமண குலத்திற்கு ஏற்ற வகை யில் உபநயனஞ் செய்வதற்கான சுபதினம் ஒன்றை ஏற்படுத்த



முயன்ருர். அந்தச் சமயத்தில், மெய்யறிவுடைய வசுவேசர், அந்த உபநயனத்தைத் திரஸ்காரம் செய்வராகி, சிவபெருமாஞகிய என் தேசிகன், பரிசுத்தமாகிய இஷ்ட, பிராண, பாவ லிங்கங்கள் என்ற பூணூலை நான் பிறக்கும் போதே எனக்குத் தந்தருளிஞர். எனவே, எனக்கு யக்ஞேப வீதம் என்ற சொல்லைக் கேட்கவே விருப்பமில்லை. இந்தச் சொல்லை வழுவ விட்டுவிடும். மனத்தில் கோபங் கொள்ளாதீர். சிவபிரானை அர்ச்சனை செய்தும் நீ கொண்டிருப்பதாகிய சாதியே பெரிது என்ற மருட்சி யுண்டாவதற்கு காரணம் யாது? சத்குரு புத்திரரான பிராமணன், குற்றம் பொருந்திய கர்மபந்தத்தில் சேர்தல் குற்றமாகும். ஸ்ரீ குருபாத பூஜையை விடச் சிறந்தது எது? ஸ்ரீ பஞ்சாக்ஷரமே எல்லா மந்திரங்களிலும் உயர்ந்தது. அதைப் படித்தும் வேறு தேவர்கள் பலருடைய மந்திரங்களைக் கற்பதும் குற்றமல்லவா! இருவினைக் கயிறுகளை அநேக துண்டுகளாக வெட்டியவர், குலம் என்னும் வளவான பந்தமாகிய சமுத்திரத்தில் மூழ்கி மருட்சியடைதலும் மாறுதலடையாததுங் குற்றமே. சிவபெருமானது திருமேனியில் தரித்த விபூதி உருத்திராக்ஷங்களைத் தம் உடம்பு நிறைய அணிந்தும் சிவஸ்வரூபத்தைப் பிரத்யக்ஷமாய்

அறிந்தவர்கள் சர்ம முத்திரைகளை அணிவதும் குற்றமே! குலம் இல்லாதவரும் பிறவியில்லாதவருமான சிவபெருமானது திருவடிகளுக்குப் பக்தி செய்யும் சிவசரணர்களுக்கு உலகத்தில் குலமில்லை என்ற ஆகம வாக்கியங்களை அறிந்தும், உமது பெரிய குலத்துக்குரிய பலவகைப்பட்ட கர்மங்களையுடைய முப்புரி நூலின் பருத்துப் பஞ்சின் செய்தியை நீர் எனக்குச் சொல்லவேண்டாம். இப்படிச் சொல்வது மும்மல சம்பந்தமும் ஒழியாது பிறவிக்குக் காரணமுமாகும்!'' என்று வசவேசர் மறுத்துச் சொன்னார்.

அதைக் கேட்ட மாதிராசையர், தம் குமாரனை நோக்கி, "மகனே, தர்க்கம் செய்யாமல் கேள். அந்தணர்க்காகிற வேதமானது, கர்ப்ப ஸம்ஸ்காரம் முதலிய பதினாறு வகைக் கர்மங்களை விதித்துள்ளது. அத்தகைய நமது கர்மங்களில் ஒன்றையும் நீ செய்யாது விட்டுவிட்டால், நமது பெரிய ஜாதியானது அழிந்துவிடும். இந்தப் பதினாறு கர்மங்களில் ஒன்றும் வீணானதல்ல. இந்தக் கர்மத்துக்கு ருத்திரன் நேத்திரம் போன்றதாகும். உபநயனார்ச்சனங்களுக்கு நந்தியெம்பெருமானையும் பிரணவத்தையும் முக்கியமாகக் கூறும் அழகிய தெய்வம் குற்றமற்ற சிறந்த 'பர்க்கன்' என்றும் வேதம் கூறும். உபநயன காலத்தில் கைப்பற்றும் பிக்ஷாபாத்திரமே சிவபிரான் கரத்தில் ஏந்திய பிரமனது பெரிய கபாலமாகும். பூண்ட உபவீதமே( பூணூலே) விஷ சர்ப்பங்களாகும். கையில் தாங்கிய பலாசதண்டமே, விஷ்ணுவினுடைய முதுகெலும்புத் தண்டாகும். முடிக்கப்பட்ட ஐங்குடுமியே ஜடாபாரமாகும். மேனியிற் பொருந்தத் தடவிய கோபீ சந்தனமே திருவெண்ணீருகும். கிருஷ்ணாஜிநமே அழகிய யானைத் தோலாகும்! திரிபுராந்தகனாகிய சிவபெருமான், பிக்ஷையேற்க வெளிப்பட்ட காலத்தில் பூண்ட மேன்மை பொருந்திய கோலத்தை முழுமையாகப் பூணுவிட்டால் அந்தணன் ஆகமாட்டான். ஆகையால், சைவ மார்க்கத்தையுடைய பக்தர்க்கு இந்த வேதியக் கோலம் விரோதமானதல்ல; அழகேயாகும்! புதல்வா! நீ பூணூலை ஏற்றால், யாவரும் துதித்தற்குரிய நமது பெரிய குலத்திற்கு உபகாரமாகும். வசவனே! வாக்சாதுரியமாக எதையும் பேசவேண்டாம். என் வார்த்தைக்கு இணங்குவதே நற்செயலாகும். என் வார்த்தையைத் தள்ளி விடுவது நல்லதல்ல. ஆசாரங்களும் பிராமணங்களும் நிறைந்து

---

* பதினாறு கர்மங்கள் ஷோடஸ கர்மம். அவை கர்ப்பாதானம், பும்ஸவநம் ஸீமந்தோந்நாயநம், ஜாதகர்மம், நாமகரணம், அன்னப் பிராஸனம், சௌளனம், உபநயநம், வேதவிரதம், கௌதாநிகம், ஸ்நாதகம், விவாஹம், ஸ்பார்த்தாக்னிஹோத்ரம், ஔர்த்வதேகிகம், விசுத்தி, சம்ஸ்காரம்.

திசைகளையெல்லாம் கவர்ந்த நமது குலத்துக்குரிய கர்மங்கள் யாவற்றையும் செய்து ஜீவித்து, இவ்வுலகத்தில் சலனமில்லாமல் வேதியர்களில் உயர்ந்தோனாக விளங்குவதைவிட்டு விட்டு நீ ஏன் ஏதேதோ பேசுகிறாய்? மண்ணுலகில் ஒருவனுக்கு நல்ல மகன் பிறந்தால், அவன் பிறந்த குலம் உயரும். அப்படியில்லாமல் குலநாசகன் பிறந்தால், அவன் பிறந்த குலமும் அழியும். நீயோ, குலத்தைக்கெடுக்கவந்த கோடரியாகி விட்டாய். பாபவிமோசனராகிய வேதியச்சாதிக்கு உன்னைப் புறம்பு என்று வேதியர் உன்னை வெறுத்து ஒதுக்கிவிடுவார்கள். நாங்களோ, பேரின்பம் பொருந்திய மோட்சமானது உன்னால் எங்களுக்கு உண்டாகும் என்று நிச்சயித்து மகிழ்ந்திருந்தோம். நீயோ, பயனற்ற குழந்தையாக எங்கள் வயிற்றில் பிறந்தாய். நீ, நன்மை செய்யாமல் தீமையைச் செய்வாயானால் நமது ஜாதியே அழிந்துவிடும். துதிக்கத்தக்க நம் ஜாதிக்குத் தக்கது ஒழுக்கம். அந்த ஒழுக்கத்துக்குத் தக்கது சிவபக்தி. இவை இரண்டும் இம்மை மறுமைகளில் இன்பம் தருபவை. இவை இரண்டும் மகனே துக்கங்களைப் போக்க வல்லவை. இதனால் பிதுர்களுக்கும் தேவர்களுக்கும் மகிழ்ச்சியுண்டாகும். வசுவேசா! சன்மார்க்கத்துக்குரிய உபசார வார்த்தைகளை சொன்னேன். இவை உனக்குச் சம்மதம் அல்லவென்றால், நீ உன் விருப்பம் போல நடக்கலாம். உன்னோடு வழக்காட இந்த உலகில் யாரால்தான் முடியும்? நான் இனியொன்றும் சொல்வதற்கில்லை!'' என்றார் மாதிராசையர்.

வசுவேசரோ, தம் தந்தையை நோக்கி, "பிரம்ம மார்க்கமும் சிவபக்தி மார்க்கமும் வெவ்வேறு. இவ்விரண்டையும் கலந்து பிதற்றுகிறீர்கள்! தேவதைகள் வேறு, மந்திரங்கள் வேறு, வேடமும் வேறு! தேசிகனும் வேறு, ஞானமும் வேறு! ஆயினும் அக்னியே வதனமாகவும் சிரசே பிரம்மாவாகவும் ஆதிருத்திரனே சிரசிலுள்ள சிகையாகவும், தாமரை மலர் போன்ற சிவந்த கண்களையுடைய மகாவிஷ்ணுவே ஹ்ருதயமாகவும் நிலையுற்ற பிராணனே தசவாயுக்களாகியும், தவனமே நிறமாகவும் பூமியே யோனியாகவும் தியானித்து நீங்கள் ஜபிக்கும் காயத்திரி மகாமந்திரத்தையும் நான் சொல்லுகிறேன் கேளுங்கள்...!

"இந்தக் காயத்ரி மகாமந்திரமாவது இருபத்து நான்கு எழுத்துக்களோடு, ஐந்து சிரசுகளையுடையவனவாகி, எட்டெட்டு எழுத்துக்களாக வருகின்ற மூன்று அடிகளையுடையனவாகி, ஆறு வயிறுகளைக் கொண்டதாக நீங்கள் ஆஸ்ரயிக்கும் சாஸ்திரம், தெய்வம் ஒன்றேயென்று நிச்சயித்துச் சொல்லாது. மேலும் கர்மமார்க்கமாகிற உங்களுடைய ஸாங்க்யாயன மஹரிஷி கோத்திரத்துக்குச் சமானமானதோர் கோத்திரத்தின் வரலாற்றை நான் சொல்கிறேன் கேளுங்கள்.

"காயத்ரி மகாமந்திரத்துக்கு * உருவங்களோ அநேகம். தேசிகனே பல கர்மங்களையுடைய†ஜட ஆன்மாவான மனிதன். சொல்லுதற்குரிய மந்திரமோ, முன் சொன்ன காயத்ரீ மஹா மந்திரமாம். நிலைபெற்ற கர்ம சம்பந்த மார்க்கத்தையுடைய வனல்லாத எம் சிவபெருமானைத் தேசிகனாக, மனம், வாக்கு, காயம் ஆகியவற்றிலிருந்து எக்காலத்துமே விட்டு நீங்காத வீரசைவ நுட்பத்தினை நான் சொல்கிறேன்.

---

[* உருவங்கள் அநேகம் என்றது : காயத்ரீ, வைஷ்ணவி, சாவித்திரி.

† ஜட ஆன்மா : காயத்திரி மஹா மந்திரத்துக்குரிய ரிஷிகள் எழுவர் என்று சில சாஸ்திரங்கள் கூறுகின்றன. அத்திரி, ஆங்கிரசு, கௌதமர், ஜமதக்கினி, பரத்துவாசர், வசிஷ்டன், விசுவாமித்திரன் அன்றியும் அகஸ்தியன், ஆங்கிரசன், கௌதமன் காசியபன், புலஸ்தியன், மார்க்கண்டன், வசிஷ்டன். அன்றியும்விசுவாமித்திரன், வாமதேவன், அத்திரி, பரத்துவாசன், வசிட்டன், பிருகு, உபமன்யு. அன்றியும் அத்திரி, பிருகு, விசுவாமித்திரன் வசிட்டன், கௌதமன், காசியபன், ஆங்கிரசன் என்பவர் பின்வரும் காயத்திரி மந்திரங்களைக் கவனிக்கவும்.

# ஸந்தியா வந்தனம்

## ருக்வேத வாக்கியம்

## காயத்ரீ மஹா மந்திரம்

ஓம் பூ: ஓம் புவ: ஓம் ஸ்வ: ஓம் மஹ: ஓம் ஜந:
ஓம் தப: ஓம் ஸத்யம் ||
ஓம் தத்ஸவிதுர்வரேண்யம் பர்கோ தேவஸ்யதீமஹி |
தியோயா நः ப்ரசோதயாத் ||

### இதன பொருள்

"எவன் எமது புத்தியில் பிரவேசிக்கின்றானோ, அத்தகைய பிரேரகனான பரமாத்மாவின் உயர்வாகி விளங்குகின்ற

ஜோதியை தியானிக்கின்றோம். (ஓம் பூமி ஆகாய சுவர்க்கங்களே! வணங்குவதற்குரிய பிரகாசமுடைய சூரியனை வணங்குகிறோம். எமது புத்தி ஒளிர்வதாகுக :!''

## காயத்ரீ ஸ்வரூபம்

காயதரயா: காயத்ரீ சந்தோ விஸ்வாமஜ ர்ருஷி: ஸவிதா
தேவதா,
அக்நிர்முகம் பிரஹ்மாஸுர: விஷ்ணுர் ஹ்ருதயம்:
ருத்ராப்ஸிகா
ப்ருத்பியோநி: ப்ராணுபாநவ்யா நோதாநஸமாணு,
ஸப்ராணஸ்வதேவர்ணே, ஸாங்க்யாயந கோத்ராகாயத்ரி
சதுர்விம்ஶத்யக்ஷரா த்ரிபதா ஷட்குக்ஷி: பஞ்ச ஸீர்ஷோ
பநயந விநியோக: ஓம் பூ:.........பூர்வஸ்வரோம்.

### இதன் பொருள்

காயத்ரீ என்பதற்குக் காயத்ரீ என்பதே சந்தஸாகும். விஸ்வாமித்திரரே ரிஷியாவார்-சூரியனே தெய்வம். அக்னியே முகம். பிரஹ்மாவே சிரம்; விஷ்ணுவே ஹ்ருதயம், ருத்திரனே சிகை. பூமியே யோநி: பிராணனே, பிராணன், அபானன். வியாநனன், உதானன், சமானன் என்பவை. உபப்ராணனே தேவதத்தன், உர்மன், க்ருகரன், தனஞ்ஜயன், நாகன், என்பவை வெண்மை நிறமுள்ளதும் ஸாங்க்யாயன மஹரிஷியோடு கிளையான கோத்ரமுடையதும் இருபத்து நான்கு அக்ஷரங்களையுடையதும் மூன்று அடிகளையுடையதும், ஆறு வயிறுகளையுடையதும், ஐந்து சிரங்களை உடையதுமான, இத்தகைய காய்த்ரி மஹாமந்திரத்திற்கு உபநயனத்தில் விநியோகம்.

## ருக்வேதி ப்ரஹ்ம கர்ம வாக்யம்

## காயத்ரீ ஸ்வரூபம்

ஓம் ஸ்வேதோவர்ண: அக்நிமுகம் ப்ரஹ்மாஸிர: விஷ்ணுர்
ருத்ரோலலாடம் ப்ருத்விகுக்ஷி: [ஹ்ருதயம்,
த்ரைலோக்யம் சரணு: ஸாங்க்யாயந கோத்ரம்;
த்ரிபதா காயத்ரீ ||
மமாஶேஷ பாபக்ஷயார்த்தம் காயத்ரீஜபமஹம் கரிஷ்யே!

### இதன் பொருள்

வெள்ளை நிறம், அக்னி முகம், ப்ரஹ்ம, சிரசு, விஷ்ணு ஹ்ருதயம்; ருத்ரன் நெற்றி, பூமிவயிறு, திரிலோகங்கள் பாதங்

களாகவுள்ளதும் ஸாங்க்யாயந கோத்ரமும் மூன்றுபாதமும் உள்ளதுமான காயத்ரீ| என்னுடைய பாவங்கள் நாசமாகும் பொருட்டு காயத்ரீ ஜபம் செய்கிறேன்.

## ப்ராதஸ் ஸந்த்யா—காயத்ரீ

பாலாம் பாலாதித்ய மண்டல மத்யஸ்தாம் ரக்தவர்ணாம்
ரக்தாம் பராநுலேபந
ஸ்ரகாபரணாம் சதுர்வக்த்ராம் தண்டகமண்டல்வக்ஷ,
ஸூத்ராபயாங்க சதுர்புஜாம் ஹம்ஸாஸநாரூடாம்,
ப்ரஹ்மதைவத்யாம்
ருக்வேத முதா ஹரந்தீம் பூர்லோகாதிஷ்டாத்ரீம்,
காயத்ரீம்
நாம தேவதாம் த்யாத்வா|| அஷ்டோத்தர
ஸதவார மஷ்டா
விம்ஸதி வாரம்வா தஸவாரம்வா காயத்ரீம் ஜபித்வா||

## இதன் பொருள்

பால்யமுடையவளும் இளஞ்சூரிய மண்டல மய்யத்திலுள்ளவளும் சிவந்த நிறமுடையவளும், சிவந்த பட்டுப் புடவையும், சிவந்த சந்தனமும், சிவந்த மலரும், சிவந்த ஆபரணமும் அணிந்தவளும் நான்கு முகமுள்ளவளும் தண்டம், கமண்டலம், ஜபமாலை, அபயம் ஆகிய இவற்றைச் சின்னங்களையுடைய நான்கு கைகளையுடையவளும் அன்ன வாகனத்தில் ஏறியுள்ளவளும் ப்ரஹ்மாவின் தேவியும் ருக்வேதத்தைச் சொல்பவளும், பூவுலகத்துக்கு அதிஷ்டான தேவதையாகவும் இருக்கும் காயத்ரீ என்ற திருநாமமுள்ள தேவதையைத் தியானித்து, நூற்றெட்டு தடவையாவது, இருபத்தெட்டுத் தடவையாவது பத்துத் தடவையாவது காயத்ரீயை ஜபிப்பாயாக.

## மாத்யாஹ்நிக ஸந்த்யா–ஸாவித்ரீ

யுவதீம் யுவாதித்ய மண்டல மத்யஸ்தாம் ஶ்வேதவர்ணாம்
ஶ்வேதாம்பராநுலேபந
ஸ்ரகாபரணாம் சதுர்வக்த்ராம் ப்ரதிவக்தரம் த்ரிநேத்ராம்
சந்தரஶேகராம், த்ரிஶூலகட்க கட்வாங்க டமர்வங்க
சதுர்புஜாம்
வ்ருஷபாஸநாரூடாம் ருத்ரதைவத்யாம் யஜுர்வேத
முதா ஹரந்தீம்
புவர்லோகாதிஷ்டாத்ரீம் ஸாவித்ரீம் நாமதேவதாம்
த்யாத்வா யதாஶக்தி காயத்ரீம் ஜபித்வா

### இதன் பொருள்

யௌவனமுள்ளவளும் இளஞ்சூரிய மண்டலத்தின் மத்தியில் உள்ளவளும், வெள்ளை நிறமுள்ளவளும் வெள்ளைச்சேலை, வெள்ளைச் சந்தனம், வெள்ளை மலர், வெள்ளையாபரண மணிந்தவளும், நான்கு முகமுடையவளும், ஒவ்வொரு முகத்துக்கும் மூன்றாகப் பன்னிரண்டு கண்களுடையவளும் சந்திரனை முடியிலணிந்தவளும், சூலம், வான், தண்டு, டமருகம் ஆகியவற்றைச் சின்னங்களாகவுடைய நான்கு கைகளையுடையவளும் வ்ருஷப வாகனத்தில் ஏறியிருப்பவளும் ருத்திரதேவியும், யஜுர்வேதத்தைச் சொல்பவளும், புவர்லோகத்துக்கு அதிஷ்டான தேவியாகவும் இருக்கும் ஸாவித்ரீ என்ற திருப்பெயருள்ள தேவதையைத் தியானித்துச் சக்திக்குத் தக்கபடிக் காயத்ரியை ஜெபித்து.

## ஸாயம் ஸந்த்யா—ஸரஸ்வதீ

வ்ருத்தாம் வ்ருத்தாதித்ய மண்டல மத்யஸ்தாம் ஶ்யாமவர்ணாம்
ஶ்யாமாம் பரானுலேபந ஸ்ரகாபரணா மேகவக்த்ராம்ஶங்க சக்ரகதா
பத்மாங்க சதுர்புஜாம் கருடாஸ நாரூடாம் விஷ்ணு தைவத்யாம்
ஸாமவேத முதாஹரந்தீம் ஸ்வர்லோகாதிஷ்டாத்ரீம் ஸரஸ்வதீம்
நாமதேவதாம் த்யாத்வா யதாஶக்தி காயத்ரீம் ஜபித்வா ||

### இதன் பொருள்

வயது முதிர்ந்தவளும், வயது முதிர்ந்த சூரியமண்டல மத்தியிலுள்ளவளும் கறுத்த நிறமுள்ளவளும் கறுத்தசேலை, கறுத்தசந்தனம், கறுப்புமலர், கறுப்பு ஆபரணம் அணிந்தவளும் ஒரு முகமுள்ளவளும் சங்கு, சக்கரம் கதை, தாமரை இவற்றைச் சின்னமாகவுள்ள நான்கு கைகளையுடையவளும், கருட வாகனத்திலேறியுள்ளவளும் விஷ்ணுதேவியும், ஸாம வேதத்தைச் சொல்பவளும் ஸ்வர்க்க லோகாத்துக்கதிஷ்டான தேவியுமாகிய ஸரஸ்வதீ என்ற திருப்பெயரையுடைய தேவதையை சக்திக்குத் தக்கபடி காயத்ரீயை ஜபித்து.

## ஸந்த்யா லக்ஷணம்

க்ருஷ்ணுஜிநதராஸ் ஸர்வாஸ் ஸாக்ஷிண்யஸ்ஸர்வ கர்மணும் |
திஸ்ரஸ்ஸத்வாதி ஸம்யுக்தா சதுர்தீகுண வர்ஜிதா || இதி :
ப்ரஹ்மாதி
காரணேபாதிபேதகிஞ்சாநாம் ஸர்வக்ருத்யாநாம் ஸாக்ஷிணீம்
ஶிவசக்தி மேவ ஸந்த்யாம் தத்காலாநுகுணும் ஹ்ருத்பிந்து
ப்ரஹ்மரந் தரேஷு க்ரமேணுத்யா யேரநு ஸமயிந:

### இதன் பொருள்

இந்த மூவரும் கிருஷ்ணுஜிநங்கள் தரித்து, சர்வ கர்மங்களுக்கும் சாக்ஷியாய் சாத்வீக குணமுள்ள பிராஹ்மியும் ராஜஸ குணமுள்ள வைஷ்ணவியும் தாமஸ குணமுள்ள ரௌத்ரியுமாக இருப்பார்கள். நாலாங் காலத்துத் தேவி, ஓர் குணமுமில்லாதவள். இவ்விதமாக பிரஹ்மா, விஷ்ணு, ருத்ராஷ்டதையாகிய சக்திகளைச் சர்வ கிருத்தியங்களுக்கும் சாக்ஷியாக இருக்கிற சிவசக்தியாக நிச்சயித்து, ஸந்த்யாத்ரயங்கட்கும் அந்தந்தக் காலத்துக்குத் தக்கவாறு, மார்பிலே பிராஹ்மியையும் இரண்டு புருவத்துக்கு நடுவே வைஷ்ணவியையும் உச்சியிலே ரௌத்ரியையும் சமயச் சிறப்புத் தீக்ஷைகளான சீடர்கள் தியானிப்பார்கள்.]

"ஐயந்திரிபற ஆராய்ந்து இத்தன்மையானது என்று நிர்ணயித்துச் சொல்லுகிற * ஷட்தர்ஸீனர்களுக்கெல்லாம் கருதற்கு அரியதாகவும், அழிதலில்லாத வேதங்கள் விளக்கிய வஸ்துவின் லக்ஷணம் இத்தன்மையானது; அதன் ஸ்வரூபம் இத்தன்மையானது என்று சொல்லக்கூடாததாகியும், அரிய ஞானியரால் வகைப்படுத்தி எடுத்துச் சொல்லக்கூடாததாகவும் உள்ள, அந்த ஒப்பற்ற பரஞ்சோதியானது, ஸ்தூல ரூப

---

* ஷட்தர்ஸனங்கள், ஆறு தரிசனங்கள். அவை, யோகம், சாங்கியம், நியாயம், வைசேஷிகம், பூர்வமீமாம்சை, உத்தரமோம்சை, இவற்றைப் போதித்தவர்—ஷட்தர்சனர்கள்.

1. யோக சாஸ்திரத்தை இயற்றியவர் பதஞ்சலிமாமுனிவர்
2. சாங்கியம் செய்தவர்—கபிலர்
3. நியாயம் இயற்றியவர்—கௌதமர்
4. வைக்ஷிகம் இயற்றியவர்—கணுதமுனிவர்
5. பூர்வ மீமாம்சை செய்தவர்—ஜைமினி.
6. உத்திர மீமாம்சையைச் செய்தவர்—வியாசமுனிவர்.

மாய் நமது கரஸ்தலத்திலும் சூக்ஷ்மரூபமாய் ஹ்ருதயத்திலும் வீற்றிருந்து, நாம் பிரத்யக்ஷமாய்த் தரிசிக்கும்படி, நமது கண்களுக்கெதிரே ஜங்கம ரூபமாய் எழுந்தருளி இது இது, என்று வகைப்படுத்திக் காண்பித்துக் கடாட்சித்தருளிய முதல்வனுகிய சிவபெருமானே, எமது சமயாசாரியன் ஆவான்.

"தந்தையே! கேளுங்கள். பதினுன்கு உலகங்களுக்கும் பிதாவாக இருப்பவனே பிதாவாவான். அப்படிப்பட்ட தந்தையைக் கடவுள் என்று சொல்லாமல் மன்மதன் என்பவனது தந்தையாகிய விஷ்ணு முதலிய தேவர்களை வணங்குகிற நீங்கள் எனக்குத் தந்தையே அல்ல. உம் பத்தினியும் என் தாயல்ல. சிவபெருமானையடைந்த வீர மஹேஸ்வரர்களே எனக்கு மேன்மையான மாதா பிதாக்களாவார்கள். மோக்ஷா சாரமாகிய மகத்வம் பொருந்திய வீர சைவ பக்தியில் லயம் அடைகிற என் மனம் மகிழ்ச்சியடையும் வீரமஹேஸ்வரர்களே என் விருப்பத்திற்குரிய நற்கதியாவார்கள். தைர்யமான என் சிவாசாரத்தன்மை வழுவாமல் நிலையாகநிற்பேன். நீரும் உங்கள் ஒழுக்கத்தில் நில்லுங்கள். நீங்கள் யார்? நாங்கள் யார்?... ஐயா! உமாதேவியார் வருந்தாமல் தமது வாமபாகத்தையருளிய சிவபெருமானுக்கு சரணர்களாகிய வீர மஹேஸ்வரர்களே தகப்பனுவார்கள். நீர் தகப்பனல்ல. அவர்கள் தந்தையர் யாவரெனில் சொல்கிறேன். கேட்டுக்கொள்ளும். சென்னையன், நக்கையன், சிக்கையன், தெலுங்கு ஜோமையன், தாயார் யாவர் எனின், கோட்கூச்சவ்வை, அம்மவ்வையுமாவார்கள்" என்ருர் வசவண்ணர்.

---

பூர்வ மீமாம்சை அல்லது கர்ம மீமாம்சையானது, புண்ணியத்தை யடைவதற்குரிய கர்மங்களைக் கூறும். உத்தர மீமாம்சை அல்லது ப்ரஹ்ம மீமாம்சை வேதாந்தத்தைச்சொல்லும். இந்த ஷட்தர்சனங்கள் வேதங்களை ஆதாரமாகக் கொண்டவை. நியாயமும் வைசேஷிகமும்—தர்க்க சாஸ்திரங்கள். வேதாந்த பயிற்சிக்கு இவை முக்கியமானவை. இவையன்றி வேதாந்தம் பயில்வது பயன்தராது என்பர். வியாசரது உத்தர மீமாம்சைக்கு வேதாந்தம் என்றும் உபநிஷத்துக்களே மூலமாகும். இந்த வேதாந்த சூத்திரங்களுக்கு ஸ்ரீ நீலகண்ட சிவாசாரியர் சக்தி விசிஷ்டாத்வைத பரமான (வீரசைவ) பாஷ்யத்தை இயற்றினுர். அதுவே நீலகண்ட பாஷ்யம் எனப்படும். ஆதிசங்கரர் இயற்றிய பாஷ்யம் சங்கர பாஷ்யமாகும். அது அத்வைத பரமாகும். சங்கரரைப் பின்பற்றி பஞ்சதஸி, பிரஹத் வாஸி, தேவ மநநம், லகு வாஸு தேவ மநநம், ப்ரஹ்மா நந்தீயம் முதலிய அநேக அத்வைத சாஸ்திரங்களை இயற்றினர். மேலும் ஸ்ரீகர பண்டிதர், மேற்சொன்ன சூத்திரங்களுக்கு வீர சைவ பரமாக பாஷ்யம் ஒன்றைச் செய்தார். ஸ்ரீ கர பாஷ்யம் எனப்படும்.

வசவேசரது கர்மத்யாகத்தின் உறுதியை அறிந்த மாதிராசையர், அவரிடம் பேசாமல் மௌனமாய்ச் சென்றார். வசவேசரும் தம் தந்தையர்மீது பாசம் விட்டவராய், தம் தங்கையான நாகாம்பையாரோடு சிவபக்தரிடத்திற்போய் வாழ்ந்திருந்தார்.

பூணூல் கல்யாணம் இவ்விதமாக நிறைவேருமல் போயிற்றே என்று வெறுத்த, உபநயனத்திற்கு வந்திருந்த வேதிய உறவினர்கள் யாவரும் வெளியேறினார்கள். "வசவேசன் நமது பூணூலை நிராகரித்தான், சிவபெருமானே வழிபாட்டுக்குரிய கடவுளாகத் தன் சித்தாந்தத்தையே நிலைநாட்டினான். இந்தச் செய்தி இவ்வுலகில் விந்தையானது!" என்று சொல்லிவிட்டுத் தத்தமது இருப்பிடத்துக்குச் சென்றார்கள்.

# 3. வசவேசர் திருமணம்

வசவேசரின் தாயான மாதாம்பையின் தமையனார் ஒருவர் இருந்தார். அவர் மேன்மையான ஒழுக்கமுடைய விஜ்ஜல ராஜனின் அமைச்சராகப் பணியாற்றி வந்தார். அவர் பெயர் ஸ்ரீபலதேவர். அவர் ஒரு சிவபக்தர். சிறந்த செல்வந்தர்.

வசவேசரின் உபநயனத்தின்போது அவர் பூணூலை அணியப்போகும் சடங்கைக் காணவந்திருந்தார். வந்தவர், தன் புதல்வியை சிவசரணரைத் தவிர மற்றையோருக்கு மனப்பூர்வமாகக் கொடுக்கமாட்டேன் என்ற மனவுறுதியைக் கொண்டிருந்தார். நல்லொழுக்கமுடைய வசவேசர், சிவபெருமான்மீது வைத்திருந்த பக்தியைக்கண்டு மகிழ்ந்தார். எனவே, அவர் யாவரும் போற்றும் புகழையுடைய வசவேசர் வசிக்கும் திருமடத்திற்குச் சென்று, வசவேசரை வணங்கி, அன்போடு தழுவி மகிழ்ந்து, "இவ்வுலகத்தார் அனைவரும் நற்கதியடையவே நீர் அவதரித்தீர். விரும்புதற்குரிய என் பெண் உம்மையே அடைந்து உய்யவேண்டும். ஆகையால் நான் வாழ்கிற விஜ்ஜல நகரத்துக்கு வருகை தரவேண்டும்!" என்று வேண்டினார்.

வசவேசர் திருமணஞ் செய்து கொள்வதில் விருப்பற்ற வராக இருந்தும், ஜீவகாருண்யத்தால் பலதேவரது வேண்டு கோளுக்கு இரங்கிச் சம்மதித்தார். எனவே, வசவேசரை அழகான ஒரு பொற் சிவிகையில் அமரச் செய்து, அவரைத் தமது விஜ்ஜல நகரத்திற்கு அழைத்துச் சென்ருர். அங்கு ஒரு சுபமுகூர்த்தத்திற்கு ஏற்பாடு செய்து, விஜ்ஜல நகரத்தை அழகாக அலங்கரிக்கச் செய்தார்.

அந்த நகரத்தின் பெரிய தெருக்கள் யாவும், வாழை, கமுகுகளாலும் பந்தல்களாலும் விதானங்களாலும் தோரணங் களாலும் மாலைகளாலும் அலங்கரிக்கப்பட்டன. குளிர்ச்சி யான பன்னீரில் கரைத்த சந்தனம் எங்கும் தெளிக்கப்பட்டது. திருமணத்திற்குரிய மாளிகையில் வானளாவிய மணப்பந்தல் அமைக்கப்பட்டது. பன்னீரும் கஸ்தூரியும் கலந்து நேர்த்தி



யாக மெழுகினுர்கள். திருமணப் பந்தல் வாயிலில் *அஷ்ட மங்களத் திரவியங்களை அமைத்து வாழ்த்துச் சொல்லி,

---

* அஷ்டமங்களங்கள் : கவரி, நிறைகுடம், தோட்டி, கண் ணுடி, விளக்கு, முரசு, கொடி, இரட்டைமீன் என்பனவாம்.

முத்துக்களை இறைத்து பூரண கும்பத்தையும் முளைப்பாலிகை யையும் பிரதிஷ்டை செய்து துதித்து, ரத்ன தீபங்களை அழகுற அமைத்து, இன்னிசைக் கருவிகளை முழங்கினார்கள்.

ஏவலாளர்களைப் பலதேவர் அழைத்து, "சிவபக்தர்களை இங்கு அழைத்து, அவர்களது திருவடித் தாமரைகளை விளக்குங்கள்! அவர்களை வணங்கி, அவர்கள் அமருவதற்கு ரத்ன கம்பளங்களை வரிசையாகப் பரப்புங்கள்! அவர்களை அன்போடு எழுந்தருளச் செய்து, திருவெண்ணீறு வெற்றிலைப்பாக்கு, கர்ப்பூர வாசனைத் திரவியங்களை அவர்களுக்கு வழங்குங்கள்!" என்று கட்டளையிட்டார். உடனே பணியாட்கள் மடாதிபதிகளிடம் சென்று அவர்களைத் திருமண விழாவிற்கு அழைத்தனர். உடனே சிவனடியார்கள் திரளாகக் கூடி, விவாக மகோற்சவத்திற்குப் புறப்பட்டார்கள்.

அவ்விழாவிற்கு வந்திருந்த சிவனடியார்கள் மிகவும் நன்றாக உபசரிக்கப் பெற்றார்கள். அவர்களோ சிவபெருமானது புகழையே துதித்துக்கொண்டிருந்தார்கள். பரசிவானுபவச் செல்வமுடைய வசவேசர், சிவசரணர்களின் பாதங்களை விளக்கிய தூய்மையான தீர்த்தத்தில், வலிதான பிறவியொழியும்படி குளித்து, பீதாம்பரங்களை அணிந்தார். விபூதியை உத்தூளனமாகவும் அதன்மீது திரிபுண்டரமாகவும் லலாடத்தில் விதிப்படியும் தரித்தார். தம் இஷ்டலிங்கத்தைப் பூசித்த மலர்களைச் சிரசின் மீது தரித்து, பரிசுத்தமான உருத்திராக்ஷ மாலைகளை மேனியில் அணிந்தார். பிறகு, சிவநேசச் செல்வர்களையெல்லாம் பயபக்தியோடு வணங்கித் துதித்தார். அப்போது அவர்கள் வசவேசரை வாழ்த்தினர். பிறகு, பலதேவர் தம் புதல்வியான கங்காம்பையார் என்பவளை, மங்கலஸ்நானம் செய்வித்தார். ஆடையலங்காரங்கள் சிறப்பாக அமையும்படி சிங்காரிக்கச் செய்தார். அனைவராலும் கொண்டாடத்தக்க அழகுள்ள கங்காம்பைக்கு ஆபரணங்கள் வேண்டாமாயினும், கலியாணப்பெண் என்ற சிறப்புக்காகச் சிறந்த ஆபரணங்களை அணிவித்து அழகு செய்தனர்.

தாமரை மலர்போன்ற முகமுடைய கங்காம்பையின் கூந்தலில் பூச்சூட்டினர். நெற்றியில் குங்குமப் பொட்டு இட்டனர். இளங்கயல் மீன்களைப் போன்ற விழிகளுக்கு மைதீட்டினர்.

அவளுடைய அழகினுக்கு லக்ஷ்மியும் பதிவிரதா தர்மத்துக்கு வடமீனும், இவ்வுலகில் ஒப்பாகமாட்டார்கள். அழகிய நடைக்கு அன்னங்கள் உவமையாகா. சொல்லுக்குக் கிளிகள் தோற்கும். குளிர்ந்த பல் வரிசைக்கு முத்துக்களும் ஒப்பாக வில்லை. உதடுகளுக்குப் பவளங்களும் நிகர்க்கவில்லை. சாயலுக்கு மயிலும் தோற்றது.

உமாதேவியாரின் திருவடிகளில் மிகவும் நேசமுள்ள கங்காம்பை என்ற திருவமுதத்தை, அழியாத தவஞ்செய்த வசவேசருக்கு உரியவளை, அழகிய தோழியர் மெதுவாக கைப் பிடித்து அழைத்து வந்து, ஸ்ரீபலதேவரின் அருகே நிற்க வைத்தார்கள்.

"மங்கையரின் கற்பெல்லாம் ஒருங்கே திரண்ட இந்த உத்தமியை, பெருமை பொருந்திய சிறந்த குருலிங்க ஜங்கம பக்திக்குத் தக்கவளை, பலதேவர், மகேஸ்வரர்களின் சந்நிதிக்கு அழைத்துச் சென்று, அவர்களைத் தொழும்படிச் செய்தார்.

தொழுத பிறகு, சிவ சொரூபமான வசுவதேவரை, அழ கான ஒரு சிங்காதனத்தில் வீற்றிருக்கச் செய்து, சிவ பெருமானை வணங்கினர். தம் அரண்மனையிலிருந்த தங்க நகைகள் அனைத்தையும் நவரத்தின ஆபரணங்கள் பலவற்றை யும் கொண்டுவரச் சொல்லி, அவற்றையெல்லாம் தங்கத் தட்டொன்றில் ஏந்தி, வசவேசரை வலம் வந்து, அவரிடம் அவற்றைச் சமர்ப்பித்தார்.

பிறகு, பலதேவர் அவரை நோக்கி, "அடியேனைக் காக்கக் கடவீர். என் திருமகளையும் இப் பொருள்களையும் அங்கீகரிக் கக்கடவீர்!" என்று வேண்டினர். வசவதேவரும் இறைவ ரின் திருவருள் இதுவேயானல் ஏற்போம் என்று எண்ணி, அவரது மகளையும் அரிய பொருள்களையும் அன்போடு ஏற்றுக் கொண்டார். பலதேவரும், 'அடியேன் முற்பிறவிகளில் செய்த தவப்பயன் இன்றையத்தினம் நிறைவேறிற்று" என்று வணங்கினர்.

அப்போது, அங்கிருந்த பெரியோர்கள், சகல சுப லக்ஷ ணங்களுமுள்ள நல்ல முகூர்த்த காலம் சமீபித்தது என்று சொன்னர்கள். அப்போது வசவேசர், சதுரர்களுக்கு சிவ பெருமானது திருவருளும் பக்தர்களது அனுக்கிரகமும் ஆகிய இரண்டுமே சொல்லுதற்கரிய லக்ஷணமுடைய சுபமுகூர்த்த மாகவும், துணைப் பொருளாகவும் மோக்ஷானந்தமாகவும் இருப்பன என்பதை விவரித்தார்.

பிறகு, சிவனடியார்கள் மகிழ, வசவேசரின் திருமணம் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. வசவேசர், சிவசரணர் களுக்கெல்லாம் அன்னமளித்து உபசரித்து வணங்கினர். பிறகு, மணமகளான கங்காம்பையோடு வசவேசர் ஸ்ரீபல தேவரும் சிவசரணர்களும் பின்தொடர, கூடலசங்கமம் என்ற சிவபெருமானது திவ்வியத் திருத்தலத்துக்குச் சென்றார்.

விஜ்ஜல நகரத்திலிருந்து ஒரு காத தூரத்திலிருந்த கூடல சங்கம க்ஷேத்திரத்தையடைந்து, அதன் எல்லையைத் தரிசித் தார். சிவஞான சித்தியடைந்த வசவேசர், தம் இரு கைகளை



யும் திருமுடியின் மேலே குவித்து, வேறெந்தத் திக்கையும் கவனியாமல், கூடல சங்கமேஸர் எழுந்தருளியிருக்கும் திசை நோக்கித் தோத்திரங்களைத் துதித்த வண்ணம் சென்றார்.

அந்தக் கூடலச் சங்கமத்தின் பெருமையையும் அழகையும் ஆயிரம் நாவு படைத்த ஆதிசேஷனாலும் புகழ முடியாது. அங்கிருந்த நதிகள் மிகவும் புண்ணியம் தருபவை. மலைகளோ ஸ்பரிசவேதிகள். அங்கிருந்த தேவாலயங்கள் யாவுமே சிவாலயங்கள் தோப்புகளிலெல்லாம் உருத்திராஷ மரங்கள் நிறைந்திருந்தன. காடுகள் யாவும் சிவபூஜைக்குப் பொருத்த மாகியப் பூந்தோட்டங்கள் நிறைந்திருந்தன. பசுக்கள் யாவும் காமதேனுக்களாக இருந்தன. அங்கு நிகழ்ந்து வந்த செயல் கள் யாவும் சிவபெருமானை அன்பு செய்தற்குரியப் பூஜைகளாக விளங்கின. அங்கிருந்த மனிதர்கள் தேவர்களைப் போன்றும், மங்கையர் அனைவரும் கற்புடைய மாதர்களாகவும் விளங்கி னர். தெருக்கள் எங்கிலும் சிறப்பான கோலமிடப்பட்டிருந் தன. திண்ணைகளில் எல்லாம் வேத ஆகம அத்தியயனங்கள் நிகழ்ந்தன.

அந்தக் கூடலச் சங்கமேஸ்வரத்தில், பொய்பேசுவோர் சண்டாளர், பயனற்ருேர், பிற சமய போதகர், நன்றி கெட்டவர், கொடுஞ் சொல்லையுடையவர், மஹாவற்பர், ஞானமில்லாதோர், சன்மார்க்கமில்லாதவர் ஆகியவர்கள் யாருமே இருக்கவில்லை.

வசவேசர் திருமணக்கோலத்தோடும், சிவனடியார் கூட்டத்தோடும் விஜ்ஜல மன்னரின் அமைச்சரோடும் வருவதையறிந்த அந்த ஊர்மக்கள் அவரை அன்போடு வரவேற்க, க்ஷேத்திரம் முழுவதும் வாழைகளையும் கொடிகளையும் தோரணங்களையும் வரிசையாகக்கட்டி அழகுபெற அலங்கரித்தனர். அவர்கள் வசவேசரை எதிர்கொண்டு வணங்கி வரவேற்றனர்.

வசவேசர் அந்தப் புனிதத்தலத்தைப் பலமுறை வணங்கி, திருவீதியை வலம் வந்து, பொன்மலையெனத் திகழ்ந்தச் சிகரத்தைப் பணிந்து, சிவபெருமானின் திருக்கோயிலுக்குச் சென்று, சிவபெருமானின் திருவுருவின் முன்பு, அடியற்ற மரம்போல மனமுருகி, பக்தி மிகுந்த அன்புடன் சாஷ்டாங்கமாக வணங்கினர். வணங்கியவர் எழுந்திராமல் இருந்தார். அப்போது தமது புதல்வராகிய வசவதேவர், வருகையை அறிந்த மகாதேவராகிய கூடலசங்கரமேஸ்வரர் மகிழ்ந்து, தாம் முன்பு கொண்ட ஆசார்யத்திருக்கோலத்துடன், அக்காலத்தில் லிங்கதாரணம் செய்த வசவேசரது கண்கள் நிறைய பிரசன்னமானர். பிறகு, கிருபாமூர்த்தியாகிய ஆசாரியர் தமதுத் திருக்கரங்களால், மிக்க அன்புடன் வசவ தேவரின் நெற்றியைத் தொட்டு, "எழுந்திருக்கக்கடவை!" என்ருர்.

வசுவேசர் எழுந்து, கண்களில் கண்ணீர் மல்க, இரு கைகளையும் திருமுடிமீது கூப்பி, ஆசாரியரது திருமலரடிகளைக் கழுவித் துதித்தார். ஆசாரியர், அவரை அன்புடன் அருகில் உட்காரச்சொன்ஞர். ஒப்பற்ற குரு கட்டளையாகிய உபதேச முறைகளைப் பலவிதமாகச் செவ்வையாக அனுக்கிரகம் செய்தார். "குறைவற்ற வருங்காலத்திலும் மேன்மையாகிய ஜங்கம மூர்த்திகளை எம்மைப்போலவே உனது மனம் மகிழ்ச்சியடைய நேசத்தால் பூஜிக்கக்கடவை!" என்ருர். பிறகு அவர் வசவதேவரை நோக்கி, "உத்தம வசவண்ணனே! அந்த ஜங்கம மூர்த்திகளை சாமானியரான மனிதர் என்று பாவியாமல், மேன்மையுடைய சிவபெருமானே என்று பாவித்து, அவர்கள் இயற்றும் ஸத்யமார்க்கமாகிய விரதம் முழுதும் மிகவும் நன்மையான செயலாகவே கொள்ளக் கடவை. அவர்கள் உன்னை அடித்தாலும் வைதாலும் அவர்களைக் கும்பிடு! நல்ல வார்த்தைகளே பேசு. மேலோரான ஜங்கம மூர்த்தியரது ஜாதியானது உயர்ச்சி, தாழ்ச்சி யென்று வாக்காற் சொல்லுவதும், நினைப்பதும் நீக்குவாயாக. உடலுக்கு மரணகாலம்

நேரிட்டாலும் மனத்தில் சன்மார்க்கத்தையடைவதற்குரிய உனது நிஷ்டையை நெகிழ்ந்து போகாமலும் கைவிடாமலும் இரு. மாட்சிமையுடைய ஜங்கம மூர்த்திகளைத் தூஷிக்கின்ற வாயுடையத் தீயவரது தலைகளைத் துண்டித்துவிடு. சிவாகம விதியை உலகத்தில் நிலைபெறச் செய். மிகுந்த சிவபக்தியில் குறைவு செய்தலை ஒழித்துவிடு. இப்பொருள் உண்டாயிருக்கிறது. இப்பொருள் உண்டாயிருக்கவில்லை என்று நினைத்து ஆசைப்படாமல் இரு.

பிறர் மனைவியரைக் காமநுகர்ச்சியின் பொருட்டு, ஆசையோடு கருதாமல் இரு. பிறர் பொருளில் சிறிதும் சிந்தை வைக்காமல் இரு. பிறர் இன்பங்களில் மனம் முதலியவற்றைச் செலுத்தாமல் இரு. பிறரை மறந்தும் தூஷிக்காமல் இரு. பக்தர்கள் உன்னிடம் வந்தால், அன்புடன் நீ இருக்கும் இடம் விட்டெழுந்து, கைகூப்பி வணங்கி, நேசத்தோடு போற்றி வழிபடு. இவ்வுலகில் உன் அன்பென்கிற பொன்னுக்குத் தகுந்த உரைகல்லாவது நமது வேடத்தையுடைய ஜங்கம மூர்த்திகளே யாவர். அந்தக் காலத்தில்தானே உன் மனதில் பக்தி மார்க்கம் கெடமாட்டாது. ஆகையால் நல் வழியில் நட. உன் மனோபீஷ்டமெல்லாம் தவருமல் நாம் அனுக்கிரஹம் செய்வோம். இந்தச்சொல் மெய். எம்மையே எக்காலமும் நீ பிரியாதிருக்கக் கடவை. நாமும் உன்னையே பிரியாதிருப்போம்!'' என்று இவ்வாறு இன்பச்சுவையானப் பிரமாணங்களை வசவ தேவருக்குப் போதித்து, தம்மிருத் திருக்கைகளாலும் அவரை ஆலிங்கனம் செய்து, ''வசவனே! நீ நின்று வணங்குக'' என்று கட்டளையிட்டார். அவ்விதம் வணங்கிய வசவ தேவரின் எதிரே பரமாத்மாவாகிய ஸ்ரீ சத்குருவும் முன்னே கொண்டிருந்தத் தன் சிவலிங்கத் திருக்கோலம் கொண்டிருந்தார்.

ஸ்ரீசத்குருவானவர், சிவலிங்க ரூபமாக இருப்பதை, சாந்த மூர்த்தியான வசவதேவர் அறிந்து, ஸ்ரீஸத்குரு செய்தருளிய உபதேசத் தத்துவத்தையறிந்து, தேஜசுள்ள திருவுருவத்துடன் சிவபெருமானைப் பற்றிய உள்ளமுடையவர் ஆனார்.

அங்கிருந்த சிவனடியார் அனைவரும் ஜங்கம மூர்த்திகளும் மனமகிழ்ந்து, ''இன்று உண்டாகிய நன்மை, நமது தவப்பயனாகும். வசுவதேவரே சிவபெருமானாகும்'' என்று வாழ்த்தி, சிவபெருமானைத் தரிசித்தனர்.

அவர்கள், ''மகிமையுள்ள இந்த வசவதேவர் சிவபெருமானுக்குச் சமானரேயாகும். அவர் அழகிய ஜங்கம வடிவம் பூண்டு சமீபத்தில் எழுந்தருளி, உபதேசஞ் செய்தும், மனம் மகிழ முதுகைத்தடவியும் தம் தர்ம ஸ்வரூபமாகியத் திருமேனி

யோடும் களிப்போடும் ஆலிங்கனமும் செய்தருளினர். இவ்வாறு சிவாநுக்கிரகத்தைப் பெற்றப் புண்யசீலர்கள் யாருமே இல்லை. இவ்வசவேசர் அவதரித்தது மஹா அற்புதம்! இவர் முடுகிவரும் துன்பத்தை ஒழிக்கவல்லவர். இவரைச் சிந்தித்து ஒருமுறை 'வசவேசா!' என்றவுடனேயே மோக்ஷம் உண்டாகும்!'' என்று வசவதேவரை அனைவரும் புகழ்ந்தனர்.

மேலும் பலர், ''பிள்ளைகளையும் தந்தையரையும் மாதர்களையும் கொன்றுப் பஞ்சாக்கினியின் நடுவேயிருந்து, உடம்பை நெருப்புச் சுட்டெரிக்க, சிறிதும் சலனமின்றி நின்றுத் தவஞ் செய்து முற்காலத்தில் தொண்டர்கள் சிவாநுக்கிரகத்தைப் பெற்றார்கள். இப்போதோ, வசவேசர் ஒரு கணத்திலேயே சிவபெருமானை அடைதற்குரியத் தவம் செய்தது விந்தையினும் விந்தையே!'' என்று வியந்தார்கள்.

இவ்வாருக அனைவரும் மகிழ்ச்சியுடன் இருக்கும்போது, வசவதேவர் அன்போடு எழுந்து, ஸ்ரீஸத்குருவாகியக் கூடல சங்கமேஸ்வரரதுச் சந்நிதானத்தில் ஸாஷ்டாங்கமாக வணங்கினார். பிறகு ஒரு மண்டபத்திற்குச் சென்று, சிவபெருமானுக்கு விருப்பமுள்ள அன்பர்களுடன் கூடி வீற்றிருந்தார்.

அன்றையத்தினம் மஹேஸ்வரப் பூஜைகளை நியமித்து, எல்லையற்ற அன்பினால், முப்பொழுதும் ஸ்ரீஸத்குருவின் திருவடிகளிலேயே மிக்க விருப்பம் கொண்டு, சாஷ்டாங்கமாக வணங்கித் தோத்திரஞ் செய்து, ''இனி எக்காலத்தும் இந்த ஸ்தலத்தைவிட்டு நீங்கக்கூடாது'' என்று சங்கல்பத்தோடு அங்கேயே இருந்தார்.

---

# 4. வசவண்ணர் தண்டநாயகரான கதை

---

தெய்விகச் சம்பத்து நிறைந்த கல்யாணபுரியில் சிவபக்திக்குக் காரணரான ஸ்ரீபலதேவர், தம் புதல்வியை வசவதேவருக்குத் திருமணம் செய்து கொடுத்த சிறிது காலத்திற்கெல்லாம், சிவபெருமான் விரும்பியழைத்ததைப் போல், சிவபதம் அடைந்தார்.

அப்போது விஜ்ஜலராஜன், ஸ்ரீ பலதேவருக்கு வேண்டியவர்களான நண்பர்களை அழைத்து, ''நம் சதுரங்கச் சேனை

களுள்ள ராஜ்யத்தையும் நம்மையும் இப்போது தாங்கவல்ல வர்களில் யாராவது பயமில்லாதவராயும், சகோதரர்களாயும் சுற்றத்தாராயும் பலதேவருக்குப் பாத்தியமுள்ளவராயும் இருக்கிறார்களா ?'' என்று கேட்டான்.

பலதேவரின் நண்பர்கள் அவனை நோக்கி, ''மாமன்னரே! பலதேவரின் மகளை மணஞ் செய்துகொண்ட வசவதேவரே, தாங்குதற்கு அரியப் பூபாரத்தையும் தாங்கவல்லவர். அவர் சிவானுக்கிரகத்தைச் சிறப்பாகப் பெற்றிருப்பவர். கூடல சங்கமேசத்தில் கிருபாமூர்த்தியான ஸ்ரீ ஸத்குருவின் திருவடி களை வணங்கும் அன்புடன் அவர் இப்போது அங்கு வாழ்ந்து வருகிறார். அவர்தான் உம் பெருந்தன்மையான மனதிற்கு இசைந்தவர். குணம் மிகுந்தவர்!'' என்று சொன்னார்கள்.

அரசன் பெருமகிழ்ச்சியடைந்து உடனே, தன் அமைச்சர் களையும் சத்திய மார்க்கத்தில் சிறந்த பெரியோரையும் வரவழைத்து, ''சிவபக்தியில் சிறந்த வசவேசரைச் சந்தித்து, நம்மிடத்துப் பொறுமையும் கடாக்ஷமுமுள்ள தண்டநாயகன் ஆகும். விருப்பத்தை ஒப்பும்படிச் சொல்லி, நம்மைத் தாங்கும் நமதுப் பட்டத்து யானைமீது அவரை அமர்த்தி, இங்கு அழைத்து வருக!'' என்று கட்டளையிட்டான்.

அமைச்சர்களும் பெரியோர்களும் வெகு விரைவாகக் கூடல சங்கமேஸ்வரத்திற்குச் சென்று, வசவதேவரின் திருவடிகளை வணங்கி, ''இரண்டாம் சிவமே! சைவர்களின் பெருஞ் செல்வமே! பிரம்ம விஷ்ணுக்களின் பதவிகளையும் ஒரு பொருட்டாக மதிக்காத மேன்மை பொருந்திய ஒப்பற்ற மோக்ஷ சாம்ராஜ்யத்தையுடையவரே! சிவானுபவமாகிய மோக்ஷானத்தைப்போல, பூலோகத்தை யரசாள வேண்டும் என்றுத் திருவுள்ளம் சம்மதிக்குமோ? சம்மதிக்காதிருப்பினும் அனைவரும் உய்யும் பொருட்டு, தாங்கள் அங்கு வருவீர் களானால், வேந்தன் விஜ்ஜலராஜன் உலகம் யாவையும் அரசாள்வான். பூபாரத்தைத் தாங்குவதற்கும் பட்டினம் விருத்தியடையவும் பொக்கிஷம் பெருகவும் பரிவாரங்கள் விருத்தியடையவும், ராஜ ரகசியங்கள் வெளிப்படாமல் இருக்கவும் மிகுதியாகவுள்ள தெய்வீகச் சம்பத்துக்கும் யோசிக் கும்போதுத் தங்களைப் போன்றவர் விஜ்ஜல நகரத்தில் எமது வேந்தனுக்கு வேறு ஒருவருமில்லை!'' என்று விண்ணப்பஞ் செய்தார்கள்.

அவர்கள் அவ்வாறு வருந்தியழைத்தும், கிருபாமார்க் கத்தையுடைய ஸ்ரீ ஸத்குருவின் திருவடிகளை விட்டு அகன்று செல்வது எப்படியென்று வசவதேவர் தயங்கினார். அப்போது ஸ்ரீஸத்குரு அங்கு தோன்றினார். வசவதேவரும் மற்றை யோரும் அவரை வணங்கினார்கள்.

ஸ்ரீஸத்குரு வசவதேவரை நோக்கி, "வசவதேவா! ஆட்சித் தொழிலும் நமது பணிவிடையேயாகும். ஆகையால் நீ போவாயாக! அஞ்சவேண்டாம்!" என்று கட்டளையிட்டார். வசவதேவர் அவரதுத் திருவடிகளைத் தொழுது, "ஐயனே! உம் திருவருள்!" என்று வணங்கி உத்தரவு பெற்று, நாலுவகைப் படைகளும் தம்மைச் சூழ்ந்துவர, பட்டத்து யானை மீதேறி அமர்ந்து, கூடலச் சங்கமேசத்திலிருந்துப் புறப்பட்டார்.

தேவதுந்துபிகள் முழங்கின. பார்ப்பவர் கண்கள் மலர்ந்தன. கைகள் குவித்தன. வசவேசர் யானையின்மீது அமர்ந்து வருகிறச் செய்தியை அஞ்சற்காரர்கள் மூலமாக அறிந்துகொண்ட விஜ்ஜல ராஜன், தன் தலைநகரத்துத் தெருக்கள் முழுவதும் கண்ணாடித் தோரணங்களாலும் நவரத்தின மாலைகளாலும் அலங்கரிக்கும்படிக் கட்டளையிட்டான். சித்திரப் பந்தல்கள் தெருவெங்கும் அமைக்கப்பட்டன.

வசவதேவர் கல்யாண நகரத்தை அணுகிவிட்டார் என்று அஞ்சற்காரர்கள் அரசனுக்கு அறிவித்தவுடன், அரசன் வசவ



தேவரைத் தன் கண்ணாரக் காணவேண்டும் என்ற ஆசையோடு அவரை எதிர்கொண்டு வரவேற்கப் புறப்பட்டான். நான்கு வகைச் சேனைகளும் புடைசூழ, விஜ்ஜல ராஜன் வருவதையறிந்த வசவதேவர் தம் யானையிலிருந்துக் கீழே இறங்கி, வேந்தனருகே சென்றார்.

வைதீக சம்பந்தமுள்ளச் சிவபக்தி மார்க்கங்கள் விளங்க, ஒப்பற்ற சிவஸ்வரூபம் போன்றவரை, உலகத்தின் ஒப்பற்ற செல்வத்தை, கொடிய பிற சமயவாதிகளாகிய யானைக் கூட்டத்தை யழிக்கும் சிங்கத்தை, வீர சைவரது ஆன்ம லாபத்தை சிவஞான சூரியரை, மெய்யறிவில் இணையற்றவரை, சத்ய வசனங்களில் நிகரற்றவரை, சிவபக்தியில் ஒப்பற்றவரை நிகரற்ற அறிஞரை இன்சொற்களில் வல்லவரான வசவ தேவரை, ஊழ்வலி முழுவதையும் வென்ற அந்த உத்தமரை, விஜ்ஜல ராஜன் அன்போடுத் தரிசித்தான்.

புவியரசன் வசவதேவரைத் தரிசித்தவுடன், அவரிடம் மிகவும் அன்புகொண்டு அவரையும் அழைத்துக்கொண்டு தன் தலைநகரானக் கல்யாண நகரத்திற்குள் நுழைந்தான்.

விஜ்ஜல ராஜனுடன் வசவ தேவர் தலைநகரினுள் பிரவேசித்தபோது, மகரதோரணங்கள் கட்டிய மாட மாளிகைகளின் மேலும் சிகரங்களின் மேலும் இரதங்களின் மேலும் எங்கு நோக்கினும் ஆடவரும் பெண்டிரும் நெருங்கி நின்றார்கள். கணக்கற்ற மாதர்கள் இரண்டு பக்கங்களிலும் எவ்விடத்திலும் நெருங்கிநின்று, வசவதேவரின் திவ்வியத் திருவடிவைக் கண் குளிரப் பார்த்தார்கள். தேமல் படர்ந்த தங்கள் நெருங்கிய தனங்கள் பூரிப்பதைப் பார்க்காத பெண்கள், 'பாக்கியமில்லாதவர்களானோமே" என்று ஏங்கிச் சோர்ந்தார்கள்.

ஒரு பெண், மற்ற பெண்களைப் பார்த்து, "அழகான கூந்தலுடன் குலுங்கும் மங்கையரே! நீங்கள் பார்த்த வசவ தேவருடையக் காட்சியைச் சொல்லுங்கள்" என்று மோகத்துடன் கேட்டாள். மற்ற பெண்களோ, "நாங்கள் ஒரு உவமானத்தைப் பார்த்தே பகிரங்கமாகச் சொல்லவேண்டும். 'மன்மதனோ' என்றால் அவன் உருவமில்லாதவன், தேவ லோகத்திலிருப்பவன் என்றால் நாங்கள் பார்த்தறிந்ததில்லை. பெண்ணரசியான கங்காம்பை, முற்பிறவிகளில் செய்த தவமே தவம்! நாங்கள் பிறந்துதான் என்ன பயன்" என்று பெருமூச்சு விட்டார்கள். அதைக் கேட்ட மற்றொருத்தி, "நீ இப்படிச் சொல்வது சரியல்ல, அவரைப் பார்த்ததே ஒரு தவப் பயனாகும்! அதுவே போதும்!" என்றாள். அதற்கு அந்தப் பெண் "நீயாவது அவரை உற்றுப்பார்த்தாய், நானோ அதையும் பார்க்கவில்லை" என்று ஏங்கி விம்மினாள். இன்னொருத்தி,

"அந்தத் திவ்விய விக்கிரகத்தைக் கண்டு மனம் தவிப்பதைக் காட்டிலும் காணுமல் நாங்கள் மனதை, வெளியே போக விடாமல் மிகவும் அடக்கிப் பொறுத்துக் கொண்டோம். அது பெண்மையின் தர்மம். அந்தத் தர்மத்தைக் கருதி நாங்கள் மனதை நிறுத்திஞல், கண்கள் தாமாகவே விரைந்து சென்று அவரை நேராகப் பார்த்துவிட்டால் என்ன செய்வோம்?" என்ருள். இப்படிப் பெண்கள் பலர் பேசிக்கொண்டார்கள். கற்புடைய மங்கையர்கள், வசவ தேவருக்கு ஆலத்தி எடுத்தார்கள். சிலர் மலர்கள் தூவிஞர்கள். சில பெண்கள் நழுவிய ஆடைகளை நழுவ விடாமல் அவற்றை இறுகக் கட்டிக்கொண்டார்கள். சிலருக்கு அவர்களணிந்த முத்து மாலைகளே சுட்டன.

இந்நிலையில், விரதங் காப்பவர்களும், வேதப் பிராமணர்களும் அறுபத்து நான்கு கலைகளில் வல்லவர்களும் சிவ பக்தர்களும் பல்லாண்டுப் பாடி வாழ்த்திஞர்கள். இத்தகைய ஆரவாரத்தோடு, வசவதேவர் விஜ்ஜல ராஜனுடன், அவனது பெரிய அரண்மனையினுள்ளே பிரவேசித்தார்.

அரண்மனை ஆஸ்தான மண்டபத்தினுள்ளே தங்கி, மிகத் திரண்டப் பொருள்களையெல்லாம் வசவதேவரிடம் விஜ்ஜல



வேந்தன் கொடுத்து, ''எனது நிகரற்ற பன்னிரு அமைச்சர்களுக்கும் பன்னீராயிரம் யானைப் படைக்கும், இலக்ஷத்து அறுபதாயிரம் குதிரைப் படைக்கும், பன்னிரண்டு லக்ஷம் காலாட் படையினருக்கும் ஒருங்கே நீரே மிகச்சிறந்தத் தண்ட நாயகராக இருப்பீராக!'' என்று சொல்லி, மிகச் சிறந்த அரியணையில் அவரை அமரச் செய்தான். விலையுயர்ந்தப் பட்டாடைகளையும் அழகிய மணி மாலைகளையும் விஜ்ஜல ராஜன் வெகுமதியாக அளித்தான்.

அப்பொழுது அனைவரும் கூடியிருந்த மகாசபையின் எதிரில், விஜ்ஜல ராஜன் பார்க்கும்படியாக ஆகாயத்திலிருந்து சிவ லிபியினால் எழுதப்பட்ட ஓர் ஓலைச்சுருள் வந்து விழுந்தது. அது தரையில் விழுவதற்கு முன்னால், வேந்தன் விஜ்ஜலன் அதைத் தன்னிரு கைகளாலும் ஏந்தி, அதில் இருப்பது என்னவாக இருக்கும் என்று வியப்புற்றான். அதை மகிழ்ச்சியுடன், எல்லா மொழிகளிலும் வல்லவர்களாக இருந்த பண்டிதர்களிடம் கொடுத்து, அதற்குப் பொருள் சொல்லும்படி வேண்டினான். பண்டிதர்களோ ஒவ்வொருவராக அந்த ஓலைச்சுருளை வாங்கி வாசித்துப் பார்த்தார்கள். அவர்களுக்கு அதில் எழுதியிருந்த எழுத்துக்களே புரியவில்லை. எனவே நூதனமான அந்த எழுத்தைப்படித்து, பொருள் இன்னதென்று சொல்லத் தெரியாமல், ''இந்த எழுத்தைப் படிக்கத்தெரிந்தவர்கள் சிவபெருமான், விநாயகர், முருகர் ஆகியவர்களே யாவர். அவர்களைத் தவிர, ஹரிப்பிரம்மாதி தேவர்களாலும் இதைப் படிக்க முடியாது. இந்த ஓலைச்சுருளானது தெய்வீகம் பொருந்தியது'' என்று சொல்லிப் பிரமித்தார்கள்.

விஜ்ஜல ராஜன் அந்த ஓலைச்சுருளைக் கையில் வாங்கி, நெடுநேரம் யோசித்த பிறகு அதை வசவதேவரிடம் கொடுத்தான். அவர் அதை வாங்கிக்கொண்டு, உடனடியாக வாசித்தார். விஜ்ஜல ராஜன், ''இந்த வாசகத்தின் பொருள் என்ன'' என்று கேட்டான்.

அதற்கு வசவதேவர், ''அரசே! இந்த வாசகமானது, நீ பிறப்பதற்கு முன்னமே உன்னுடைய தந்தை புதைத்ததாக, எண்பத்தெட்டுக் கோடிப் பொன், உனது மேன்மை பொருந்திய சிம்மாசனத்திற்குக் கீழே நிலைத்திருக்கிறது என்று குறிப்பிடுகிறது. இந்த வசனத்தில் சந்தேகம் இல்லை. உன்னுடைய அரசவையில் உள்ளவர்கள் அனைவரும் காண, நான் அந்தப் பொற் புதையலைக் காண்பிப்பேன். உடனே தோண்டச்செய்வாயாக!'' என்று கூறினார். அரசனும் வசவதேவர் வார்த்தையை நம்பி, தோண்டுவதற்குக் கட்டளையிட்டான். உடனே, பிரகாசிக்கும் சூரியனோ, சிவபெருமானின் தோழனாகிய குபேரனின் புதைத்துவைத்த சம்பத்தோ என்று

சொல்லி வியக்கும்படியாக பொற்புதையல் பளிச்சிட்டது. அதைக் கண்டதும் விஜ்ஜல ராஜன் மிகவும் வியப்பும் மகிழ்ச்சியுமடைந்து, வசவதேவரை வணங்கி, "தூய்மையாளரே! உம்மை இரண்டாவது சிவம் என்று உலகத்தார் சொல்வதன் உண்மையை இன்றுதான் நான் உணர்ந்தேன்!" என்று சொல்லி, அந்தப் பொன்னையெடுத்து, ஏவலர்களை அழைத்துக் கணக்கிடச் சொன்னான். ஓலைச்சுருளில் எழுதியதைப் போல எண்பத்தெட்டுக்கோடிப் பொன் கணக்காக இருந்தது. அதைக் கண்டு அதிசயித்த அரசனும் அமைச்சர்களும் அவையோரும் வசவதேவரைப் போற்றிப் புகழ்ந்தனர். விஜ்ஜல ராஜன் வசவதேவரை நோக்கி, "ஐயனே! நீங்களே என் சதுரங்கச்சேனைகளையும் அடியேனையும் உறுதியான அன்புடன் நிலைபெறச் செய்யவேண்டும்!" என்று வேண்டினான். வசவதேவர் அவனை நோக்கி, "சிவபெருமானே மாபெரும் உலக முழுமையும் நிலைபெறச் செய்வதற்கு உரிய இறைவனாகும். ஆகையால் உன் ஒருவனைக் கருணை செய்து ஆண்டருள்வதோ அவருக்குக் கனமாகும்? ஒரு நல்ல வார்த்தை சொல்கிறேன். அதை நீ கேள். உன் மனதில் சிவபெருமானே இறைவன் என்று நிச்சயித்திருப்பாயானால், பூமியைச் சீர் திருத்தியாள்வது பாரமாகாது!" என்றார்.

விஜ்ஜல ராஜன் செருக்கடைந்து, "விருட்சங்களில் கற்பக விருட்சமும், மலைகளில் மேருமலையும், மிகவும் ஒளியுடைய மணிகளில் சிந்தாமணியும், சிறந்த பசுக்களில் தெய்வீகக் காமதேனுவும், தேவர்களில் சிவபெருமானும் போல நீரே எல்லா மந்திரிகளிலும் முதன்மையானவராக அழகு பெறுவீராக!" என்று சொல்லி, ஏராளமானப் பொருள்களை அவரிடம் வழங்கி, நீர் "சன்மார்க்கத்தையுடைய ஸ்ரீ பலதேவரதுத் திருமாளிகையிலேயே மேன்மையுடன் இருப்பீராக!" என்றான்.

வசவதேவர், அரசன் கூறியதை ஏற்றுச் சிவபக்தர்கள் புடைசூழ, தம் மாமனாரான ஸ்ரீ பலதேவரின் மாளிகைக்குச் சென்றார். சிவபூஜையிலும் சிவனைத் துதிப்பதிலும் அன்புடையவரான வசவதேவரை விஜ்ஜல ராஜன் சேர்ந்திருந்ததால் உலகமெங்கும் துக்கங்கள் ஒழிந்தன. தேவாராதனைகள் அதிகமாயின. அவிஸைக்கொண்ட ஆகுதிகளும் நிரம்பின. எல்லாச் செல்வங்களும் செழித்தன.

இவ்வாறு நாடு செழித்தோங்கியக் காலத்தில், வசவதேவர் நாள்தோறும் சிறந்த மஹாசிவராத்திரி விரதத்தையே அனுஷ்டிக்கலானார். சிவபக்தர்களே சிவபெருமான் என்று பாவிக்கும் மெய்யன்பும், சிவபக்தர்களது பிழைகளை மனத்தாலும் நினைக்காத சன்மார்க்கமும் தம்மிடமுள்ள பொருள்களைச் சிவபக்தர்களுக்கே வஞ்சனையின்றி வழங்கும் ஈகையும், பயத்தாலுங்

கூட முன்னொரு சொல்லும் பின்னொரு சொல்லும் சொல்லாத விவேகமும் நடுவு நிலை நீங்காத உறுதியும் சிவபக்தர் பிழை செய்யின் அப்பிழையைத் தம்முடையதாகவே பாவிக்கும் நற்குணமும் பிற சமயவாதிகளை வெல்லுதற்குரிய வலிமையும் ஜங்கமமூர்த்திகளை அவமதிக்கும் சொற்களைக் கேட்காத சன்மார்க்கமும், பிறவிகளுக்குக் காரணமானக் கர்மங்களில் சேராத அச்சமும், நரகவேதனைகளுக்குக் காரணமான பஞ்சேந்திரிய மார்க்கத்தாற் போகாத நினைப்பும், சொல்லுக்கேற்ப செயல் புரியும் நடத்தையும், ஜங்கமமூர்த்திகளின் மேன்மையை நிலை நாட்டும் வலிமையும் சிவபெருமானின் திருமேனியையே கனவிலும் தரிசிக்க விரும்பும் மெய்ஞ்ஞானமும், சிவபக்தர் ஓதுகின்ற ஞானநூல்களையே கேட்கும் பேராவலும் தூய்மையான ஜங்கமப் பிரசாதத்தையே ஏற்கும் பெரிய துணிச்சலும் அவர்களின் வார்த்தைக்கு எதிர்வார்த்தை சொல்லாத பயமும் சாசுவதரான ஜங்கமமூர்த்திகளே தம் பிராணலிங்கம் என்கிறக் கருத்தும் சிவபக்திப் பயிருக்கு வேலிபோன்ற ஜங்கமமூர்த்திகளின் மீது அன்பும், மோட்சம் இல்லை என்று வாதமிடுகிற அன்பரான நாஸ்திகரைக் கண்டாலே கோபமும், அடுத்தடுத்துத் துன்பங்களே வந்தாலும் ஜங்கமமூர்த்திகளையே வணங்கும் திறமையும் மனத்தில் அலிங்கிகள் பார்க்காத சிவலிங்கப் பூஜை செய்தலை மறைத்தலும், தலை இரண்டு துண்டாக அற்று விழுந்தாலும் சிவசிவ என்று உச்சரிக்கிற வார்த்தையும், நெற்றியிலே திருவெண்ணீறு அணிந்த சிவபக்தர்களை வணங்கும் கைகுவிப்பும், தவமும் ஆசாரமும் கொண்டு, வசவதேவர் வாழ்ந்துகொண்டிருந்தார். அந்தக் காலத்தில், அவருடைய புகழ் நாடெங்கும் பரவியது. அவரை அன்போடு வணங்க வருவோரும், அவரிடம் யாசித்து ஜீவிப்போம் என்று வருவோரும், வசவதேவரின் திருக்கரங்களால் பாதபூஜை செய்யப்பெறுவோம் என்று செல்வோரும், புத்தி பூர்வமாகத் தரிசித்தால் தம் பாவங்கள் தீரும் என்று நினைப்போரும் அதிகமானார்கள். எனவே, குதிரைகள், இரதங்கள், வண்டிகள், யானைகள், எருதுகள், பல்லக்குகள் ஆகியவற்றில் ஏறியமர்ந்து செல்வராயினர். சிரம், கழுத்து, மார்பு, அக்குள், கைகள் ஆகியவற்றில் சிவலிங்கதாரணம் செய்யப்பெற்றவர்களும் உருத்திராக்கங்களை குண்டலங்களாக அணிந்தோரும், உருத்திராக்க மாலைகளை அணிந்தோரும், சூலம், சக்கரம் தண்டம் முதலியவற்றைத் தரித்திருந்தோரும், காவியில் தோய்த்த ஆடைகள், கம்பளியாடைகளை உடுப்பவரும், தூய்யவெள்ளையாடைகளை அணிவோரும், கீளுடன் கோவணத்தை உடுத்துபவரும் லலாடம் முதலிய இடங்களில் தத்துவ சொருபமாகிய பால்போன்ற விபூதியைத் திருபுண்டரமாகத் தாரணஞ் செய்வோரும், ஸர்வாங்கமும் அழகாகும்படி விபூதியை உத்தூளகமாகத் தாரணஞ் செய்வோரும், மயக்கமற்ற மனத்துறவி

யரும் அலிங்கிகளின் பிக்ஷையை ஏற்காதோரும், சிவானந்தத்திலேயே சிந்தனையை உடையவர்களும் பரவசமடைந்த பிராணலிங்க நிஷ்டானுபவச் செல்வர்களும் அலிங்கிகளோடு பேசுதலும், தீண்டுதலும், நோக்குதலும், நீக்கியவர்களும் சிவ பெருமான் ஒருவனையேயன்றி, அரிபிரம்மாதியர்களென்னும் மற்றச் சிறிய தேவர்களைத் திரும்பியும் பார்க்காத திடச் சித்தமுடையோரும் மௌன நிலையை அடைவதற்குரிய ஞானசாஸ்திரங்களைப் படநஞ் செய்பவர்களும் யாத்ரிகர்களும் நான்கு வேதங்கள், இருபத்தெட்டுச் சிவாகமங்கள் ஆறங்கங்கள் பதினெண் புராணங்களாகிய இவற்றில் நிபுணர்களும், மெய்ஞ் ஞானத்தால் மேன்மையடைந்த ஆசாரியர்களும், சிவத்திகளையே பாராயணஞ் செய்வோரும், சிவமந்திரங்களில் மேன்மையுடையோரும் வீணை, யாழ் முதலியவற்றை வாசிப்பதில் நிபுணரும் தெலுங்கு, கன்னடம், ஆரியம் தமிழ்நாடு முதலிய நாடுகளிலிருந்து எழுந்தருளி வருகிற சிறப்பை வசவ தேவர் ஆலோசித்து, தம் திருமாளிகையையும் தெருக்களையும் அலங்காரஞ் செய்வித்தார்.

வசவதேவர் வாழ்ந்தக் கல்யாண புரியே கடல்போலவும் சிவஸ்வருபிகளான மாஹேஸ்வரர்களின் திருக்கூட்டமே ஆறுகள் போலவும் வந்து சேர்வதும், அவர்களை வசவதேவர் வணங்கி, தம் மாளிகைக்கு அழைத்துச் சென்று பொற்குட நன்னீரால் அவர்களுடையப் பாதங்களைக் கழுவி, மோக்ஷ பதவியை அனுக்கிரஹிப்பவர்கள் என்று பீடங்களில் எழுந்தருளிச் செய்து, விபூதியைத் தாரணம் செய்து, மலர்சூட்டி, அழகான தூபதீபம் காட்டி அம்மாஹேஸ்வரர்கள் செய்யும் சிவலிங்கப் பூஜைக்கு வேண்டியவை முழுமையும் தாமே செய்து, ஆழ்ந்த அன்புடன் அறுசுவை ஐவகை உணவுகளையும் உண்பித்து, சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து உபசரிப்பார். அவர்கள் உட்காரக் கட்டளையிடத் தாம் உட்கார்ந்து, பாவ விமோசனத்திற்குரிய அவர்களது பிரசாதத்தை ஏற்று, அவர்களுக்குத் தேவையானவற்றை விசாரித்து, திரவியம், தானியம் ஆடையாபரணங்கள், மாதர்கள், பசுக்கள், நிலங்கள், வாகனங்கள், ஊர்கள், சந்தனம் கற்பூரம் முதலியவற்றைத் தந்து, வணங்கி, அனுப்பிவைப்பார். தம் திருமடத்திற்கு எழுந்தருள்வதற்கு இசையாத மாஹேஸ்வரர்களுக்குத் திருவமுதினை காவடிகளில் மடிப்பு வஸ்திரங்களால் மறைத்துப் பக்தியுடன் முப்பொழுதும் கொடுத்தனுப்புவார். வாலமாதர்களின் வீடுகளை நீங்காத விடஜங்கமர்கள் பன்னிராயிரம் பேர்களுக்கும்கூட வழக்கமாக அவர்கள் வசிக்கின்ற வீடுகளுக்கு வேண்டிய செல்வங்களை அவ்வப்போது வழங்கி வந்தார். இவ்விதமாகச் சிவபக்தியும் சிவனடியார் பக்தியும் கொண்டு, அவர் வாழ்ந்துவந்தார்.

# 5. சென்ன வசவர்

வசவேசரின் தங்கையான நாகாம்பைக்கு மகன் ஒருவர் இருந்தார். அவர் வசவதேவரைப் போன்றச் சிவபக்தராவர். அவர் புண்ணியப் பாவங்களின் விரிவையெல்லாம் ஒழித்தவர். ஆணவம், காமியம், மாயை என்ற மும்மலங்களும் இல்லாத வர். லெளகீக விஷயங்களையே பேசாதவர். சராசரம் யாவற் றிலும் தத்துவப் பொருளான லிங்க ஸ்வரூபத்தையே பிரத் யக்ஷமாகப் பார்த்தவர். மெய்ஞ்ஞானத்தில் மேன்மையுடை யவர். அவர், யாவரும் விரும்புதற்குரிய மனை வாழ்க்கையில் லாதவர். பரமானந்த அனுபவத்தையுடையவர். மகத்துவ முடையதும் சாசுவதமுமாகியச் சிவபுண்ணியம் வாய்ந்தவர். அறிவாளர். *ஷட்வித அங்கஸ்தலத்திலும் ஷட்வித லிங்க ஸ்த லத்திலும் ஷடக்ஷரத்திலும் த்ரிவித லிங்கத்திலும் த்விதீயாக்ஷ ரத்திலும் ஐக்கியப்பட்டவர். அவர், ஞானயோகி. முக்காலத்

---

ஷடாக்ஷரம்—ஓம் நமசிவாய.

* ஷட்வித அங்கஸ்தலம்-1 பக்தஸ்தலம், மாஹேஸ்வரஸ் தலம் பிரசாதஸ்தலம். பிராணலிங்கஸ்தலம் சரணஸ் தலம், ஐக்யஸ்தலம்.

ஷட்விதலிங்கஸ்தலம்—ஆசாரலிங்கம், குருலிங்கம், சிவ லிங்கம், ஜங்கமலிங்கம் பிரசாதலிங்கம், மஹா லிங்கம்.

த்ரிவிதலிங்கம்—இஷ்ட, பிராண, பாவம்.

த்விதீயாஷரம்—ஹம் க்ஷம் (ஸோஹம்பாவனை)

சிவபுண்யம்—கொல்லாமை, பொறுமை, உண்மை உறல் பழிபாவத்துக்கு அஞ்சுதல், புண்ணியத்தில் இச்சை, மனம் முதலியவற்றை ஒடுக்குதல், கொடை, லிங்கார்ச்சனை, தவம் சிவத்தியானம் முதலியன.

தையுங் கடந்தவர். இஷ்டலிங்க பூஜையில் விருப்பமுடைய வர். தப்பிப்போகாத ஸோஹம்பாவனையில் நிலேத்தவர். அவர் கூடல சங்கமேஸ்வரத்தில் வசித்து வந்தார். அவர் வசவதேவரின் திருவடிகளே வணங்கவேண்டும் என்ற விருப் பத்தால், தெய்வீக சம்பத்தையுடைய கல்யாண நகரத்திற்குப் புறப்பட்டார். அவர் கல்யாண நகரத்தை யடைந்து வசவ தேவரின் திருவடிகளே வணங்கினுர். ஆனந்தக் கண்ணீர் மல்க, சென்ன வசவர் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தார். அப் போது வசவதேவர் அவரை "எழுந்திருக்ககக்கடவை" என் ருர். அப்படிக் கட்டளேயிட்டதும் சென்ன வசவதேவர், வச வேசரின் சீர்பாதங்களேப் பன்னீரால் கழுவி, விபூதி, மலர்கள் முதலியவற்றையும் அணிவித்து தூபதீபம் காட்டினுர். பிறகு இரு கரங்களேயும் முடிமீது குவித்து, "அருளார் அமுதே, சரணுர்த்தி! சிவபக்த பூஷணமே சரணுர்த்தி! கண்ணே, கண்மணியே, சரணுர்த்தி! வீரசைவச் சித்தாந்தத் தெளிவே, சரணுர்த்தி! ஸத்குருவே சரணுர்த்தி! எவ்விடத்தும் சிவபெரு மானுடன் செல்வோரே, சரணுர்த்தி! தர்மவழியே, ஞான விழியே! பழைமையான சிவாசாரத்துக்குக் காரணமே சர ணுர்த்தி,! மோட்சமார்க்கம் என்பது இதுவே என்று நிச்சய மாய் உபதேசிக்கவல்ல திருவாக்கினேயுடையவரே, சரணுர்த்தி! ஒப்பற்ற சைவ நிதியே சரணுர்த்தி, மதங்கொண்ட சமண ருக்கு யமனே சரணுர்த்தி! அடியேனது மேன்மையான ஸத் குருவே சரணுர்த்தி!' என்று சென்ன வசவர் தோத்திரஞ் செய்தார். அப்போது அங்கிருந்த ஜங்கம மூர்த்திகள் "பெருமை பொருந்திய வசவேசரது சன்மார்க்கம் யாவற்றை யும் நன்குணரவல்லவர் இந்தச் சென்ன வசவரேயாவர். வேறு ஒருவரும் வல்லவரல்லர்." என்று தம்க்குள் புகழ்ந்தனர். "இந்த இரண்டு சிவனடியார்களின் சன்மார்க்கத்தை உணர்ந்து சொல்ல வல்லவர் சிவபெருமானே!" என்று அவர் கள் பாராட்டினர்.

# 6. அல்லமப் பிரபு

மேன்மை பொருந்திய சிவபெருமானே, அல்லமப் பிரபு தேவர் என்ற திருப்பெயருடன் அவதரித்தார். அவர் மனிதர் களின் மனத்திலுள்ள சந்தேகங்களையெல்லாம் அறிந்து கூறும் வல்லமையுடையவர். அவர் புண்ணிய பாபகர்ம மொழித்தவர். தொலைவிலுள்ள பொருள்களை அருகில் பார்க்கும் ஆற்றல் வாய்ந்தவர். அனைவரும் மதித்து விரும்பும் பொன்னை, ஓடென்று பழிப்பவர். பூமியில் நடக்காதவர். தம் நிழலைத் தாம் அறியாதார். வேத சிவாகமங்களில் வல்லவர். திருக்கரத்தில் சிவலிங்கமும் கரிய சிகையும் நெற்றியில் திரி புண்டரமாக அணிந்த விபூதியும் சிவயோகச் சமாதி நிலையில் திருவுள்ளமும் கொண்டவர். அவரைத் தனவந்தர் என்றோ, அத்வைதர் என்றோ நிர்ணயிக்க முடியாது.

அவர் சஞ்சாரஞ் செய்யும் காலத்தில் மரங்கள், வனங்கள், அலைகளையுடைய பெருங் கடல்கள், முதலியன அவரை வணங்கி, விலகிச் செல்லும். அவர் விரும்பிய வடிவமெடுத்து ஆகாயம் எல்லாவற்றையும் மறைப்பார். அணுரூபமாவார். நீர் மேல் நடப்பார். மேகமண்டத்தில் சஞ்சரிப்பார். தேவர்கள் செல்ல முடியாத இடங்களில் சஞ்சரிப்பார்.

இத்தகைய அற்புதச் சக்திகளைக் கொண்ட அல்லமப் பிரபு தேவர், வசவதேவர் மீதுள்ள பக்தியினால் கல்யாணபுரியை அடைந்தார். அவரது வரவையறிந்த வசவதேவர் அவரை வரவேற்று உபசரித்து, உணவருந்த அழைத்து, உணவினைக் கவளங் கவளமாக உருட்டி அல்லமப் பிரபுவின் கரங்களில் அன்புடன் வழங்க, அவரும் அதை அன்புடன் ஏற்று அருந்தினார். லக்ஷத்து எண்பதினாயிரக்கணக்கான ஜங்கமமூர்த்திகளுக்காக சமைத்திருந்த திருவமுது கறியமுதுகள் முதலியவற்றை முறைப்படி அல்லமப் பிரபு தேவருக்கு, வசவதேவர் சமர்ப்பித்தும், அவரது பசிதீரவில்லை; அவர் "இன்னமும் அன்னம் கொடு! கொடு!" என்று கேட்டார். வசவதேவர் தம்மையே மனத்திடத்துடன் அல்லமப் பிரபு தேவருக்கு நிவேதனம் செய்தார். அதைக் கண்ட அல்லமப் பிரபுதேவர், மிக

வும் மகிழ்ந்து "கணநாதனே! நீ நல்லவன், நல்லவன்! சிவ பக்திக்கு விதை போன்றவனே நீ நல்லவன் நல்லவன்! அனை வரும் தேடுதற்குரிய இரண்டாம் சிவமே நீ நல்லவன், நல்ல வன்! ஸ்ரீ வசவேசனே! பூலோக ருத்திரனே! மைந்தனே! மருக்கொழுந்தின் பரிமளம் போலவும் மாணிக்கத்தின் ஒளி யைப் போலவும் கரும்பில் சுரக்கின்ற இரசம் போலவும் தேவா மிருதத்தைவிட்டு நீங்காத மதுரம் போலவும் நீ உடல் எடுத்த அந்த நாளிலேயே, உன்னுடன் கூடவே ஒப்பற்ற பக்தி மார்க்கமும் சாந்தகுணமும் ஞானமார்க்கமும் அழியாத சிவா ஆசாரமும் பிறந்தனவோ! நெருப்பிற்கு அதன் உடல் முழு வதும் வாயானது போலவும் காற்றுக்கு அதன் உடல் முழுவ தும் தலையானது போலவும், நீரின் உடல் முழுவதும், காலா னது போலவும், உன் உடல் முழுவதும் பக்தியாகவே இருக் கிறது!" என்று வசவதேவவரைப் புகழ்ந்து பாராட்டினார். வச வர், அவரை வணங்கித் துதித்து "ப்ரம்மானந்தனே! குண தீதனே! சப்த ஸ்வரூபமே! தத்துவப் பொருளே! தேவரீருக் குத் தக்க திருவமுது படைக்க வல்லவன் இந்த எளியனாகிய யானோ? அந்தக் காலத்தில் ஒருசமயம், உமாதேவியார் சிவபெருமானது கணநாதருக்குத் திருவமுது படைப்பேன் என்று சொல்லி, சிவகணநாதரை அழைப்பித்தாள். அவர்கள் அனைவருமே சிவ ஸ்வரூபமாக இருந்ததைக் கண்ட உமை யாள், இவர்களிலே சிவபிரான் யார் சிவகணநாதர்கள் யார் என்று சந்தேகமடைந்தாள். அவளது சந்தேகத்தை உணர்ந்த சிவபெருமான், கணநாதர்களைப் பார்த்தார். அவரது திருப்பார்வை பட்டவுடனேயே, அவர்கள் சிங்க முகமுடையோராகவும் சரபக்ஷிகளின் முகமுடையவராகவும் யானை முகமுடையவராகவும் எருமை முகமுடையவராகவும் மான், ஆடு, பசுபோன்ற முகமுடையவராகவும் பலவித மிருகங்கள், பறவைகளின் ஆகியவற்றின் முகங்களுடன் தோற்றமளித்தார்கள். அதை கண்ட உமாதேவி. "நமது மனத்தில் உண்டான சந்தேகத்தை உணர்ந்த சிவகணநாதர் களே இத்தகைய ரூபங்களை எடுத்துக் கொண்டார்களோ என்று திருவுள்ளம் மகிழ்ந்து, அவர்களுக்கு அன்னம் படைக்க விரும்பி, சிவபெருமானை அணுகி, வேண்டினாள். அதற்குச் சிவபெருமான், "நல்லது படைக்கக் கடவை!" என்று கட்டளையிட்டார். உமையவள் மகிழ்ச்சியுடன் அவரை வணங்கிவிட்டு, அதிவிரையில் சமுத்திர ஜலமும் பற்றுத பெரிய மிடாக்களில் எல்லாம் அழகிய முல்லையரும்பு போன்ற திருவமுதையும் குறைவற்ற கறிவகை, பணியார வகைகளையும் சமைத்தாள். மேலான பழவகை, நெய், பால் வகை பணி யார வகையற்றையும் மலைகளைப் போலவும் கடல் போலவும் குவிக்கச் செய்தாள். அருமையான குடிநீரையும் ஏற்படுத்தி விட்டு, திருவமுது படைப்பதற்காக ஆவலுடன் இருந்தாள்.



அப்போது, வறுமை என்பதில்லாத சிவகணநாதர்கள், குறள் வடிவான கணநாதன் ஒருவனை அழைத்து, "அன்னம் சமைத்தாகிவிட்டதா எனக் கேட்டு வா!" என்று அனுப்பி வைத்தார்கள். அந்தக் குறுங்கணநாதன், உமையாளிடம் சென்று, "எம்பிராட்டியே! அன்னம் சமைத்தாகி விட்டதா?" என்று கேட்டார். அதற்கு உமையாம்பிகை, "சமைத்தாகி விட்டது!" என்ருள். உடனே குறுங்கணநாதன், "தாயே! கடும் பசியையுடையவனுகிய அடியேன், சோர்வாக இருக்கிறேன். ஆகையால் அடியேனுக்குக் கொஞ்சம் அன்னம் படையுங்கள்!" என்று விரும்பிக் கேட்டான்.

உடனே உமாதேவி, அந்தக் குறுங்கணநாதனை அவ்விடத்தில் அமர்த்தி, புதிதான திருவமுது, கறியமுது, குடிநீர் முதலியவற்றைப் பரிமாறினுர். அப்போது அந்தக் குறுங்கணநாதன் ஒரே கையினுல் கைலாய மலைபோலக் கவளங் கவளமாக அங்கிருந்த அன்னம் முழுவதையும் சாப்பிட்டுவிட்டான். அதைக் கண்டு உமாதேவி ஆச்சரியமடைந்தாள். சிவகணநாதர்களில் ஒரு குறுங்கணநாதனுடையக் கொடிய பசியே இப்படியிருக்குமானுல், பெரிய கணநாதர்களின் செய்கை எப்படியிருக்குமோ என்று உமையாள் யோசித்து, சிவபெருமானிடம் சென்று, அங்கு நடந்த அற்புதத்தைக் கூறினுள். அவளைச் சிவபெருமான் உற்றுப் பார்த்து, "தேவி! என் கணநாதர்களின் மகிமையைக் கேள். என் உடல் கணநாதரின் உடம்பாகும். அவர்களது உடல் என் உடல். என் பிராணன்

அந்தக் கணநாதர்களுக்கு ஆதாரம். அவர்களது பிராணன் எனக்கு ஆதாரமாகும். அந்தக் கணநாதர்கள் சற்று நினைத்தாலே, சகல பிரம்மாண்டங்களும் உண்டாகும்; அழியும். அவர்கள் கண்ணிமைத்தால் எங்கும் அழிவுண்டாகும். ஆகையால் நம் அடியார்களின் பெருமையை யாராலும் சொல்ல இயலாது!'' என்றார். அவரை உமாதேவி வணங்கி, ''இவை எல்லாம் உம் திருவிளையாட்ல்களே!'' என்று சொல்லி அமுது படைக்காமல் இருந்துவிட்டாள். அப்படியிருந்து எளியேனாகிய நானே தங்களுக்கு வேண்டியத் திருவமுதுப் படைக்க வல்லவன்?'' என்று வசவதேவர் அல்லமப் பிரபுவிடம் கூறினார். பிறகு ''எல்லாம் உம் திருவிளையாடல்!'' என்று சொல்லி, அல்லமப் பிரபுவை வணங்கினார். உடனே, அவர் வசவதேவரைத் தம்மிரு கரங்களாலும் தூக்கித் தழுவி, ''இந்த உலகில் உனக்கு ஒப்பான பக்தர் ஒருவரும் இல்லை'' என்று சொல்லி, காமதேனுவையும் விரும்பியவற்றையெல்லாம் கொடுக்கும் சிந்தாமணியும், சங்கநிதி, பதுமநிதி முதலியவற்றையும் கற்பக விருட்சத்தையும் அன்போடு கொடுத்து! ''இனி உம் மனத்தில் நினைத்தவை முழுவதும் பழுதுபடாமல் சித்தியாகும்படி அனுக்கிரகம் செய்தோம். உம் வாய்ச் சொற்கள் யாவும் பலிக்கும். நீர் தொட்டவை பொன்னாகும். இந்த நாளைப்போல எந்த நாளும் நீர் நிலைபெற்றிருப்பீர்! சிறந்த ஜங்கம மூர்த்திகள் கோபித்துச் சொல்லும் சாபமொழிகளைக்கூட நீர் பொறுத்துக் கொள்ளவும் சகல சித்திகளையும் நாம் அருள் செய்தோம்'' என்று கூறிவிட்டு, அல்லமப் பிரபு தேவர் அங்கிருந்து மின்னல் மறைவதுபோல் மறைந்தார். வசவதேவர் அந்த அற்புதத்தைக் கண்டு வியந்து, வணங்கி, சிவபெருமானிடம் அன்பு பூண்டு வாழ்ந்து வரலானார்.



## 7. கள்ளர்களை உபசரித்த கதை

ஒருநாள் வசவதேவரின் திருமடத்தில் சன்மார்க்கத்தில் ஈட்டியப் பொருள்களைத் திருடுவதற்காகச் சில திருடர்கள் முயன்றார்கள். மடத்தினுள் நுழைய முடியாத நிலையில் அவர்கள் சிவாசாரத்தில் திளைத்த ஜங்கம மூர்த்திகளைப்போல் மாறுவேடம் பூண்டுபோனால் தங்கள் திருட்டுத்தனத்திற்குப் பங்கம்நேரிடாது என்று நினைத்துக் கறுத்த கத்தரிக்காய்களை லிங்க வஸ்திரங்களில் முடிந்து கண்டங்களில் தாரணம் செய்து கொண்டார்கள். உருத்திராக்க மாலையையும் விபூதியையும் அணிந்துகொண்டார்கள். அவர்கள் ஒன்றுய்ச் சேராமல், தனித் தனியாக, ஜங்கம மூர்த்திகள் உணவருந்தும் நேரத்தில் வந்து சேர்ந்தார்கள். ஜங்கம மூர்த்திகளைத்தவிர ஒழுக்கங் கெட்டவர்கள் யாரும் தம் மடத்திற்கு வரமாட்டார்கள் என்று நினைத்த வசவதேவர், கபட வேடதாரிகளான அத் திருடர்களை ஜங்கம மூர்த்திகளாகவே நினைத்து, "சரணார்த்தி!" என்று சொல்லி, கைகுவித்து அவர்களை வரவேற்றார். அவர்களைப் பந்தியில் உட்காரவைத்து ஜலம், விபூதி, கந்தம், மலர்கள் முதலியவற்றைக் கொடுத்து, "லிங்க பூஜை செய்யுங்கள்!" என்று விண்ணப்பம் செய்தார். அதைக் கேட்ட அத்திருடர்கள் மிகவும் துக்கமடைந்து, உடல் வியர்க்க, மனம் பதற, முகம் சோர்ந்து, "நாம் இங்கு வந்து சிக்கிக்கொண்



டோமே, நமக்கு மரண காலம் வந்துவிட்டதே!'' என்று வருத்தமடைந்து ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துப் பதறினார்கள்.

பின்னர், அக் கள்ள ஜங்கமர்களே சிவபக்தர்களானார்கள். ஸ்ரீ பஞ்சாக்ஷரீ மஹா மந்திர உபதேச முறைகளை முறைப்படிக் கற்றார்கள். வீர சைவ மார்க்கத்தின் வேதாகம முறைகள் யாவற்றையும் தெளிவாகத் தெரிந்துகொண்டு மேன்மையடைந்தார்கள்.

வசவதேவரின் பாவநாச கடாட்சத்தால் கத்தரிக்காய்கள் இலிங்கங்களாயின. அதைக் கண்டு வியந்து பிரமித்தக் கள்ளர்களாக இருந்த அவர்களுக்குச் சிவனடியார் சிலரின் கதைகளை, வசவதேவர் சொல்லத் துவங்கினார்.

## 8. வணிகமல்லையர் கதை

வைசிய குலத்தில், மல்லையர் என்று ஒருவர் இருந்தார். அவர் சிவபெருமானைத் தரிசிக்காமல் சாப்பிடாத நியமத்தைக் கொண்டிருந்தார். ஒருசமயம் வியாபார விஷயமாய் அருகிலுள்ள ஓர் ஊருக்குப் போயிருந்தார். அங்கு இரவு நேரமானதும் அவருக்குப் பசியெடுத்தது. சிவன் கோயிலைக் காணாததால் துக்கமடைந்தார். அப்போது அவருடன் இருந்த அவரது மைத்துனர், மல்லையர் சாப்பிடாவிட்டால் நாமும் உணவருந்த முடியாதே என்பதற்காக யோசித்தார். உடனே, ஊருக்குப் பக்கத்திலிருந்த ஒரு புதரில் தானியம் அளக்கும் ஒரு வள்ளத்தைக் கவிழ்த்து வைத்து, கோயிலைப் போலத் தோற்றமளிக்கப் புற்களையும் மூங்கில்களையும்கொண்டு கூரை வேய்ந்தார். பிறகு மல்லையரிடம் வந்து, "நான் ஒரு சிவலிங்கப் பெருமானைப் பார்த்தேன். நீங்களும் தரிசனம் செய்ய வாருங்கள்" என்று அவரைத் தன்னுடன் அழைத்துச் சென்றார். அவரும் தன் மைத்துனருடன் சென்றார். மைத்துனர் தீபம் ஏற்றிக் காண்பித்தார். மல்லையர் பூமியில் விழுந்து சாஷ்டாங்கமாக அந்தச் சிவலிங்கத்தை வணங்கினார். அந்தச் சிவாலயத்தை வலம் வந்து வணங்கி உத்திரவு பெற்றுத் திரும்பினார்.

தம் மனத்தில் கொண்ட விரதம் நிறைவேறியதால் மன நிம்மதியடைந்த மல்லையர் ஆனந்தமாக உணவருந்தினர். அப்போது, அவரது மைத்துனர் அவரைப் பார்த்து நகைத்து "இந்த மல்லையர் மிகவும் புத்திசாலி. நான் புதரில் கவிழ்த்து வைத்த வள்ளத்தை வணங்கி வந்து, தமது பசியைத் தீர்த்துக்கொண்டார்!" என்று பரிகாசம் செய்தார்.

பிறகு அவர் மல்லையரை நோக்கி, "இப்போது தானியத்தை அளக்க வள்ளமில்லை. ஆகையால் நீங்களே சீக்கிரமாகப் போய், அந்தப் புதரில் கவிழ்த்து வைத்திருக்கும் அந்த வள்ளத்தைக் கொண்டு வந்து விடுங்கள்!" என்றார்.

அதைக் கேட்டதும் மல்லையருக்குக் கோபம் மூண்டது. "நீர் பொய் சொல்கிறீர். பாவ வார்த்தைகளைச் சொல்கிறீர். சிவ, சிவா!" என்று தம் இரு காதுகளையும் பொத்திக்கொண்டு "துஷ்டரே, இவ்வாறு நிந்தை பேசுவதற்குக் காரணம் என்ன? என்னுடன் வாரும்! நான் அந்தச் சிவலிங்கப் பெருமானைக் காட்டுகிறேன்" என்று சொல்லித் தம் மைத்துனனை அழைத்துக்கொண்டுப் புதர் இருக்குமிடத்துக்குச் சென்றார். அங்கே அந்தப் புதரானது பெரியதொரு ஆலயமாகிக் கோபுரங்கள், மதில்களுடன் காணப்பட்டது. வள்ளமே சிவலிங்கமாக விளங்கியது. விளக்குகள் சுடர்விட்டுப் பிரகாசித்தன. பொதுமக்கள் அந்த ஆலயத்தை வழிபட்டுக் கொண்டிருந்தார்கள். மல்லையரின் மைத்துனர் கவிழ்த்துவிட்டு வந்த வள்ளத்தின் பெயர்க் காரணத்தாலேயே, அந்தக் கோயிற் சிவபெருமானை வள்ளேஸ்வரர் என்று பூலோகத்தார் இன்னும் போற்றுகிறார்கள். ஆகையால் அன்பு ஒன்றே மோட்சத்திற்குக் காரணம். இதுபோலவே, வேறொரு சிவபக்தர் இருந்தார். அவர் பெயர் காட்டக் கோட்டையர்.

---

## 9. காட்டக்கோட்டையர் கதை

---

**கா**ட்டக்கோட்டையர் என்பவர் ஆடுமாடுகளை மேய்ப்பவர். ஆயினும் அவர் ஒரு சிறந்த சிவபக்தர். அவர், ஆடுகளின் சாணம் பூமியில் விழுவதற்கு முன்பாக அதைத் தம் கைகளால் ஏந்திக்கொள்வார். பிறகு காட்டின் ஒரு பக்கத்தில் மேடையமைத்து அந்தச் சாணத்தைச் சிவலிங்கத்தைப்போல அமைத்து எழுந்தருளச் செய்வார். பிறகு பசுக்களின் பாலைக்

கறந்து, நல்ல குடங்களில் நிறைத்து, அந்தப் பாலைப் பக்தி யுடன் சிவலிங்கப் பெருமானின் அருகே வைப்பார். அன்று மலர்ந்த மலர்களைக் கொய்து வருவார். அம்மலர்களைச் சிவலிங் கப் பெருமானுக்குச் சாற்றுவார். பிறப்பு இறப்புக்களில் ஒழிக்க வல்லப் பெருமானுக்குப் பாலாபிஷேகம் செய்வார். பிறகு, மேலும் மலர்களைச் சூட்டி மகிழ்வார். ஆனந்தக் கண்ணீர் மல்க, வேய்ங்குடின் எடுத்து, நிரம்பிய மானத்தோடு சிவகீர்த் தனைகளை வாசிப்பார். ஆடுவார். வணங்குவார்; வலம் வரு வார். மெய்ச்சிலிர்க்கப் பெருமூச்செறிவார். போற்றிப் புகழ்வார்.

இவ்விதமாகக் காட்டக்கோட்டையர் பூஜை செய்து வரும் போது, அவருடையத் தந்தை வழக்கம் போலக் கறந்துவரும் பாலின் அளவு குறைவதைக் கண்டார். அதற்குக் காரணம் என்னவென்று அறிவதற்காக, பசுக்கள் இருக்கும் பகுதியில் ஒரு பக்கமாக மறைந்திருந்தார். அவர் பதுங்கியிருப்பதை அறியாதக் காட்டக்கோட்டையர் வழக்கம்போலத் தம் சிவ பூஜையில் முயற்சி செய்வாராயினர்.

இவ்வாருகப் பால் முழுவதையும் இந்தக் காட்டக்கோட் டையன் வீணுக்குகிருனே என்று அவரது தந்தை, சிவலிங் கத்தை உதைத்தார். உடனே கோபங்கொண்டக் காட்டக் கோட்டையர், தம் கோடரியைக்கொண்டுத் தம் தந்தையின் தலையைத் துண்டித்துவிட்டார். ஒரே வெட்டில் தந்தையின் தலை பூமியில் உருண்டது.

அவர் இறந்தார். இதைக் கண்ட தேவர்கள் அதிசயித் துப் பூமாரி பெய்தனர். சிவபக்தர்கள் துதித்தனர். இந்நிலை யில் சிவபெருமான் விருஷப வாகனத்தின் மீதுத் தோன்றி, இறந்துகிடந்தக் காட்டக்கோட்டையனின் தந்தையின் மர ணத்தை நீக்கிக் காட்டக்கோட்டையரையும் கைலாயத்தில் வாழச்செய்தார்.

இழிவான ஆட்டுச் சாணமே மேலான சிவலிங்கமாகப் பூஜித்தக் காட்டக்கோட்டையரின் கதை இதுவாகும். இது போலவே, பாவூர் என்ற க்ஷேத்திரத்தில் எழுந்தருளியிருந்த பொம்மதேவர் என்பவர் ஒரு சமயம் பரசமய வாதச் சண் டையின் போது, சோளமணிகளைச் சிவலிங்கங்களாகச் செய்தார்.

ஆகையால், சிவனடியார்களின் பெருமை பெரிது என்று வசவதேவர் கூறினர். இவ்வாறு சிவபெருமானின் மகிமையை வசவதேவர் நிலைபெறச் செய்து வரும்போது, இந்தச் செய்தியை அறிந்த விஜ்ஜலராஜன் மனத்தில் பொருமை கொண்டான்.

## 10. வஞ்சனை வடிவமாதவர் கதை

வசவதேவர் கூறிய சிவபெருமானின் மகிமையை பரிசோதிக்க விரும்பிய விஜ்ஜலராஜன், வஞ்சகமாய் மண்ணாலும் மரத்தாலும் கணக்கற்ற ஜங்கம மூர்த்திகளைப்போலச் செய்விக்கக் கட்டளையிட்டான். அப்பதுமைகள் தயாரானதும், அவற்றையெல்லாம் ஒரு காட்டில் சேரவைத்து, சிவானுக்கிரகத்தையுடைய வசவதேருக்கு விஜ்ஜலராஜன் செய்தி அனுப்பினான்.

அதைக் கேட்டவுடன், வசவதேவர் ஸத்வகுணத்துடன், சென்றார். வஞ்சனை மாதவக் கோலங்களைப் பார்த்தார். "ஜங்கமர்கள் இவர்களே!" என்று நினைத்து, பக்தியுடன், "சரணார்த்தி!" என்று சாஷ்டாங்கமாக வணங்கி, "தெய்வத் தன்மையுடைய ஜங்கமர்களே! அன்னம் உண்ண எழுந்திருங்கள்" என்று மண்ணாலும் ம்ரத்தாலும் விஜ்ஜலராஜன் செய்திருந்த சிவனடியார்களை எழுப்பினார்.

உடனே, அவர்களது பதுமைகள் அனைத்தும் உயிர் பெற்று அசைந்தன. ஞானம் அடைந்துணர்ந்தன. கண்கள் பெற்றுப் பார்த்தன. "ஹரஹரா!" என்று வானதிர கோஷித்துத் தத்தமது இருக்கையினின்று எழுந்து போயின. வசவதேவரும் அச்சிவனடியார்களைப் பின் தொடர்ந்தார். அதைக் கண்டதும் அரசனின் புத்தி மயங்கியது. அவன் அரண்மனைக்குச் சென்றான். கல்யாண நகர மக்கள் அனைவரும் வசவதேவரை வந்து வணங்கி, "தாங்கள் நிகழ்த்திய இத்தகைய மகத்தான செயலைச் செய்யவல்லவர் யார்?" என்று துதித்தார்கள். தேவர்கள் மலர்களைச் சொரிந்தனர்.



# 11. வங்கையர் கதை

இஷ்டலிங்கப் பெருமானுக்கு வசவதேவர் மகிழ்ச்சியுடன் எண்ணெய்க்காப்பிட்டு, அதன் பிறகு குளிர்ச்சியாகத் தம் தலைக்கும் எண்ணெய்க் காப்பிட்டுக் கொண்டிருக்கும்போது, ஜங்கமமூர்த்தி ஒருவர் வந்தார். வந்தவர், வசவ தேவரை நோக்கி, "நாம் லிங்க பூஜையில் நாள்தோறும் குறுணி கணக்குள்ள முத்து மாவினால் மகிழ்ச்சியுடன் விரதமாகக் கோலம் போட்டுக் கொள்வோம். ஆகையால் ஒரு வருஷத்திற்குப் போதுமான முத்துக்களைத் தருக!" என்று கேட்டார். உடனே வசவதேவர், தமக்கு அருகிலிருந்த சோளக்குவியல்களைக் கிருபையோடு பார்த்தார். அந்தப் பார்வையிலேயே அவை முத்துக்களாகிச் ஜொலித்தன. அப்போது வசவதேவர், "சுவாமி! நீர் மனதில் கொண்டுள்ள குறுணிக்கணக்கே வேண்டியதில்லை. முத்துக்குவியல்களாக இருக்கும் இந்தக் குவியல்களையெல்லாம் பெற்றுக்கொண்டு போகலாம்!" என்று சொல்லி, அம் முத்துக்களை அநேக எருதுகள் மீதும் யானைகள் மீதும் ஒட்டகங்கள் மீதும் பொதி பொதியாக ஏற்றி அவரை வணங்கினார். ஜங்கமரும் அவற்றை பெற்றுக்கொண்டு, மகிழ்ச்சியுடன் சென்றார். அப்போது அங்கிருந்த பெரியோர்கள் அதிசயித்தனர். அவர்களில் ஒருவர் ஒரு கதையைச் சொன்னார். அந்தக் கதை, "முன் ஒரு காலத்தில் வங்கையர் என்பவரின் திருமடத்திற்கு, ஜங்கமர் ஒருவர் நள்ளிரவில் வந்து, பக்தனே! நாம் ஒரு சிறந்த விரதத்தை மேற்கொண்டு இருக்கிறோம். அதாவது புதியதும் சிறந்ததுமான பசுவின் பாலும் சுத்தமும் நமக்கு எதிரே கொய்ததுமான வில்வ பத்திரமும் கொண்டு நாம் சிவபெருமானுக்கு அபிஷேகம் செய்து அர்ச்சனை செய்து பூஜிப்போம். இவ்விதம் பூஜை செய்யாமல் நாம் உண வருந்துவதில்லை. ஆகையால் நீங்கள் அவற்றை எனக்குத் தரவேண்டும்" என்று வேண்டினார். அந்த அகால வேளையில் அவையிரண்டும் இல்லாததால் நங்கையர் ஜங்கமரை வணங்கி, தம் திருமடத்திலிருந்த மலட்டுப் பசுவைக் கறந்தார். உடனே ஒரு குடம் நிறையப் பால் கறந்தது. அந்த

மலட்டுப் பசுவைக் கட்டியிருந்த தூணானது வில்வ மரமாகி இலைகள் துளிர்த்தது. வங்கையர் அவற்றைப் பறித்து, ஜங்கமரின் சிவபூஜைக்குக் கொடுத்தார்'' என்று உலகத்தார் சொல்வார்கள். இந்த நாளில் வசவதேவர் தம் பார்வையாலேயே சோளக் குவியலை முத்துக் குவியலாக்கியதை நமது கண்ணெதிரில் நாமே கண்டோம்.'',

## 12. சித்தராமையர் கதை

ஒருசமயம் வசவதேவர், விஜ்ஜலராஜனின் அரண்மனைக்குச் சென்றிருந்தார். அவர் மஹாசபையை அடைந்து, தாம் மேற்கொண்ட பணிகளைச் சொல்லும்போது, தம் திருமுடியின் மீது ஒரு கையை வைத்து அழுத்திக்கொண்டு, மற்றொரு கையால் பூமியை அழுத்தி ''பெண்ணே, பயப்படாதே!'' என்று சொல்லி மேலே தூக்கி, ''விழா நில்!'' என்று நிறுத்தினார். இந்தச் செயலைக் கண்ட அரசனின் அமைச்சர்களும் மற்றவர்களும் வியந்தனர். அப்போது அரசன், வசவதேவரை நோக்கி, ''வசவேசரே! இத்தகையச் செயலுக்குக் காரணம் என்ன?'' என்று கேட்டான்.

அதற்கு வசவதேவர் அரசனுக்குப் பதில் சொல்லாமல் சிறிதுநேரம் மௌனமாக இருந்தார். பிறகு ''அரசே! சன்மார்க்கத்தில் மேன்மையடைந்துள்ள சொன்னலாபுரம் என்ற க்ஷேத்திரத்தில் கபிலேசர் என்ற சிவபெருமானை, ஒரு சிறந்த ஜங்கமர் பதினாயிரக்கணக்கான குடங்கள் நிறைந்த பாலைக்கொண்டு வந்து அபிஷேகம் செய்தார். அந்தப் பாலானது நாடு முழுவதும் பரவி, தெருவெல்லாம் வெள்ளமாகிச் சேறாயிற்று. அவ்வீதிகளில் ஒன்றின் வழியாக, இடைச்சி ஒருத்தி தன் தலைமீது மோர்க்குடம் ஏந்தி விற்றுவந்தாள். தெருவில் உள்ள சறுக்குகின்ற சேற்றில் அவள் வழுக்கி விழும்போது மற்றவரை நினையாது, ''வசவண்ணனே!'' என்று வருந்தியழைத்தாள். அதனாலேயே யாம் அவள் பூமியின்மீது விழுவதற்கு முன்னதாகவே அவளைத் தூக்கி நிறுத்தினோம். நடந்தது இதுதான்!'' என்றார். அதைக் கேட்டதும் விஜ்ஜலராஜன் மிகவும் வியப்படைந்து தன் ஊழியர்களை அழைத்து,

"நீங்கள் இப்போதே சென்று அந்த இடைச்சியை இங்கு அழைத்து வாருங்கள்" என்று கட்டளையிட்டான். ஊழியர்களும் விரைந்து சென்று, சொன்னலாபுரத்தையடைந்து அந்த இடைச்சியைத் தேடிக் கண்டார்கள். அவள் இடது உள்ளங்கையில் பொருந்திய சேற்ருேடு மோரைச் சுமந்து திரிந்தாள். மான்விழி போன்ற கண்களையும் நெருங்கிய தனங்களையும் கொண்ட அந்த இடைச்சி விஜ்ஜலராஜனின் எதிரில் கொண்டு செல்லப்பட்டாள். அவளிடம் மன்னன் நடந்ததைக் கேட்டான். அவள் உண்மையை மறைக்காமற் சொன்னுள். அதற்கு அரசன், "நல்லது! நீ வசவேசரின் மகத்துவத்தைக் கருதுவதற்குக் காரணம் என்ன?" என்று கேட்டான்.

"அரசே! சொன்னலாபுரம் என்ற க்ஷேத்திரம், ஸ்ரீசைலத்தைப் போன்ற முக்திக்குரிய புனித க்ஷேத்திரம். அங்கு மந்திரபூர்வமாகச் சிவலிங்கப் பெருமானை பிரதிஷ்டை செய்து, திருவாலயத்தையும் கட்டுவித்து, அதற்குரிய திருவிழாவைச் சித்தராமையர் என்பவர் சிறப்பாக நடத்துவதாக ஊரெங்கும் சொல்லிக் கொண்டிருந்தார்கள். எனவே, அன்றையத் தினமே நானும் ஊர்ஜனங்களுடன் போனேன்.

"அந்த அழகிய சொன்னலாபுரியில் நுழைந்து, சிவாலயத்தில் சேர்ந்தவுடன் சித்தராமையர் என்ற உண்மையான ஜங்கமர் ஒருவர், நெற்றிக் கண்ணுடையவராயும் திருமேனியில் நிழல் படராதவராயும் திருவடிகள் பூமியில் தேயாமலும் நின்றிருப்பதைக் கண்டு பக்தர்கள் எல்லாம் அவரை வணங்கித் தொழுதனர்.

"அந்தக் கிருபா மூர்த்தியாகிய சித்தராம தேவர், சிவபெருமான் வீற்றிருக்கும் ஸ்ரீ மகா கைலாயத்திற்குத் தம் சிவயோகத்தால் நாள்தோறும் போவார். சிவாநுபவச் சேவை செய்து திரும்பி வருவார். ஆகையால் அந்தச் சிவலோகத்திலுள்ள இந்த வசவதேவரின் பெருமையைக் கேட்போம் என்று துணிந்து, "ஸ்வாமி! வசவதேவர் பக்தியுடன் பூமியில் எழுந்தருளியிருப்பதைப்போலவே, கைலாசத்திலும் எழுந்தருளியிருப்பார் என்று மேலோர்கள் சொல்வார்கள். பேரின்பச் சுகாநுபவத்திற்கு இடமான ஸ்ரீமகா கைலாசத்திற்கு பிரம்ம, விஷ்ணு முதலிய தேவர்களாலும் போகமுடியாது என்பார்கள். ஆகையால் சிவபெருமானின் மகா கைலாயத்தில் வசவ தேவர் எழுந்தருளியிருக்கிருரா என்பதை அறிந்து சொல்லவேண்டும்" என்று சிவனடியார்கள் கேட்டார்கள்.

அதற்கு சித்தராமையர், "இன்றையத் தினம் ஸ்ரீமகா கைலாசத்திற்குப் போய், சிவபெருமானை நன்ருக வணங்கி,

நாளையத் தினம் அங்கிருந்து இங்கு வந்து வசவரின் வரலாற்றை அறிவிக்கிறேன்'' என்று சொல்லிவிட்டு, கூட்டத்தினரும் பக்தர்களும் பார்த்துக் கொண்டேயிருக்க, சித்தராமையர் ஆகாயத்தில் எழும்பி, அந்தர்த்தானமானுர்.

அன்றையத் தினம் கழிந்தது. சித்தராமையர் சிவபெருமானின் திருக்கைலாயம் சென்று விடியற்காலையில் திரும்பிவிட்டார். அப்போது சிவனடியார்கள் சித்தராமையரின் சந்நிதியை அடைந்து துதித்தனர். அப்போது சித்தராமையர், மகிழ்ச்சியுடன் சொன்னுர். ''நான் நேற்று இரவு, சிவபெருமானின் மகாகைலாசத்தையடைந்தேன். பதினெண் 'தவகணங்களும்' ''தலைவனே!'' என்று தொழுகின்ற அரனுரின் சந்நிதானம் சென்று வணங்கி, மெய்க் கூச்செறிய நின்றேன். அப்போது என் மனநிலையை யுணர்ந்த சிவபெருமான், ''மாஹேஸ்வரனே! நீ நினைத்தக் காரியம் யாது? சொல்லுக!'' என்று கட்டளையிட்டார். நான் அவரை வணங்கி, ''இறைவ! மண்ணுலகில் மாஹேஸ்வரர்களுக்குச் செல்வமாகிய வசவ தேவர் பூவுலகத்திலிருந்து வந்து தேவரிரிடத்தில் எழுந்தருளியிருப்பார் என்று பலர் உறுதியாகச் சொல்கிருர்கள். இது மெய்யோ? அடியேனுக்கு இந்தச் செய்தியைத் திருவுள்ளம்பற்றி அருள் செய்தல் வேண்டும்'' என்று பிரார்த்தித்தேன். அதற்கு அவர் என்னை அன்புடன் நோக்கி, ''இந்தக் கட்டுரை ஸத்யமேயாம். எவ்விடத்தும் நிறைந்தவனுகியும், பக்தர்களும் ஜங்கம மூர்த்திகளும் சேர்ந்த திருக்கூட்டம் எழுந்தருளியுள்ள பூப்பிரதேசம் எங்கும் நிறைந்தவனுகியும் தமக்குத் தாமே நிகரான வசவன் நமது கணுதியர்களுக்கும் மேம்பட்டவன். நாம் அவனது உயிராவோம். தத்வஸ்வருபமாகிய எமது இதயகமலத்தில் அவன் தினமும் எழுந்தருளியிருப்பான். ஐயனே! இதை நீ இதோ அறிந்துகொள்!'' என்று திருவாய் மலர்ந்த சிவபெருமானது திவ்விய விக்ரகமாகிய ஜோதியில், ஜோதியாகிய ஒரு சிவந்த இடது கரத்தில், சிவலிங்கமும் தூய்மையாளரான வசவேசரும் எழுந்தருளியிருந்ததை தரிசித்து, நான் சாஷ்டாங்கமாக வணங்கினேன். என்னைப்போலவே அங்கிருந்த தேவர்களும் பூதகணநாதர்களும் அவரை வணங்கினர். ''சிவபக்திக்குக் காரணனே! சவனமில்லாதவனே! உனக்கு எழுந்தருளியிருப்பதற்குரிய ஆலயம் சிவபெருமானது திவ்ய விக்கிரகமோ?... என்று தேவர்கள் போற்றினுர்கள். வசவதேவரின் தோற்றத்தை உமாதேவியும் கண்டு மகிழ்ந்தனள். அப்போது சிவபெருமான் உமாதேவியை நோக்கி, ''யாவராலும் இயற்றுதற்கரியத் தவம் செய்த சிலாதரிஷியிடம் முற்காலத்தில் நாம் அனுக்கிரகம் செய்த ரிஷபமாகியவனே வசவேசன் என்று திருமேனியும் திருப்பெயரும் பூண்டு, நிலவுலகில் நிலை



பெற்ருன். சித்தராமையனே! உணர்ந்தனையோ! எல்லா ஆன்ம கோடிகளும் வணங்குதற்குரிய யாமே இந்த வசவேசன்! இவனே யாம். ஆகையால் இரண்டு வஸ்துக்கள் இல்லை. யாம் முக்திக்குப் பதியாவோம்; வசவேசன் முக்திக்குக் காரணமாகிய பெரிய பக்திக்குப் பதியாவான். எம்மையொத்தத் தன்மையுடையான். எங்கும் நிறைந்தவன். வசவேசனது நாமத்தை சொன்னவரது துயரங்களை யாமே முன்னின்று ஒழிப்போம்!'' என்று கூறினர்.

இவ்வாறு சித்தராமையர் சொன்ன போது, சிவாலயத்தில் கூடியிருந்த மக்களெல்லோரும் வசவேசரைத் தியானித்து, துதித்தனர். பிறகு ''அன்றையத்தினம் வசவேசரது மகிமையை நான் உணர்ந்தேன்'' என்று அந்த இடைச்சி அரச சபையில் கூறினுள். அதை உண்மை என்று நம்பிய விஜ்ஜல ராஜன் பெரிதும் வியப்படைந்தான். அமைச்சர்கள் அச்சமடைந்தனர். அரசன், சிறந்த பொன்ஞலான ஆபரணங்களையும், ஆடைகளையும் அந்த இடைச்சிக்கு வெகுமதியாகக் கொடுத்தான். பெருந்தனக்காரியான அந்த இடைச்சி, வசவேசரை வணங்கித் தன் இருப்பிடத்தை அடைந்தாள்.

# 13. சாளிகைப் பெட்டியை அழைப்பித்த கதை

இத்தகைய அதிசய நிகழ்ச்சிகள் நடைபெற்று வருகின்ற காலத்தில், ஒருநாள் விஜ்ஜலராஜன் தனது சேனைகள் முழுமைக்கும் கொடுக்கப்படவேண்டியச் சம்பளத்திற்காக, பெருந் திரவியத்தை வசவேசரிடம் கொடுத்தான். அத்திரவியத் தோடும் அமைச்சர்களோடும் வசவேசர் நடுவழியில் செல்லும் போது, ஒரு வாலிப ஜங்கமர், விடபுருட வேடத்துடன் வந்தார். வந்தவர், வசவேசரை நோக்கி, "வெற்றியைத் தருவதற்குரிய இந்தப் பெருந்திரவியத்தை நமக்குத் தருவீராக!" என்று கேட்டார். உடனே வசவேசர் சிறிதும் தாமதிக்காமல், அந்தத் திரவியம் முழுவதையும் அந்த வாலிப ஜங்கமரிடம் கொடுத்து அவரைத் தொழுதார். அதைக்கண்ட அமைச்சர்கள் கோபங் கொண்டனர். அவர்கள் அரசனிடம் சென்று, "அரசே! நீங்கள் கொடுத்தத் திரவியமெல்லாவற்றையும் வசவேசர் ஒரு விடஜங்கமருக்குக் கொடுத்துவிட்டார். இத்தகையவரால் நமக்கு யாது பயன்?" என்றனர்.

அதைக் கேட்ட விஜ்ஜலராஜன் கடுங் கோபங் கொண்டு, வசவேசரை அழைத்து வரும்படிக் கட்டளையிட்டான். அவரும் வந்து, அரசரை நோக்கி, "அரசே! என்னை அழைத்ததற்குக் காரணம் என்ன?" என்று கேட்டார். அரசன், வசவேசரது முகத்தை உற்றுப்பார்த்து, கொடிய வார்த்தைகளால் அவரைக் கோபித்து, "நீ நமது திரவியத்தையெல்லாம் பயமில்லாமல் கொடுத்துவிட்டாய். ராஜனது திரவியத்தை இவ்வுலகில் எந்த அமைச்சன்தான் இதுபோலக் கொடுத்திருக்கிறுன்?" ஆகையால் நீ கொடுத்தத் திரவியத்தை விரைவில் என்னிடம் சேர்த்துவிட வேண்டும். நம்மைக் கண்டிப்பவர் யார் என்ற இறுமாப்பில் இதுபோல ஒரு விடஜங்கமனுக்குக் கொடுத்து விட்டாய். நம்பியவரது திரவியத்தைத் துஷ்டர்கள்தான் அழிக்க எண்ணுவார்கள். உத்தமர்கள் எண்ணமாட்டார்கள்.

உன் மந்திரித்துவம் நமக்குப் போதும். எனவே எனது திரவியத்தை இப்போதே நான் உன்னைத் தண்டிப்பதற்கு முன்பே கொடுத்துவிட வேண்டும். உன்னை நம்பியதற்கு நல்ல பயன் கிடைத்துவிட்டது !'' என்று கோபித்தான்.

அப்போது வசவேசர் விஜ்ஜல ராஜனை நோக்கி, ''அரசே! சிவபக்தி என்ற மேலான பதுமநிதியும் சங்கநிதியும் கொண்டவர்கள். காமதேனுவையும் கற்பக விருட்சத்தைத் தம்மிடம் வைத்திருப்போர், பிறரது திரவியத்தின் மீது ஆசை வைக்க மாட்டார்கள். தாமரை மலர்களில் சப்திக்கின்ற வண்டுகள் ஊமத்தை மலர்களை முகரவும் மாட்டா. சந்திரக் கிரணங்களை உண்ணும் சகோரப் பறவைகள் மின்னல் ஒளியை நாட மாட்டா. யானையின் கன்றுகள், பன்றிகளின் முலைகளைத் தேடித் தீண்டமாட்டா. சிவபக்தர்கள் பிறரது திரவியத்தை விரும்பமாட்டார்கள். பாற்கடலில் சஞ்சரிக்கும் அன்னங்கள், உப்புக் கடலின் நீரை உண்ணமாட்டா. தித்திக்கும் மாங் கனிகளை உண்ணும் பச்சைக்கிளிகள் எட்டிக் கனிகளைத் தின்ன மாட்டா. சிங்கங்கள் அருகம்புல்லை விரும்பித் தின்னமாட்டா. திருமாலுக்கும் கிடைத்தற்கரியச் சிவபெருமானது பக்தர்கள் பிறரது திரவியத்தை விரும்பமாட்டார்கள்.

தெளிவாகியக் கடல்நீர் சுவறினாலும் ஆதிசேடன் தலை சாய்ந்தாலும், பூமி விரைவாக அசைந்தாலும், வடவைத் தீயின் வெப்பம் தணிந்தாலும், அஷ்டகுல பர்வதங்கள் சிதைந்தாலும் சிவபக்தர்கள் பிறரது திரவியத்தை விரும்பமாட்டார்கள். ஜ்யோதி ஸ்வரூபிகள் ஜ்யோதியை விரும்பமாட்டார்கள். சிவஞானத்தையுடையவர்கள் சிவஞானம் என்ற வெறும் பெயரை விரும்பார்கள். அஷ்டமா சித்திகளை உறுதியாய்ப் பெற்ற ஜங்கமரது அனுக்கிரகத்தைப்பெற்ற நான், உமது திரவியத்தைக் கைக்கொள்ளமாட்டேன். ஆகையால் சந்தேகத்தை விட்டுவிடும்! ஐயர் பொருளை எனது ஐயருக்குக் கொடுத்துவிட்டேன். உனது திரவியம் கடுகளவாவது குறைந்திருந்தால், நான் சிவபக்தன் ஆகமாட்



டேன். பேழையில் வைத்தக் கட்டோடுக் கட்டிய பணப்பை களும் இட்ட முத்திரைகளும் இட்டபடியே இருக்கின்றனவா என்று நீயே சரிபார்த்துக்கொள்ளும்'' என்று சொல்லி, சாஸி கைப் பெட்டியை அரசன் முன்பு கொண்டுவந்து வைத்தார்.

அரசன் அந்தப் பேழையைத் திறக்கச் செய்து, சரி பார்த் தான். நிரம்ப இட்டிருந்த முந்திய முத்திரைகள் கழலாமல் இருந்ததைக் கண்டு வியந்தான். வசவேசரிடம் மன்னிப்புக் கேட்டான். அவரை வாயாரப் புகழ்ந்தான். தேவர்கள் மலர் மழை பொழிந்தார்கள். அப்போது வசவேசர், விஜ்ஜல ராஜனுக்கு, திருவாதவூரடிகளுக்கு முற்காலத்தில் சிவபெரு மான் நரிகளைப் பரிகளாக்கிக் கொடுத்தத் திருவிளையாடலை எடுத்துச் சொல்லி, ''சிவானுக்கிரகத்துக்கு எல்லையே இல்லை!'' என்றார். அதைக் கேட்டதும் விஜ்ஜலராஜன், '' நீர் சிவபெரு மானேயாகும். சாதாரண மனிதனல்ல நீர். இது மெய்!'' என்றான். பிறகு வசவதேவர் சிவபெருமானைத் துதித்து, தம் திருமடத்திற்குச் சென்றார்.

---

## 14. நெற்றிக்கண் கேட்ட கதை!

---

வசவதேவரின் பக்தியையும் மேன்மையையும் உலகத்தார் அறியச் செய்வதற்குச் சிவபெருமான் திருவுள்ளங் கொண் டார். எனவே, பிறைச் சந்திரனும், ஐந்து தலை நாகமும், கங்கையும், பிரம்ம கபாலமும், ஸர்ப்பாபரணங்களும், எலும்பு மணியும் உமா பாகமும் சிரமாலைகளும் ஆகிய பலவகைச் சின்னங்களை எல்லாம் மறைத்துக்கொண்ட சிவபெருமான், தூய்மையான ஜங்கம மூர்த்தியைப் போன்ற கோலம் கொண்டு, வசவேசர் முன்பு வந்தார்.

அவர் வசவேசரை நோக்கி, ''புருஷோத்தமனே! உன்னிடத்தில் ஒரு சிறந்த அவயவத்தை நாம் விரும்பி வந்தோம். சிவபெருமானது விழிகளைப் போலவே எமக்கும் திரிநேத்திரங்களில் விருப்பம். சிவபக்தனே! நீ நெற்றிக் கண்ணை எனக்கு வழங்குவாயாக!'' என்று கேட்டார். அதற்கு வஞ்சகமற்ற மனமுடைய வசவதேவர், அவரைத்

தொழுது, "ஐயனே! விநாயகர் தம் மூன்று கண்களாலும், வீரபத்திரர் மூன்று கண்களாலும் ஷண்முகர், லக்ஷணம் பொருந்திய பன்னிரு விழிகளாலும், கங்காதாசையர் மூன்று விழிகளாலும், பிரம்மதேவர் எட்டுக் கண்களாலும், தேவேந்திரன் ஆயிரங்கண்களாலும் பார்ப்பதற்கு நீயல்லவோ திருவருள் செய்திருக்கிருய்! 'இல்லாத ஒரு பொருளை எனக்குத்தா' என்று ஏற்கின்ற தன்மையுடையவர்களில் வல்லவர்கள் மூற்காலத்திலும் இல்லை. பக்தர்களது இதயகமலத்தில் நித்திய வாசஞ் செய்பவனே! நல்ல கண்களைக் கொண்டு தங்களால் பார்க்கமுடியாது என்ற பழமொழி உமக்கில்லையே!" என்று சொல்லிப் புகழ்ந்து ஒரு கண்ணுடியை வேடதாரியாக வந்த அரனருக்குக் காண்பித்தார்.

தம் எதிரே காட்டப்பட்டக் கண்ணுடியில் மூன்று கண்களையும் நேரில் கண்ட அவர், வெட்கமடைந்தவரைப்போல, திருமுகம் பொலிவில்லாமல் தலைகுனிந்து, வேறென்றும் பேசாமல் அங்கிருந்து வெளியேறலானுர். அவ்விதம் விரைந்து செல்கின்ற சிவபெருமானை, வசவேசர், அன்புடன் அழைத்து, "ஐயனே! நீயே உலகம் யாவையும் உண்டாக்க வல்லவன். உனக்கு ஒருவர் தரவல்லவர் யார்? உன்னிடத்தில் இல்லாத ஒரு பொருள் என்னிடம் இருக்குமானுல் அதை நான் உனக்குக் கொடுப்பேன். இங்கு அந்தப் பொருள் இல்லை! அப்படியிருக்க நீ பயந்தவரைப் போலப் போவதற்குக் காரணம் என்ன?

" சுந்தரமூர்த்தி சுவாமிகள் சொன்னதைப் போல, மாதரிடத்தில் தூதுபோ என்று நான் உம்மைச் சொல்லமாட்டேன். அழகைத்தரும் திருநீலகண்ட நாயனுர் கேட்ட இளமைப் பருவத்தைக் கொடு என்று கேட்கமாட்டேன். கேடில்லாத செல்வத்தை சேடதாசையர் கேட்டதைப் போல நான் கேட்கமாட்டேன். வறுமையிலிருந்த இளையான் குடி மாற நாயனுர் அடைந்தது போன்ற குபேரப் பதவியைக் கொடுக்கச் சொல்லி, நான் கேட்கமாட்டேன். பொன்மழை பெய்விப்பாய் என்று சோழ மன்னன் கேட்பது போல நான் கேட்கமாட்டேன். ஸ்வர்க்கம் போன்ற பேரின்பங்களையும் கேளேன். இறைவனே! உன் மஹா கைலாசத்திலிருந்தும் அடியேனையிருத்தியருளியது எவ்விடமோ அங்கு உன் சிறந்த ஜங்கமர் உண்ணப் பெற்ற சேஷப் பிரசாதத்தையருந்தி ஒரு குறைவுமில்லாமல் இருக்கிறேன். கண்ணப்ப நாயனுரும் சண்டேச நாயனுரும் உன்னை மிகச் சிறப்பாகப் பூஜிக்க வல்லவர். சேஷதாசையர் ஆடையைக் கொடுக்க வல்லவர். புஷ்பதத்தர் நல்ல மலர்களை இடையருமல் சூட்ட வல்லவர். சங்கிலி நாச்சியார் பூமாலைகளைத் தொடுத்துக் கொடுக்க வல்லவள்.

வாயிலார் உனது நித்திய வாசஸ்தலமாகிய இதயக் கோயிலைக் கட்டிக் கொடுக்கவல்லவர். கலியனார் அன்புடன் திருவிளக் கேற்ற வல்லவர். சோமண்ணா தேவர் முத்தானத்தில் எடுத்துக் கூடப் பாடவல்லவர். தூய்மையானத் தமிழ்க் கவியில் வல்ல திருஞான சம்பந்த சுவாமிகள் ஸ்தோத்திரங்களைச் செய்ய வல்லவர். மூர்த்தி நாயனார் சந்தனந் தேய்த்துக் கொடுக்க வல்லவர். குங்குலியக் கலய நாயனார் நறுமணங் கமழும் தூபம் கொடுக்கவல்லவர். ஒப்பற்ற பரதக்குலத்திற் பிறந்த அதிபத்தர் விலையுயர்ந்த பொருள்களைக் கொடுக்கவல்லவர். அரிவாட்ட நாயனார் அரிசியை அளந்து கொடுக்கவல்லவர். ரேசையர் குற்றமற்ற கற்பூர வெற்றிலையைக் கொடுக்க வல்லவர். கோட்கூச்சவ்வை, திரளக் காய்ச்சிய பாலைத் தினந் தோறும் கொடுக்கவல்லவள். சங்கரதாசையர் தனியான விடத்தில் படைவீரராக இருக்கவல்லவர். மாச்சிதேவர் பணி விடைசெய்ய வல்லவர். கோட்புலியார் மிந்து செலவாகாத உனது நெற்களஞ்சியங்களைக் காக்கவல்லவர். பங்கையர், சுங்க வேலைபார்க்க வல்லவர். முனையடுவார் போர்செய்ய வல்லவர். சிவராத்திரி ஸங்கிதேவர் திருவாலயத்தில் காவல் செய்வதில் நிலை பெயராமல் இருக்க வல்லவர். கரிகாலச் சோழர், பலவித உண்கலங்களில் உணவைச் சேகரிக்க வல்லவர். சிறுத்தொண்ட நாயனரது மனைவி, உனக்குத் தக்கத் திருவமுதைப்படைக்க வல்லவள். சென்னையர் இஷ்டமானவற்றையெல்லாம் மனமகிழக் கொடுக்கவல்லவர். வீரசோளவ்வை, இனிய பணியாரங்களைப் பறிமாற வல்லவள். தண்டியடிகள் நாயனார் நல்ல நீருள்ள இடங்களைத் தோண்ட வல்லவர். சாம்பவர், திருவமுதைப்படைக்க முற்பட்டு வந்து நிற்கவல்லவர். திருநாவுக்கரசு சுவாமிகள் மனங்கசிந்து பாட வல்லவர். பொன்னித்தேவர், குளிர்ந்த நீரைக் குடிப்பதற்குக் கொடுக்கவல்லவர். நிம்மவ்வை, உருகும் உள்ளத்துடன் உன் ஆலயத்தை திருமெழுகிட வல்லவள். மோளிகை மாறையர் நீண்ட விறகுகளைக் கொடுக்க வல்லவர். கணநாதர் பிரதி நிதியாய் இருக்க வல்லவர். மூர்க்க நாயனார், உன்னிடத்தில் தவருமல் சூதாடவல்லவர். வாச்சிதேவர், திடமான கணக்கர். போகையர் நல்ல நண்பராக இருக்கவல்லவர். காரைக்காலம் மையார், தூய்மையும் இனிமையுங்கொண்ட மாங்கனியைக் கொடுக்கவல்லவர். மெய்ப்பொருள் நாயனார், உன் திரு வெண்ணீறைத் தொழவல்லவர். ஸாமவேதியர், பண்டிதராக இருக்கவல்லவர். பசுபதி நாயனார், உனது திருமேனியைக் காக்கவல்லவர். பெச்சமாதேவி, விருப்பமுடன் காப்பாற்றி, வேண்டிய உணவுகளைக் கொடுத்து வளர்க்கின்ற பெற்ற தாயாக இருக்க வல்லவள். சகனேச மாதிராசையர், வீணை வாசிக்க வல்லவர். ருத்திரபசுபதி நாயனார் வணங்குதற்குரிய மந்திரவாதியாக இருக்கவல்லவர். பிப்பப்பாச்சையர் மன

முருக உன் பிரசாதத்தை உண்ணவல்லவர். கிந்நரையர், உன் பொக்கிஷங்களுக்கு முத்திரை போடவல்லவர். சேரமான் பெருமாள் நாயனார், உன் திருவாயிலில் சோதனை செய்பவராக இருக்கவல்லவர். வளிகமல்லையர், உனக்கான நல்ல தானியங்களை எருதுகளின்மேல் சுமத்தவல்லவர். காட்டக்கோட்டையர், நீ எழுந்தருளியிருக்கக் காக்கவல்லவர். இளையான் குடி மாற நாயனார், பயிர்வேலை செய்ய வல்லவர். பர்வதராஜர், உனக்கு மாமனாராக இருக்கவல்லவர். சுரிகைச் சவுண்டையர், உன் கைவாளைச் சுமக்கவல்லவர். எறிபத்த நாயனார் உன் பூக்குடலையை நன்றாகக் காக்கவல்லவர். சுந்தரமூர்த்தி சுவாமிகள் சிவனடியாரைத் துதிக்கவல்லவர். ஏகாந்த ராமையர் உன்னை அன்பு செய்யாத பரசமய வாதிகளைக் கொல்லவல்ல தைரியத்தையுடையவர். திருக்குறிப்புத் தொண்ட நாயனாரும், மடிவால்மார்ச்சையரும் உன் ஆடைகளை வெளுக்கவல்லவர். பொம்மையர் பூங்காவைக் காக்கவல்லவர். மதவரசர் ஆலவட்டம் வீசிநிற்கவல்லவர். திருநீலகண்ட நாயனார் புதிது புதிதான மட்கலயங்களை நாள்தோறும் கொடுக்கவல்லவர். விறன்மிண்ட நாயனார் சிவபக்தர்களுக்குப் பயப்படாதவர்களைச் சோதிக்க வல்லவர். குலச்சிறை நாயனார், திருவெண்ணீற்றை அபேக்ஷியாதவர்களுக்குக் கழுமரங்களை நட்டு வைக்கவல்லவர். பகைவரும் சரணடைவதற்குரிய திருவாதவூரடிகள், ரத்தினம் போன்ற திருவாசகத்தை இயற்றவல்லவர். திருவேலேஸ்வரத்திலுள்ள கேதையர் துவாரபாலகராக இருக்கவல்லவர். திருஹாவின ஹள்ளியிலுள்ள கல்லையர், விஷ வைத்தியத்தில் வல்லவர். இத்தகையோரும், ஒருமுகமுள்ளவர் முதலாக ஆயிரமுகங்களுடைய தேவேந்திரன் வரையுள்ள தேவகூட்டத்தினர், சிதாகாசனே, உமைபாகனே! ஹரனே! மகாதேவனே! வேதமுதல்வனே, பேரின்பப்பொருளே! யோகீஸ்வரனே! பரமசிவனே! மோக்ஷதாயகனே! சாவாதவனே! பிறவாதோனே! கோடிசூர்யப் பிரகாசனே?'' என்றெல்லாம் பக்தியுடன் தோத்திரஞ் செய்ய எழுந்தருளியிருப்பவனே. ஒப்பற்ற மிகப் பெரிய ஐஸ்வரியத்தையுடையவனே! முழுமுதற் பொருளே! அடியேனை மூன்றுவது கண்ணைத் தாவென்று எவ்வாறு கேட்கத் துணிந்தாய்? இந்த மாயவித்தை அடியேன் மீது வைத்தத் திருவுள்ளத்தில் தோன்றியத் திருவருளல்லவா? உனது ஸ்ரீகண்டம் விஷத்தினால் கறுப்பதற்கு முன்பும், திரிபுரங்கள் சாம்பலாவதற்கும் முன்பும், பர்வதராஜன் ஈன்றருளிய உமாதேவியை மணந்ததற்கு முன்பும், ஆகாயம் முதலிய *அஷ்டமூர்த்தங்களைப் படைப்பதற்கு முன்பும் பிரமனும் விஷ்ணுவும் உன் சக்திஸ்

* அஷ்டமூர்த்தங்கள்—நிலம், நீர், நெருப்பு, வாயு, ஆகாயம், சந்திரன், சூரியன், ஆன்மா.

புரணத்தால் பிறவாததற்கு முன்பும், நீயே இறைவன்; நான் உன் அடிமை. உன் ஆதரவன்றி வேறு ஓர் ஆதரவுமில்லாத வனுக இருக்கிறேன்!'' என்று சொல்லிய வசவ தேவரின் திரு முகத்தை நோக்கி, ''உன் பக்தியை உலகத்தாருக்கு அறிவிக் கவே யாம் வந்தோம்'' என்று திருவாய் மலர்ந்தருளி, அந்தர்த் தானமானுர் சிவபிரான்.

## 15. உடுத்திய சேலையைக் கேட்ட கதை

சிவ பக்தியோடு வசவதேவர் வாழ்ந்து வந்த அந்தக் காலத்தில் விடஜங்கமர் ஒருவர், தினந்தோறும் வசவரிடம் பொருள் பெற்று, அந்தத் திரவியத்தை வேசியொருத்தியிடம் கொடுத்து, அவளுடன் வாழ்ந்து வந்தார். ஒருநாள், சந்தனம் பூசிய அழகிய தோள்களையுடைய அந்த தாசி தன் தோழியைக் கூப்பிட்டு, ''அடியே! இன்றைக்கு நம் வீட்டுச் செலவுக்கு வசவண்ணர் கொடுத்து வருகிற திரவியத்தை நாம் கேட் டனுப்பினேம் என்று அவரிடம் நீ போய்ச் சொல். அவர் கொடுப்பார். அதைப் பெற்றுக்கொண்டு வா!'' என்ருள்.

தோழியும், வசவண்ணரிடம் சென்று திரும்பிவந்து, தன் தலைவியை நோக்கி, ''அம்மா! கவனமாகக் கேள். நான் ஒரு முக்கிய விஷயத்தைச் சொல்கிறேன். வசவண்ணரது மனைவி யான கங்காம்பிகை, ஒரு பட்டுச் சேலை கட்டியிருக்கிருள். அதன் பிரகாசமும் அழகும் பெருமையும் இந்த உலகத்தில் இல்லை. ஒரு வேளை, கற்பூரங் கலந்த குங்குமக் குழம்பணிந்த தனங்கள் வாய்ந்த உமாதேவி சிவபெருமான் மகிழ, அத்தகையப் பட்டுப் புடவையை அணிந்திருப்பாளோ என்னவோ? இத்தகைய ஆச்சரியகரமான அந்தச் சேலையை நீ அடைய நான் ஒரு வழி சொல்கிறேன். அதாவது உன் காதலரான ஜங்கமரை, வசவேசரிடம் அனுப்பி, அந்தச் சேலையை விருப்பத்துடன் கேட்கச் சொல்லவேண்டும். அப் படிச் சொன்னுல் வசவேசர் அதைக் கொடுத்துவிடுவார். நீயும் அதை விருப்பத்தோடு அணிந்து கொள்ளலாம். நம் வீதியிலுள்ள வீடுகள் தோறும் சேர்ந்திருக்கிற விடஜங்கமர் கள், தம் காதலியருக்கு, வசவண்ணர் மனமகிழ்ச்சியோடு கொடுத்ததை கொடுக்கக் கொடுக்க, அப் பெண்கள் அவற்றை

மகிழ்ச்சியுடன் தரித்துக்கொள்கிறார்கள். புதியதும் வனப்ப முடையதுமான ஜயரஞ்சிச் சேலைகள், காம்போஜச் சேலைகள், சீனத்துச் சேலைகள், ருத்திரத் திலகச் சேலைகள், மேகவர்ணச் சேலைகள், தேசரிச் சேலைகள், உதயராகச் சேலைகள், இத் தகையச் சேலைகள் எல்லாம், அந்தக் கங்காம்பிகை தரித்துள்ள சேலையின் ஒரு நூலின் விலை மதிப்புக்கூடப்பெறாது!'' என்றாள். அதைக் கேட்டதும் தாசி தன் தோழியை அனுப்பிவிட்டு, அன்றிரவு விடஜங்கமர் வந்ததும் அவரது நெஞ்சம் கசியும்படி



இரஞ்சிதமான இனிய ராகங்கள் பாடி மோகச் சுருதி கூட்டிக் கட்டியணைத்துச் சிற்றின்பரசமுடைய சாத்திரப்படியெல்லாம் அவர் மனமகிழ நடந்து, ''நீங்கள், வசவண்ணரிடம் சென்று, அங்கு அவருடைய மனைவியான கங்காம்பிகை அழகாக உடுத்துகிற பீதாம்பரத்தைக் கொடுக்கச் சொல்லி, அதைக் கேட்டுப் பெற்றுக்கொண்டு இங்கு வந்தால்தான் நீங்கள் என் மீது அன்புடையவராவீர்!'' என்றாள். இவ்விதம் தாசி கூறிய வார்த்தைகளைக் கேட்டதும் ஜங்கமர், அவள் சொல்லிய படியே செய்வோம் என்று, விபூதியைப் பட்டை பட்டையாக அணிந்து, வசவண்ணரிடம் சென்று, ''வசவ தேவரே! உம் மனைவியார் உடுத்தியிருக்கிற சேலையை எனக்குத் தான மாகத் தரவேண்டும்!'' என்று கேட்டார்.

வசவண்ணர், அந்த விட ஜங்கமரின் வார்த்தையைக் கூடலசங்கமேஸ்வரின் திருவாக்காகப் பாவித்து, அவரை நோக்கி "பிதாவே! இன்றல்லவோ என் பெரியதவம் சித்தி பெற்ற நாள்!" என்று சொல்லித் தம் பத்தினியை அழைத்து வரக் கட்டளையிட்டுத் தூதன் ஒருவனை அனுப்பி வைத்தார்.

கங்காம்பிகையிடம் தூதன் சென்று வசவண்ணர் அழைத்த தாகக் கூறினான். அப்போது கங்காம்பிகையின் தோழிகள், வசவண்ணரின் கற்புடைய மனைவியான கங்காவை, அத்தாணி மண்டபத்திற்கு அழைத்தது ஏன் என்பதைக் குறித்துத் தங்களுக்குள்ளே பேசிக்கொண்டார்கள். அப் பேச்சுகள் கங்காவின் காதில் பட்டன.

எப்போதும் சிவலிங்க பூஜையில் விருப்பமுடையவளும், அழகான திருநீறணிந்த திருமேனியையுடையவளும் தவத்திற்குரிய ஞானமுடையவளும், நல்லொழுக்கம், சத்யம் ஆகியவற்றில் விருப்பமும், பிறவிவழியில் வெறுப்பும் உடையவளும், பதிவிரதா தர்மத்தில் நிகரற்றவளும், புண்ணிய வழிகளில் உதாரகுணமுடையவளுமான கங்காம்பிகை, சுத்தத் தங்கத்தை மூசையில் வைத்து உருக்கிப் பெண் போலச் செய்த பிரதிமை உயிர் பெற்று நடந்தாற்போல, தோழிகள் புடைசூழ அத்தாணி மண்டபத்திற்கு வந்து சேர்ந்தாள்.

அவள் வந்ததும், அவளது வட்ட நிலவைப் போன்ற முகத்தைப் பார்த்து மகிழ்ந்த வசவதேவர், "கங்கையே! அழகான இந்த ஜங்கமருக்கு உன் வளமை மிக்க இந்தப் புடவையை இங்கேயே தா!" என்றார். அதைக் கேட்டதும் கங்காம்பிகை வெட்கத்தால் சோர்வுற்று நின்றாள்.

அதனால் வசவண்ணர் யோசித்தார். இந்த நாளில் மானத்தையும் அவமானத்தையும் மதிக்காமல் நம் மனைவி தரித்திருக்கும் இந்தச் சேலையை அவிழ்த்துக் கொடுக்க, இதை நாம் இந்த ஜங்கமருக்கு கொடுப்போமானால், துன்பமயமானப் பிறவித் தொடருக்கு இடமாய் மாறி மாறி உலகில் பல முறைகள் பிறந்தும் இறந்தும் பிறப்பதும் இல்லாமல் ஒழியும்!" என்று நினைத்து, சேலையை அவிழ்க்க முனைந்தார். கங்காம்பிகை, திரும்பத் திரும்ப தம் திருக்கரங்கொண்டே சேலையை அவிழ்த்தாள். கங்காம்பிகையின் கற்புச் சிறப்பாலோ, அல்லது வசவரின் அன்புக் கரத்தின் ஸ்பரிச விசேஷமோ, அவிழ்க்க அவிழ்க்க அவிழ்ந்து முடியாமல், அந்தச் சேலை, கடல் அலையோ, மின்னற் கொடியோ, சந்திர காந்தமோ, என்று சொல்லத்தக்கதுபோல, வளர்ந்துகொண்டேயிருந்தது. அதைக் கண்டதும் ஜங்கமர், "ஐயனே! வசவண்ணனே! எமக்கு இவ்வளவு கொண்ட சேலையே போதும்!" என்றார்.




ஜங்கமர் போதும் என்று சொன்னது வரையில் அடையாளம் வைத்துக்கொண்டு, அந்தச் சேலையை அறுத்து, சிவ சரணரான வசவதேவர், அதை ஜங்கமரிடம் மகிழ்ச்சியோடு கொடுத்து வணங்கி நின்ருர்.

குலமங்கையருக்கெல்லாம் அன்னைக்குச் சமமான கங்காம்பிகை அந்தப்புரம் சென்ருள். அவள் சென்றபோது, அவளைப் பார்த்தவர்கள் தாம் செய்த தவத்தால் பிறவி வெப்பம் தணிந்ததாகக் கருதினுர்கள். "ஆகா! பூதேவியானவள் அவளது திருவடிகள் தண்மையைப்பெற விரும்பியே உபசாந்த நிலையை முற்காலத்தில் அடைந்தாள். திருமகளும், கங்கையின் நல்லிணக்கணம் அமைந்தத் திருவுருவத்தைப் பெறவேண்டியே, செல்வத் திருமாளிகையில் வசித்தாள். கலைமகளும் அவளது சொற்களைக் கற்கவிரும்பியே பிரமனது நாவில் வசித்தாள். அருந்ததியும் அவளது கற்பைக்கண்டே உடல் ஒடுங்கினுள்!" என்று பலர் புகழ்ந்தனர்.

கங்காம்பிகையின் கற்பிலக்கணத்தாலும், அபிமானத்தாலுமே, தவமார்க்கமுடைய வசவண்ணரின் நல்லெண்ணம் நிலைபெறும் என்று அங்கிருந்த சிவபக்தர்கள் பாராட்டினுர்கள். அப்போது வசவதேவர், அவர்களை நோக்கி, முற்காலத்தி

லிருந்த சிவனடியார்களின் சரித்திரங்களைச் சொல்லத் துவங்கினுர்.

"ஞானமில்லாதவனுன அடியேனது பக்தி மார்க்கத்தை ஒப்பற்றதாக மதித்துப் புகழ்ந்து பேசுகிறீர்களே! இதற்குக் காரணம் என்ன? பணம் சம்பாதிக்கும் விருப்பத்தோடு, பன்னிரண்டு ஆண்டுகள் வீட்டிலிருந்து, நேர்த்தியாக நெசவு செய்த பட்டு வஸ்திரத்தை அரசனிடம் கொண்டு போகும் போது, வழியில் ஒரு ஜங்கமர் அதைத் தனக்குக் கொடுக்க வேண்டும் என்று கேட்க, உடனே சேஷதாசையர் என்பவர் கொடுத்துவிட்டார். இதுபோலவே வல்லாள மகாராஜாவும் இயற்பகை நாயனுர் ஆகிய இருவரும், தங்கள் மனைவியரை மன ஏமாப்பிலே சிவனடியார்களுக்குத் தானமாகக் கொடுத்தார்கள். இதுபோலவே மானக்கஞ்சாற நாயனுரும் தாம் பெற்ற புதல்வியின் கூந்தலையறுத்து மணப் பந்தலில் பலரறியக் கொடுத்தார். அமர்நீதி நாயனுர் என்பவர், சிவபக்தருக்கு உடல் பொருள் ஆவியெல்லாம் கொடுத்தார்! பெண் ஆசையுள்ள தபோதனர் ஒருவருக்கு, நரசிங்க முனையரைய நாயனுர் என்பவர் தம் பெருஞ் செல்வத்தை இரட்டிப்பாகத் தந்து, திருவருளைப் பெற்றுர். பெரும் பஞ்சகாலத்தில் நெல்லைத் திருடியவரான ஒரு தவத்தேவரின் சொற்களைக் கேட்டு, இடங்கழி நாயனுர், தம்முடைய பொருள் முழுதும் அந்தத் தபோதனருக்கே உரிமையாக்கினுர்!" என்று இவ்வாறு முற்காலத்திலிருந்த சிவசரணர்கள் செய்த மகத்தான செயல்களையெல்லாம் வசவண்ணர் அங்கிருந்தோருக்குச் சொன்னுர். அதன் பிறகு கங்காம்பிகையாரும் அந்தப்புரத்தினுள்ளே சிவபெருமானைத் தோத்திரஞ் செய்துகொண்டு பிரவேசித்தாள். பிறகு மற்றொரு சமயம் ஒரு விட ஜங்கமர், கங்காம்பிகை காதுகளில் அணிந்திருந்தத் தங்கத் தோடுகளை இச்சித்துத் தானமாகக்கேட்டார். அதை வசவண்ணர் கொடுக்க, அந்த ஜங்கமர் அதை ஒரு விலை மகளுக்குக் கொடுத்தார்.



# 16. முத்த சங்கையர் கதை

புண்ணிய மார்க்கத்தையுடைய வசவண்ணருக்கு நெருங்கிய நண்பர் ஒருவர் இருந்தார். அவர் பெயர் முத்தசங்கையர். அவர் ஒரு சிறந்த சிவபக்தர். பகைமை, பெண்போகம் இவற்றைச் சற்றேனும் நினையாதவர். அவர், வசவண்ணரிடத்திற்கு வரும் விடஜங்கமர்கள், வசவண்ணரிடம் பெறுகின்ற பொருள்களான, செல்வம், சேலைகள், குங்குமம், சந்தனம், பன்னீர் முதலான இவற்றையெல்லாம் தங்கள் வேசிகளுக்கு நாள் தோறும் கொண்டு கொடுக்கும் நியமத்தைக் கண்டு, "இந்த விடஜங்கமர்கள் சிவபூஜை செய்வதற்கு வேண்டிய பொருள்களை நம் வசவண்ணரிடம் பெற்று, அந்த விரதத்தை இரவெல்லாம் பெண்களிடத்தில் அனுஷ்டிக்கவே போகிருர்கள்! நாமும் ஏன் இவர்களைப்போல், இன்றையத்தினம் நம்முடைய சிவபூஜையை மாதரிடத்தே சென்று செய்யக் கூடாது?' என்று நினைத்தார்.

எனவே அவர் வசவண்ணரிடம் சென்று, "ஐயனே! வெற்றியுடைய ஜங்கமமூர்த்திகளைப்போல நாமும் பெண்டிரிடம் சென்று, மனத்திடமுடைய சிவபூஜையை விரும்பிச் செய்ய விரும்புகிருேம். ஆகையால் நல்லதொரு பெண்ணையும் அதற்குண்டானத் திரவியங்களையும் கொடுத்து ஜங்கமமூர்த்தியரோடு எம்மையும் விரைவாகச் சேரச் செய்வீர்" என்று கேட்டார். அதைக் கேட்டதும் வசவதேவர் புன்னகைசெய்து அவரைத் தழுவி, இருகரங்களையும் கூப்பி அவரை வணங்கி, மனத்தாலும் வாக்காலும் அவரை இகழாமல், தரும மார்க்கத்தில் ஈட்டிய தம் பொருள்களில், அழகிய சேலை, முத்து மாலைகள், வாசனைத் திரவியங்கள், தாம்பூலம், மேன்மையான பொருள்கள், புத்தம் புதிய மலர்கள் முதலியவற்றையெல்லாம் முடிந்து, தம் பரிசாரகர்களிடம் அனுப்பி மிகவும் அழகிய உருத்திர கணிகை ஒருத்தியிடம் கொடுப்பித்து, முத்த சங்கையருக்காக அவளை ஏற்பாடு செய்யச் சொன்னுர்.

பழுத்த மனமுடைய முத்தசங்கையர், அந்த உருத்திர கணிகையின் வீட்டிற்குச் சென்றுர். அப்போது மாலைப்பொழு

தாகிவிட்டது. பயனற்றவரான பரசமயவாதிகள்மீது வசவ தேவரின் கண்கள் சிவப்பதைப்போல அந்திவானம் சிவந்தது. சிறிது நேரத்திற்கெல்லாம் வானம் இருண்டு, நிலவும் வீசத் துவங்கியது. உருத்திர கணிகையின் வீட்டுக்கு, முத்த



சங்கையர் சென்றதும், அழகான பொற்பதுமை உயிர்பெற்றதைப்போல், அந்தக் கட்டழகி, முத்தசங்கையரை வணங்கினுள். அவரது கையைப்பிடித்து அழைத்துச் சென்று, அவரது இரண்டு திருவடிகளையும் கழுவிச் சுத்தம் செய்தாள். அழகான ஆசனத்தில் அமர்த்தினுள். மேன்மை பொருந்திய விபூதியையும் தாம்பூலத்தையும் வழங்கினுள். பிறகு, நன்றியுடையப் பரிசாரகர்களுக்கு விடைகொடுத்து அனுப்பிவிட்டு, முத்தசங்கையர் அந்த உருத்திர கணிகையின் உப்பரிகைக்குச் சென்ருர். அந்த உப்பரிகை, பளிங்குக் கற்களினுலும் ரத்தினங்களினுலும் இழைக்கப்பட்டு இருந்தது. கிளிகளும், நாகணவாய்ப் பறவைகளும் புருக்களும் சப்தித்தன. வீணைகளும் கின்னரிகளும் முழங்கின. அழகான பொற்கட்டிலின் மீது ரம்மியமான நறுமண மலர்கள் தூவிய பஞ்சணையும் தலையணைகளும் காணப்பட்டன. தூமணி மாடங்களில், சர விளக்குகள் அசையாமற் பிரகாசித்துக்கொண்டிருந்தன. மென்மையானத் திரைச்சீலைகள் விதானங்களில் திகழ்ந்தன. தோழிகள் சாமரங்களையும் படிகங்களையும் ஏந்தி நின்ருர்கள். சிலர் பன்னீர் தெளித்த விசிறியைக்கொண்டு வீசினுர்கள். சிலர் நறுமண நன்னீரைக் கிண்ணங்களில் நிறைத்துக்கொண்டிருந்தார்கள். சிலர், சந்தனத்தைக் குழைத்துக் கிண்ணங்களில் நிறைத்தார்கள். சிலர், தாம்பூலத்தை ஏந்தினுர்கள். இவ்வாறு தோழிமார்கள் பணிவிடை செய்ய, முத்தசங்கையர் பொன்னுலான படிகளில் ஏறிச் செல்லும்போது கணிகை காமம் தலைக்கேறியவளாய், அவரை இரண்டு கைகளாலும் பிடித்து அழைக்க, அவர் சிற்றின்பத்தில் விருப்பம் இல்லாதவராகவே உள்ளே சென்று, பசும் பொன்னுற் செய்த ரத்தினங்களினுல் இழைக்கப்பட்ட கட்டிலின்மீது விரிக்கப்பட்டிருந்த மெத்தையை நோக்கி, "இது தம் சிவபெருமான் வீற்றிருப்பதற்குரிய ஆசனம்!' என்று அஞ்சி, அதற்கு அருகில் கம்பளியை ஆசனமாகப் பரப்பி, அதன்மீது அமர்ந்துகொண்டார். பிறகு அவர் தாசியைக் கூப்பிட்டு, "பெண்ணே! நீ ஏன் உன் நீண்ட சடையைப் பின்னி முன் கொண்டையாகக் கட்டிக் கற்றைச் சடையாகக் கட்டவில்லை, இதற்குக் காரணம் என்ன? என்று கேட்டார். அதற்கு அவள், " நாங்கள் சரணடைகின்ற பார்வதியம்பிகை எங்களுக்குப் பூர்வத்தில் அனுக்கிரகஞ் செய்தருளிய, நறுமண மிக்க மென்மையான ஜடை இது!" என்று கூந்தலைக் காண்பித்தாள். பிறகு முத்தசங்கையர், "நாற்றச்சுமையரகிய உன் உடம்பு முழுவதும் மஞ்சள் நிறமுடைய விபூதியை அணிந்துகொண்டு வந்துள்ள நீ, ஏன் இந்த வெண்ணிறமுள்ள விபூதியை உன் உடம்பெல்லாம் அணிந்துகொள்ள வில்லை?" என்று கேட்டார். அதற்கு அவள், "இதுவா! பார்வதிதேவி எங்களுக்கு முன்னமே அனுக்கிரகம் செய்த,

வேதாகம விதிப்படி நியமித்த விபூதி இதுவே!'' என்று உடம்பிற் பூசிய மஞ்சள்தூளைக் காட்டினுள். பிறகு, மூத்த சங்கையர் அவளை நோக்கி, ''பெண்ணே! உன் உடம்பில் வெள்ளை ருத்திராட்சங்களை அணிந்திருக்கும் நீ, ருத்திராட்ச



மாலையை அணியாததற்குக் காரணம் என்ன?'' என்ருர். அதற்கு அவள், ''இவை உப்புக் கடற்கரையில் மிகுதியாக விளைகிற ருத்திராட்சங்கள் அல்ல. இவை, மேன்மையான திருப் பாற்கடலிலுள்ள ஒரு தீவில் வெண்மையான உருத்திராட்சங் களாக விளைகின்றன!'' என்று கூறிவிட்டுத் தன்னுடைய முத்துமாலையிலுள்ள முத்துக்களைச் சுட்டிக் காட்டினுள். பிறகு, முத்தசங்கையர், அந்த தாசியின் முத்து மூக்கூத்தியைப் பார்த்து, ''இந்தப் பரிசுத்தமான ஒற்றை உருத்திராட்சத்தை தலைமீது விதிப்படித் தூய்மையாக அணிந்து கொள்ளாமல், உன் மூக்கில் அணிந்துகொள்ளக் காரணம் என்ன?'' என்று கேட்டார். அதற்கு அவள், ''ஐயனே! திருமாலுக்கும் எட்டாதவரான சிவபெருமானின் கட்டளையினுல்தான் நான் இதை மூக்கில் அணிந்துள்ளேன்!'' என்ருள். பிறகு, அவர் அவளை நோக்கி, ''உத்தமியே! நீ ஒரு கௌபீனத்தை உடுத் திக்கொள்ளாமல் உடம்பு முழுமையும் சேலையால் போர்த்திக் கொள்வதற்குக் காரணம் என்ன?'' என்று கேட்டார். அதற்கு அவள், ''துஷ்டர்களான பாவியரின் இரண்டு கண்களுக்கும் என் உடல் காணப்படாது. அதற்காகவே, மனமகிழ்ந்து நானே மூடிக்கொண்டேன்!'' என்ருள். பிறகு அவர் அவளைப் பற்றிப் பின்வருமாறு நினைத்தார். ''பெண்ணுகிய இவள் பழைமையாகியத் தவச் சின்னங்களை அணிந்திருக்கும் சிவ பக்தையே!'' என்று நினைத்துத் தன் இரண்டு கரங்களையும் குவித்து, வணங்கி ''பெண்ணே! இத்தகைய நல்லதொரு தவக்கோலத்தை உனக்கு அனுக்கிரகம் செய்த பரமாசாரியார் யார்? உன் தவம் என்ன? சமயாசார பேதத்தின் நிலை என்ன? உனது குருவமிச பாரம்பரியம் என்ன? சொல்! நீ விரதங் களை எந்த வர்ணசிரம விதிப்படி அனுஷ்டானம் செய்கின்ருய்? எவரோடு மனமகிழ்ந்து சம்பந்தஞ் செய்கிருய்? சொல்!'' என்ருர்.

அதற்கு கணிகை தன் செம்பவள இதழ்களால் சிரித்துக் கொண்டே கூறலானுள். ''வாமதேவருடைய நூதனமான தும் முதன்மையானதுமான உபதேசக்கிரமத்தால், வெள்ளி மலைப் பார்வதிதேவி அருமையான விரதத்தை அனுஷ்டித் துச் சிவபிரானை மிகவும் மகிழ்ச்சியடையச் செய்துத் தன் திருமேனியில் ஒரு பாகத்தையும் பெற்ருள். அந்தத் தவக் கோலத்தையும் அனுக்கிரகம் செய்யப் பெற்ற அந்தப் பார்வதி தேவியே, எங்கள் பரமாசாரியை! நாங்கள் அவளுடைய கௌரீ சமயம். நாங்கள் ஜகன்மோகினிகள்! அந்தக் காலத் தில், வேதங்களை ஒத்த அருமையான புராணங்களைச் சம்பூர்ண மாகச் சிவபிரானிடமிருந்து கேட்டவளும், சராசரங்கள் எல்லா வற்றையும் ஈன்றருளியவளுமான பார்வதியம்மையாரின் வமிச பாரம்பரியத்தில் வந்த பாவையர்-நாங்கள்! எட்டுப் பங்கள

வுள்ளதை ஒரு பங்கின் அளவாகத் திரளக் காய்ச்சியப் பாலை யும் சர்க்கரையையும் விருப்பமுடன் இஷ்டலிங்க மூர்த்திக்கு நிவேதித்து, மகிழ்ச்சியாக நாங்கள் அருந்துவோம். ஜங்கம மூர்த்திகளும் சினேகஞ் செய்யும் சிவபக்தர்களும் மேலான கந்த மூலங்களைக் கொடுப்பார்களாயின் அவற்றையும் நாங்கள் விருப்பத்தோடு ஏற்போம். எங்கள் உடலையும் பொருளையும் கபடமில்லாமல் தடையின்றி நாள்தோறும் தத்தம் செய்கிற ஜங்கம மூர்த்திகளைச் சேர்வோம். நாங்கள் செய்யும் செயல் களே தினசரி சிவலிங்கார்ச்சனையாகும். தூய்மையான மோக்ஷ மும் பக்தியும் அவர்களே! நாங்கள், மனம், வாக்கு, காயம் என்ற மூவகைக் காரணங்களால் செய்கின்ற செயல்முறை இதுவேயாம். உயிர்போன்ற எங்கள் ஆசாரியையுடைய சமயாசார பேதமாகிய நிலையானது, நாங்கள் பூண்டுள்ள தவக் கோலங்களும் தவத்திற்குரிய நல்ல மார்க்கமுமாகும்! எங்கள் குற்றமற்ற வமிச பரம்பரையில் வருகிற ருத்திர கணிகைகள் சிவாலயங்களில் எல்லாம் சேர்ந்திருப்பார்கள்!'' என்று அவள் சொன்னாள். உடனே முத்த சங்கையர், அவள் சொன்னதெல்லாம் மெய்யென்றும், அவளை ஒரு ஜங்கம மூர்த்தி என்றும் கருதி, "நீ அன்புடன் செய்கின்ற அந்தப் பரிசுத்தமான உன் இஷ்டலிங்கப் பூஜைக்கு தூய்மையான திருமஞ்சனத்தையும் மலர்களையும் கொடுப்பாயாக!'' என்றார்.

அவளும் அவருக்குத் திருமஞ்சனம், மலர்கள், சந்தனம் முதலிய பூஜைத் திரவியங்களையெல்லாம் கொண்டு வந்து கொடுத்தாள். அவருக்குப் பக்கமிருந்து தக்க பணிவிடைகளைச் செய்தாள். முத்தசங்கையர் மிகவும் மகிழ்ச்சியாகச் சிவலிங்க பூஜையைச் செய்தார். அவர் செய்யும் பூஜையை அன்புட னும் விருப்பத்துடனும் பார்த்துக்கொண்டிருந்த கணிகை தன் தோழிகளை அழைத்தாள். உடனே, அன்னப்பறவைக் கூட்டங் களோ, ஓவியங்களோ, மயிற்கூட்டங்களோ என்று சொல்லும் படியாக அவளது தோழிமார்கள் வந்தார்கள். அவர்களை நோக்கி, "சாஸ்திர விதிப்படி மத்தளங்களையும் தாளங்களையும் கொட்டுங்கள். எக்காளம் ஊதுங்கள். நல்ல பாடல்களைப் பாடுங்கள். நடனஞ்செய்யுங்கள். நான் இந்தச் சலனமில்லாத மனமுடைய இந்த மெய்த் தபோதனரின் சிவலிங்க பூஜைக் குப் பணிவிடை செய்கிறேன்!'' என்றாள் கணிகை. பிறகு தூபாரத்தி, தீபாரத்தி, நிவேதனங்கள் முதலியவற்றையெல் லாம் அவள் எடுத்து உதவ, முத்தசங்கையர் பஞ்ச இந்திரிய நிக்கிரகம் செய்து, தத்துவப் பொருளை உணர்ந்து, சிவலிங்க பூஜையிலேயே நாட்டமுடன், இரவு முழுவதும் சிவயோக சமாதியில் நிலைத்து, மோஷானந்தத்தை அடைந்தார்.



பொழுது விடிந்தது. சேவல்கள் கூவின. பறவைகள் இன்னிசை எழுப்பின. "சிவசமயமெனும் அழகான தாமரை விரியவும் யாவரும் வணங்குதற்குரியத் திருவடித் தாமரைகளை யுடைய வசவண்ணராகிய சூரியன் உதித்தான். "எழுந்திருங்

கள் !'' என்பது போல, கோயிற் சங்குகள் முழங்கின. முத்த சங்கையர், மோகத்திற்கு உட்படாமல் ஈடேறுகின்ற மோட்ச மார்க்கத்தை அறிந்து, அக் கணிகையின் அழகு, பயந்து மெல்ல நீங்கியது போல, செவ்வல்லி மலர்க்கூட்டங்கள் அழ கொழிந்து கூம்பின. சிவயோகியாரான முத்தசங்கையர், வெற்றிவேற் படையை ஒத்த கண்விழி மாதர்களோடு கூடி யிருப்பாராயினும் மோகம் சிறிதும் இல்லாதவராகிற பெரு மைக்கு நானே சாட்சியாவேன் என்று சொல்வது போலச் சூரியன் தோன்றினன்.

முத்தசங்கையர், சிவாசார சம்பன்னராகிய வசவண்ணர் திருமுன்பு சென்று, “வசவண்ணரே! மன மொற்றுமைப்பட்டு என்னேடு நேற்றிரவு நீ வந்து, அந்தக் கணிகை மாதின் தவ மார்க்கத்தை உணரவல்லையே! அதைச் சிவபெருமானே உணர வல்லவன்! நான் என்னவென்று சொல்வேன்? நேற்று இரவு முழுவதும் தூக்கமில்லாமல் சிவபூஜா காலத்தில் நான் உன்னை நினைத்தேன். முற்பிறப்பில் செய்த புண்ணி யத்தையுடைய மேலோர்கள், மிருதுவசனியான கணிகை மாதின் சிவாசாரத்திற்குரிய சிவபூஜாக்கிரஹத்தைச் சேர்வார் கள். நானும் அநேக ஜங்கமர்களைப் பார்த்திருக்கிறேன். ஆயினும் வெண்ணிறம் பொருந்திய ருத்திராக்ஷங்களையும் மிருதுவான ஜடையும் பொன்னையொத்த திருவெண்ணீறும், நெருங்கிய ஸர்வாங்க லங்கோடுமாக அந்தக் கணிகை மாது பூண்டிருந்தத் திருக்கோலங்களைப்போல் நான் பார்த்ததில்லை! அவளுடைய தோழிகளும் அத்தகைய சின்னங்களையே அணிந்திருந்தார்கள்!'' என்ருர்.

இவ்விதம் முத்தசங்கையர் கூறியதும் வசவண்ணருடன் இருந்தவர்கள் அனைவரும் அவரைப் பரிகாசம் செய்தார்கள். வசவ தேவரோ, அவர் மீது வெறுப்பின்றி அன்புடன் சிரித்து, “சிவபெருமானையே தியானித்து வேருென்றையும் அறியாத ஜங்கமர்களின் மகிமையை நம்மால் சொல்ல முடியாது'' என்ருர்.



## 17. பசுபதி நாயனர் கதை

வசவண்ணர் மகிழ்ச்சியாகப் பேசிக்கொண்டிருந்தபோது சென்னவசவர் தன் மாமனாரான அவரை நோக்கி, "சிவபக்தியிற் சிறந்தவர்களான ஜங்கமர்கள் பேதைத் தன்மை அடைவதற்குக் காரணம் என்ன?" என்று கேட்டார். அதற்கு வசவண்ணர், "ஞானியராகிய ஜங்கம மூர்த்திகள் சிறுவர்களையும் உன்மத்தர்களையும் ஒத்திருப்பார்கள்" என்ருர்.

"இந்தத் தபோதனராகிய முத்தசங்கையரைப் போலவே முற்காலத்திலும் இருந்தார்களோ?" என்று சென்னவசவர் கேட்டார்.

"இந்த முத்தசங்கையரைப் போலவே, அனேகம் பேர்கள் இருந்தார்கள்" என்று சொல்லிவிட்டு வசவதேவர் ஒரு கதையைச் சொல்லத் துவங்கினுர்.

பசுபதி நாயனர் என்று ஒருவர் இருந்தார். அவர் ஒரு வீரசைவர். காம நோயற்ற உண்மையான தபோதனர். சிவபெருமானிடம் எல்லையற்ற பக்தியுடையவர். ஸ்ரீ பஞ்சாக்ஷரத்திலேயே சிந்தனையுள்ளவர். அவர் திருவய்யலூர் என்ற திருத்தலத்தில் வாழ்ந்து வந்தார்.

அந்த ஊரில் ஒரு திருமடத்தில் உத்தமர்களான வீர மாஹேஸ்வரர்கள், சிவமஹா புராணத்தை வாசித்துக்கொண்டிருந்தார்கள். அந்தப் புராணத்தில், திருப்பாற்கடலை மத்தித்த பொழுது அதில் தோன்றி எழும்பிக் கொல்ல வந்த மிக்க பயங்கரமும் கடுமையும் கொண்ட ஹால ஹலம் என்ற கொடிய விஷம் உலகம் எங்கும் வியாபித்து, அக்னி ஜ்வாலையை வீசிக்கொண்டு எழுந்ததையும், அப்போது தேவர்களும் அசுரர்களும் பயந்து ஒன்றுசேர்ந்து 'ஓலம் ஓலம்' என்று தப்பியோடிய நேரத்திலே, "கொடிய நஞ்சு, இது



விஷமாயிற்றே, கொன்றுவிடுமே,'' என்று சிறிதும் யோசிக்காமல், சிவபெருமான் உலக ரக்ஷணார்த்தமாக திருவமுது செய்தருளியதையும் வர்ணிக்கும் கதையைப் படித்துச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். அதைக் கேட்டவுடனேயே பசுபதி நாயனர், மதிமயங்கி மனக்கலக்கத்துடன் ''என்னது? என்ன செய்வது? மறுபடியும் சொல்லுங்கள். எம் சிவபெருமான் விஷத்தைத் திருவமுது செய்வதற்குக்காரணம் என்ன? இந்தச் செய்கை உண்மையோ? உண்மையைச் சொல்லுங்கள்!'' என்று சிவபுராணத்தைப் படித்துக் கொண்டிருந்தவரைப் பிடித்து உலுக்கிக் கேட்டார். அவரும் மற்றவர்களும் அந்தச் செய்தி உண்மைதான் என்றுர்கள். உடனே, அவர் புத்தி கலங்கிப்போய் பூமியில் விழுந்து, ''தேவர்கள் பகைவர்களோ?'' என்று கோவித்து, ''நஞ்சை உண்ணும் என்று ஒருவர் விரும்பினுலும் மனம் ஒப்பிச் சாப்பிடுவார்களோ? அறிவற்ற மூடர்களும் மனம் ஒப்பி விஷத்தை உண்பார்களோ? வலிய விஷத்தைப் புசித்து இறந்தவர்கள் எத்தனை பேர்? உம்மைக் கொல்ல வந்த இந்த விஷத்தை மீட்க வல்ல மந்திரவாதி யாரோ? சிவபெருமானே! கொல்ல வந்த அந்த விஷத்தை அந்தக் காலத்தில் அகற்றுவதற்கு, உண்மையான சுற்றத்தாராகச் சமீபத்தில் இருந்தவர்கள் உதவி செய்யவில்லாமல் போய்விட்டார்களே. எனக்குத் துணை நீயன்றித் தேவர்களில்லை. நான் என்ன செய்வேன்? இந்த நொடிப்

பொழுதில் அந்த விஷத்தைத் துப்பிவிடுமே! விஷத்தை திருவமுது செய்த காலத்தில் உமாதேவியார் உம்மருகே இருக்கவில்லையோ? உமது கற்றைச் சடாபாரத்தையடைந்த கங்கையும் சம்மதித்திருந்ததற்குக் காரணம் என்ன? ஓல, ஓல! நந்தியெம் பெருமான் உம் நெருங்கிய உறவினரல்லவோ? யான் மனமாரத் தெரிந்த விஷயமாக இருந்தால் விலக்கி விடுவேனே? இப்போது நான் என்ன செய்வேன்? இந்தச் சிவமஹா புராணத்தை இந்த வீரமாஹேஸ்வரர்கள் இவ்விதம் புகழ்ந்து சொல்வதற்குக் காரணம் என்னவோ? பெருமை பொருந்திய யானை முகமுடைய விநாயகரும் வேலாதமுடைய வேல் முருகனும் அப்பன் மீது ஆசையற்ற பிள்ளைகளோ? வீரபத்திரக் கடவுள் முதலிய அநேக சிவகணங்களாகிய நீங்களாவது ஓடிவந்து அவர் கரத்திலிருந்த விஷத்தைப் பிடுங்கி வீசினீர்களில்லை! மறந்து விட்டீர்களோ? இந்த விஷம் தலைக்கு ஏறுகின்ற காலத்தில் நீங்கள் முயன்று இதஞ் செய்வது காரியமல்ல. அதற்கு முன்பே, தந்தையாராகிய சிவபெருமானின் திருவடிகளில் விழுந்தாவது, ஒப்பற்ற ஔஷதத்தைக் கொடுத்து எப்படியாயினும் என் வார்த்தைக்கு மனமுருகி அவரை மீட்டு விடுங்கள்! கொடிய இந்தவொரு கண்டத்தையும் நீங்கள் மீட்டுவிடுவீர்களாயின், சிவபெருமான் வயதென்பதேயில்லாமல் முடிவில்லாத காலம் வரை பிழைத்திருப்பார். சிவபெருமான் விஷத்தைத் திருவமுது செய்யவும் யான் பிழைத்திருக்கமாட்டேன்! பெருங்கடலில் வீழ்ந்துவிடுவேன்'' என்று ஓடினர்.

அப்போது சிவபெருமான் விருஷப வாகனத்தில் எழுந்தருளினர். சிவகணங்களும் தேவர்களும் புடைசூழ வந்து பசுபதி நாயனர் முன்பு தோன்றி, ''உனக்கு வேண்டிய ஒரு வரத்தைக் கேள். தந்தருள்கிறோம்!'' என்றார்.

பசுபதி நாயனர், சிவனரை வணங்கி, ''ஜ்யோதி ஸ்வரூபனே! திருவமுது செய்த கொடிய விஷம் மூடிக் கொண்டு மரணமுண்டாயின் நான் என்ன செய்வேன்? ஆகையால் அந்த விஷத்தை இங்கே துப்பிவிடுவீரானல், அதுவே எனக்கு வரங் கொடுத்தது போலாகும்!'' என்றார்.

அப்பொழுது சிவபெருமான் நகைத்து, ''பக்தனே! யாம் இந்த விஷத்தைத் துப்பிவிடுவோமாயின், இந்தப் பூவுலகம் முழுதும் வியாபித்துச் சுட்டெரித்து, தேவலோகத்தையும் அழித்துவிடும். இந்த விஷம் எமது ஸ்ரீகண்டத்தில் நிலைத்துப் போவதேயன்றி அதனல் எமக்கு ஒரு தீங்கும் உண்டாவதில்லை'' என்று சொல்லியருளினர்.

அப்போது பக்தராகிய பசுபதி நாயனர், ''ஸ்ரீகண்டத்தையடைந்த விஷமானது உள்ளே இறங்கி விரைந்து உள்ளே

சென்றுவிட்டால் நான் என்ன செய்வேன்? லோகநாதா நான் நம்பமாட்டேன். என் உயிரை மாய்த்துக் கொள்வேன்!'' என்ருர்.

''பக்தனே, நாம் திருவமுது செய்த விஷமானது நமது ஸ்ரீகண்டத்தில் மட்டுமே இருக்கும். இனிக் கீழே இறங்க மாட்டாது. நம்பிக்கையில்லாமற் போவாயாயின், எமது துடையின் மீது எமது ஸ்ரீகண்டத்தில் விஷமானது இறங்கி விடாமல் விழித்துக்கொண்டிரும்'' என்ற தேவர் தலைவரான சிவபெருமான் அவரைத் தம் வலது துடையின்மீது அன்புடன் எழுந்தருளச் செய்தார். இவ்விதமாகச் சிவபெருமானது திருத்துடையின் மீது அமர்ந்து, விஷமானது ஸ்ரீ கண்டத்தை விட்டு இறங்காமல் உள்ளதா என்று விழிப்புடன் பார்க்கிற பக்தராகிய பசுபதி நாயனரின் பெருமையைச் சிவபெருமானைத் தவிர வேறு யார்தான் சொல்ல முடியும்!

---

## 18. கோட்கூச்சவ்வை கதை

---

வசவதேவர், சிவனடியார்களுக்குப் புதியதொரு கதையைச் சொல்லத் துவங்கினர்:—திருக்கோவூர் என்ற திவ்வியத் தலத்திலே, சிவதேவசரணர் என்று ஒரு சிவபக்தர் வாழ்ந்து வந்தார். அவர் வீர சைவர்களில் தலைவர். அவருக்கு கோட்கூச்சவ்வை என்ற பெண் ஒருத்தி இருந்தாள். அவள் பேதைப் பருவ வயதினளாக இருந்தாள். அவளது கதையைச் சொல்கிறேன், கேளுங்கள்.

சன்மார்க்கத்தவரான சிவதேவ சரணர் சன்மார்க்கத்துக்குப் புகலிடமான தம் ஸ்தலத்தில் கோயில் கொண்டிருக்கும் போகேஸ்வரருக்குத் தினந்தோறும் பசும்பாலை நிவேதனம் செய்து, ''நாயினும் கடைப்பட்ட அடியேனை ஆட்கொண்டு அருள்வோனே! காத்தருள்வாய்!'' என்று வழிபடுவது வழக்கம். இப்படியிருக்கும்போது ஒரு நாள் அவர் சிவ கைங்கரியத்தின் பொருட்டு, ஒரு ஒப்பற்ற க்ஷேத்திரத்திற்குப் போக நினைத்து, தம் குமாரியை நோக்கி, ''பெண்ணே! எமது சிவபெருமானுக்கு இந்தக் கிண்ணத்தில் இந்தப் பாலை நாள்

தோறும் குறையில்லாமல் திருவமுது செய்யும்படிச் செய்வாய். உனக்கு நல்லதொரு சிற்ருடையும் அழகிய கைக்கு வளையலும் காதோலையும் பொற் கங்கணமும் பொற்பொட்டும், மோதிரமும் வாங்கிக்கொண்டு நான் விரைவில் வந்துவிடுகிறேன். நீ பயப்படாமல், நியமித்த காலத்தில், பசும்பாலை நமது சிவ பெருமானுக்காகத் திரளக் காய்ச்சி, "அன்புடன் நைவேத்யம் செய்!'' என்று திட்டஞ் செய்துவிட்டுத் தம் மனைவியோடு யாத்திரைக்குப் போனுர்.

பேதைப் பருவத்தினளான கோட்கூச்சவ்வை, காலத்திற் கேற்க, ஒரு கிண்ணியில் பாலை வார்த்து கையிலெடுத்துக் கொண்டு, சிவன் கோயிலை யடைந்து, அங்குள்ள போகேஸ்வரர் சந்நிதியின் முன்பு, அன்போடு அந்தப் பாலை வைத்து, ''ஐயனே! இந்தப் பாலைத் திருவமுது செய்யும்'' என்று சொல்லி, திருமுன்பு வைத்தாள். பல முறைகள் வணங்கித் தொழுது வேண்டினுள், எவ்வளவோ முறைகள் வேண்டியும் சிவபெருமான் திருவமுது செய்யவில்லை. அதைக் கண்டதும், அவள், அந்தப் பாற்கிண்ணத்தைத் தன் இரு கைகளாலும் அன்புடன் தூக்கிக்கொண்டு, ''ஐயனே இந்தப் பாலைத் திருவமுது செய்யாமல் நீர் இருக்கக் காரணம் என்ன?'' பால் சூடேறவில்லையோ? வாசனையாக இல்லையோ? சூடு ஆற வில்லையோ? பசியில்லையோ? பால் முறிந்து போயிற்ருே? பார்த்தவர்களின் திருஷ்டி தோஷம் பட்டதோ? அல்லது பாலின் அளவு குறைவாக இருக்கிறதோ? ஞானமில்லாத மூடராகிய அடியேன் கொடுத்ததென்ருே? மதுரமான பாலெடு பாலிலே இல்லையென்ருே? பற்றுள்ள கிண்ணத்தைத் துலக்க வில்லை என்ருே? தண்ணென்று ஆறிப் போயிற்றென்ருே? தண்ணீர் கலந்த பாலென்ருே? மேலான நெய் கலக்கவில்லை யென்ருே? காலத்திற்கு முன்பே கொண்டு வந்துவிட்டேன் என்ருே? இவ்வளவையும் நினைத்துக்கொண்டு, இந்தப் பால் நமக்குத் தேவையில்லை என்று நீர் இருக்கலாமோ? இல்லை யெனில் நீர் திருவமுது செய்யாததற்குக் காரணம் என்ன? பாலும் சிறிது சோறும் பழமும் கலந்துகொண்டு வரவில்லையே என்ரு? தேனும் சர்க்கரையும் கச்சாயமும் எங்கள் வீட்டில் இருக்கின்றன. அவற்றையும் உமக்குக் கொண்டுவரட்டுமோ? பசுவின் நெய்யும் உறியின் மேலுள்ள குடங்கள் நிறைய இருக் கிறது. அதையும் கொண்டு வந்து கொடுக்கட்டுமா? உம் விருப்பந்தான் என்ன? அல்லாமல் என் தந்தை நாளையத் தினம் நமது திருமடத்தில் நல்ல ஜங்கமாராதனை நடத்தப் போகிருர். அப்போது நல்ல நெய்யையும் பாலையும் படைப் பார். நான் உம்மை அழைத்துச் செல்வேன். பிறகு திருவமுது செய்யத் தடை என்ன? தாயாரும் தகப்பனுரும் ஊருக்குப் போகும்போது எனக்கு அவலும் தேங்காயும் கொடுத்துவிட்

டுப் போனார்கள். அவற்றையும் நான் உமக்குக்கொடுப்பேன். நீர் இந்தப் பாலைத் திருவமுது செய்தால், நாளையத்தினம் என் தந்தை நல்ல மோதிரத்தையும் நூபுரத்தையும் முத்துமாலையை யும் பதுமையையும் சிற்றிலையும் தொட்டிலையும் வாங்கி வந்து கொடுப்பார்! அந்த வரிசைகள் எல்லாவற்றையும் நான் உமக்குக் கொடுப்பேன். ஆகையால் எனது சொல்லைக்கேளும். இந்தப் பால் கெடுவதற்கு முன்பே திருவமுது செய்யும்! நான்



கொடுத்த இந்தப் பாலை இப்போது நீர் திருவமுது செய்ய வில்லையென்றால் என் தாயும் தந்தையும் கேட்டு, என்னைச் சாகும்படி அடிப்பார்கள். அவர்கள் ஊரிலிருந்து வந்து, அவர்கள் தெரிந்து கொள்வதற்கு முன்னதாக நீர் இந்தப் பாலைத் திருவமுது செய்துவிடும்!'' என்று கெஞ்சுவாள், அழு வாள், பாலையும் பார்ப்பாள்; போகேஸ்வரரையும் பார்ப்பாள்.

மறுபடியும் வணங்கி அழுவாள். தேம்பித் தேம்பி அழுவாள். தன்னை மறந்து நிற்பாள். கைகளை முறித்து அழுவாள். கண்ணீரைத் துடைப்பாள். மீண்டும் அழுவாள். இவ்விதமான அலங்கோலத்துடன் அவள் இருக்கும் நிலையை உணர்ந்த சிவபெருமான், அவள் அன்புடன் நிவேதனம் செய்த பாலை விரைவாக திருவமுது செய்தருளினர்.

இவ்வாறு அந்தப் பேதைப் பெண், சிவபெருமானுக்குப் பாலை நிவேதித்துவிட்டு, தன் மனமகிழ, வீடு நோக்கிப் புறப்பட்டாள். அந்தச் சமயத்தில் அவளுடைய தாயும் தகப்பனும் தங்கள் சிவ கைங்கரியத்தை நிறைவேற்றிவிட்டு சென்ற ஊரிலிருந்து திரும்பி வந்துவிட்டார்கள். அவர்கள் சிவன் கோயிலின் சமீபமாக வந்துகொண்டிருந்தார்கள். அப்போதுதான், கோட்கூச்சவ்வை சிவபெருமானுக்குப் பாலை நிவேதனம் செய்துவிட்டு, வெறுங்கிண்ணத்தை எடுத்துக்கொண்டு, கோயிற்படி வழியாக இறங்கி வந்துகொண்டிருந்தாள். அவளை அவளது தந்தை பார்த்துவிட்டார்; யோசித்தார். "இந்தக் காரியம் செய்ததற்குக் காரணம் என்ன?'' என்று எண்ணி, அவளை அணுகி, "அடி பாதகீ! சிவபெருமானுக்கு நிவேதித்த பாலை நீ என்ன செய்தாய்? நீ எங்கு போயிருந்தாய்? கிண்ணத்தில் பால் சிறிதுமில்லாமல் வெறுங்கிண்ணத்தை வீட்டுக்குக் கொண்டு போகிருயே? அங்கு யாருக்குப் பாலைக்கொடுத்தாய்? கவிழ்த்துக் கொட்டிவிட்டாயோ? நீயே குடித்துவிட்டாயோ? பாதகி, சொல்!'' என்று கேட்டார்.

"இல்லையப்பா நீங்கள் சந்தேகித்த விஷயங்களில் ஒன்றும் நடக்கவில்லை. நீங்கள் சொன்னது போலவே, இந்தக் கிண்ணத்தை நன்ருகத் துலக்கி, நன்ருகத் திரளக் காய்ச்சிய பசும் பாலை நிரப்பிச் சிவாலயத்திற்குப் போய்ச் சிவபெருமானது சந்நிதியிலிருந்து, திருவமுது செய்வாய் என்று வணங்கித் துதித்தேன், அழுதேன். சிவபெருமான் திருவமுது செய்தார். பிறகு 'பெண்ணே, போய் வா!' என்ருர். நான் கிண்ணத்தை எடுத்துக்கொண்டு புறப்பட்டேன். நீங்கள் வந்து என்னை இத்தனைக் கேள்விகள் கேட்டுவிட்டீர்கள்!'' என்ருள் சிறுமி.

அவள் சொல்வதைச் சிவதேவசரணர் நம்பவில்லை. கள்ளியைப் போலத் தன்னிடம் பிடிவாதம் செய்வதாக அவளை வைது, "சிவபெருமான் பாலைத் திருவமுது செய்தது பொய்! இந்தச் செய்தியை நாமே தெரிந்துகொள்வோம்'' என்று சிவதேவசரணர் யோசித்து, மறுநாள் தம் வீட்டிலுள்ள பாலை அந்தக் கிண்ணத்தில் வார்த்து, பேதையான கோட்கூச்சவ்வையின் கையிலே கொடுத்து, வாவென்று அவளையும் அழைத்துக்கொண்டு, சிவபெருமானின் சந்நிதிக்குச் சென்று,

அதை வைத்து, “ இப்போது சிவபெருமான் திருவமுது செய்யச் செய்வாய். அப்படிச் செய்தால் உன் பக்தியைப் பாராட்டுகிறேன்” என்ருர். கன்னியும் முன்பு செய்தது போலவே, அன்புடன் பாலைவைத்து வணங்கினுள், வேண்டினுள்.

கன்னிப் பருவத்து கோட்கூச்சவ்வையின் சிறந்த பக்தியின் உறுதியை உலகத்தார் அறியச் செய்வதற்காக, சிவபெருமான், அந்த மதுரமான பாலைத் திருவமுது செய்யாமல் இருந்தார். அதைக் கண்ட கோட்கூச்சவ்வையின் கண்கள் கலங்கின. அவள் சிவபெருமானின் திருவடியை நோக்கி, “ சிவபெருமானே! இப்போது இந்தப் பாலைத் திருவமுது செய்ய மாட்டேன் என்று மௌனமாக இருப்பதற்குக் காரணம் என்ன? ஒரு வேளை நேற்றருந்திய பால் இன்னும் உமக்கு செரிக்கவில்லையோ? அல்லது இப்போது என்னுயிரை வாங்க வேண்டும் என்று திருவுள்ளத்தில் நினைத்தீரோ?” என்ருள்.

அப்போது சிவதேவசரணருக்குக் கோபம் பொங்கியது. அவர் தம்மகளை நோக்கி, “ இந்தச் சிவபெருமான் பாலை விரும்பித் தொடவும் மாட்டார். அதைப் பார்க்கவும் மாட்டார். பாதகீ! நீ என்னவோ, சிவபெருமானே திருவமுது செய்தார் என்று சொன்னுயே! நீ இப்போது என் கையால் சாகத்தான் போகிருய்; உன் தலையை அறுத்து விடுவேன்!” என்று கோட்கூச்சவ்வையை நெருங்கினுர். உடனே அவள் பயந்து நடுங்கி அழுதுகொண்டே சிவலிங்கத்தை நோக்கி, “அடைக்கலம் ஐயனே! நான் உனது அடைக்கலம்!” என்று ஓடினுள். சிவதேவசரணர், ஓடுகின்ற தன் மகளின் சிகையைப் பிடித்து இழுக்கிற சமயத்தில், சிவபெருமான் கோட்கூச்சவ்வை கொடுத்த பசும்பாலைத் திருவமுது செய்து, “ நீ உஜ்ஜீவிக்கும்படி நமது மார்பினிடத்தில் இரும்” என்று திருவுளமகிழ சிகையை இருக்கச் செய்தார்.

சிவதேவசரணர், இந்த மகிமையைப்பார்த்து, மனமுருகக் கண்களில் கண்ணீர் மல்க தம்மையே மறந்து நின்ருர். சிவபெருமானது திருமார்பினிடத்தில் ஏழை அன்பருடைய சிகையானது இன்னும் காணப்படுகிறது. இந்த அடையாளத்தாலேயே, உலகத்தார் அந்தக் கோயிலிலுள்ள சிவபெருமானை கொப்பிலிங்கேஸ்வரர் என்று இப்பொழுதும் வழங்குகிருர்கள்.

# 19. பெச்சமாதேவி கதை

சிவபெருமானிடத்தில் ஐக்கியமாகிய கோட்கூச்சவ்வை யாரேயல்லாமல், பெச்சமா தேவியார் என்பவர் ஒருவரும் இருந்தார். அவள் பக்தியில் சிறந்தவள்.

சிவபெருமானுக்கு அழகுள்ள மனைவியும் பிள்ளைகளும், வணக்கத்துடன் பணிவிடை செய்யும் தொண்டர்களும் இருந்துங்கூட, அவரை எல்லோருமே 'தாயில்லாதவன்' என்று சொல்வதை பெச்சமா தேவியால் கேட்டுச் சகிக்க முடியவில்லை. தாயில்லாப் பிள்ளை நிலை அவல நிலையாக இருக்குமே என்று அவள் மனம் வருந்தி, "ஐயனே! சிவபெருமானே! நீ தாயில்லாமல் வளர்ந்தது எப்படி? பிறந்த பிறகு தாய் உன்னைச் சிறு குழந்தையாக இருத்திவிட்டு இறந்தாளோ? தாயார் இருப்பாளாயின் தீமையான தோலாடையை நீ தரித்திருப்பதற்குக் காரணம் என்ன? தாய் இருந்தால் எலும்பு மாலையை நீ அணிந்திருப்பாயோ? தாய் இருந்தால், உனது உடம்பில் பாம்புகள் நெளியச் சம்மதித்திருப்பாளோ? தாய் இருந்தால், நீ சுடலையில் ஆடுவதைப் பார்த்திருக்கமாட்டாளே? தாய் இருப்பாளாயின் பேய்களின் கூட்டத்தோடு உன்னைக் கூத்தாடச் சம்மதிக்கமாட்டாளே? தாயார் இருப்பாளாயின், உன்னை விஷம் அருந்தும்படி விட்டிருக்க மாட்டாளே?

உனக்குத் தாய் இருந்தால், உன்னைத் தாயில்லாதவன் என்று பிறர் சொல்ல நான் கேட்கமாட்டேனே? தாய் இருப்பாளாயின் நீ ஜடை முடி தரித்து, நீ தவமிருப்பதைக் கண்டு சகிக்கமாட்டாளே! தாய் இருப்பாளாயின் பிச்சையெடுத்த சோற்றை உண்ணும்படி உன்னை விட்டிருக்கமாட்டாளே? தாயிருப்பாளாயின், வேடன் எச்சில் செய்த மாமிசத்தை நீ உண்ணுங் காலத்தில் உன்னைத் தடுத்திருப்பாளே! தாயிருந்தால், உடல் முழுவதும் சாம்பலைப் பூசி நீ திரியமாட்டாயே! தாயின் முலைப்பாலையும் வெண்ணையையும் எண்ணையையும் ஊட்டியும் நீராட்டியும் தாய் போஷிக்காமல் இப்படித் தானகவே வளர்ந்த அழகான உன் உடம்பு, தாய்

ஒருத்தி இருந்திருந்தால், இன்னும் எவ்வளவு அழகாகவும் செழுமையாகவும் வளர்ந்து பொலிவுடன் விளங்கும்? கல்யாணமும் நோன்பும் விரதமும் சுபதினமும் வருங்காலத்தில் உன்னைக் குளிப்பாட்டி, புதிய மஞ்சட் பூவைச் சாற்றி, புதிய ஆடையை அலங்காரமாகத் தரித்து, அழகிய ஆபரணங்களை அணிவித்து, உன்னைத் தன்னிரு கண்கள் நிறைய அன்புடன் உற்று நோக்கி, நல்ல சோற்றை உண்பித்து, உன்னைக் கட்டியணைத்து மகிழ்வாளே! இனி இதற்கு நான் என்ன செய்வேன்? நானுவது உனக்கு இனி தாயாயிருந்து வளர்ப்பேன்!'' என்று எண்ணமிட்டாள். மின்னலிடையாளான பெச்சமா தேவி பேரன்புடன் இவ்விதம் எண்ணியதுமே, பக்தர்கள் மனத்தில் நினைத்ததை நினைத்தபடியே அனுக்கிரஹம் செய்யும் சிவபெருமான், தம் பழமையான திருமேனி வடிவு நீங்கி, யாவரும் விரும்பும் குழந்தைத் திருமேனியனுகினுர்.

ஆகவே, பெச்சமா தேவி தாயார் ஆனுள். மேன்மை பொருந்திய அவளது திருத்தனங்களில் பாலூறியது. அவள் அந்தப் பாலை, சிவக்குழந்தைக்கு உண்பித்து அபேதமாய்த் தவஞ் செய்து ஈன்ற குழந்தையைப்போல மகிழ்ந்தாள். பிறவிக் குருடன் கண் பெற்றது போலப் பரவசப்பட்டாள்.



அவள் தன் இரு துடைகள் மீதும் சிவபெருமானை உட்கார வைத்து பிரம்மன் தேடிக் காணாத திருமுடியில் எண்ணெய்க் காப்பிட்டு, மூக்கை உருவி, திருக்கண்களில் எண்ணெயானது சிறிதும் விழாமல் கவனித்து, இருதிருச் செவிகளையும் நீவி, திருமார்பிலும் திருவுந்தியிலும் எண்ணெயிட்டு, அழகான திருமுடியில் மெதுவாகத் தேய்த்து, திருக்கரங்களையும், திருமாலுங் காணமுடியாதத் திருவடிகளையும் கைகளால் நீவி, திருமேனி முழுவதும் நன்ருகத்தடவி, யமனை உதைத்துத் தள்ளிய தாமரை போன்ற உள்ளங்காலை மெதுவாகத் தடவி, எண்ணெய் போவதற்குரிய வஸ்துக்களை பெய்து, சுகமாகத் தேய்த்து, சுடுநீரில் தண்ணீரை விளாவி, கைபொறுப்பதாகத் தீண்டிப் பார்த்து, சிவபெருமானின் திருமுடி மீது மொண்டு ஊற்றி நீராட்டுவாள். அன்புடன், நீரானது திருவாயிலும் திருநாசியிலும் போகவொட்டாமல் குளிப்பாட்டிய பிறகு, நலங்குப் பொடியினைத் தருவித்துத் தேய்த்து, அழகான திருமேனி முழுவதும் அலங்கரித்து, விசாலமானத் திருவிழிகளையும் திருநாவியையும் திருவுந்தியையும் செம்மையாக நீர் அற ஊதி, நகங்களிற் படிந்திருக்கும் அழுக்கை மேலாக எடுத்து, திருஷ்டி தோஷம் படாமல் அந்த மஞ்சன நீரை வலமாகச் சூழத் தெளித்து பூமியிற் துப்பிச் சுட்டு விரலால் இழைத்து திருநுதலில் மண் பொட்டு வைப்பாள். அகப்பிலிருக்கிற சுட்ட நல்ல விபூதியைப் பூசி, வலக்கையினுல் திருமுடியும் ஸ்ரீகண்டமும் சாயாதபடி, வயிற்றினிடத்திலும் மார்பினிடத்திலும் தழுவிக் கொண்டு, குளிர்ந்த திருவிழிகளுக்கு மைதீட்டுவாள். நெற்றிக் கண்ணைப் போலச் சுட்டி மணியைக் கட்டித் தொங்கவிட்டு, திருவிரல்களில் மோதிரங்களை அணிவிப்பாள். அன்புடன் அரைஞாணையும் ரக்ஷாபந்தனத்தைக் கட்டி, சுவடிகளையும் கட்டி, 'ஆராரோ' என்று, இசை பொருந்திய தாலாட்டைப் பாடுவாள். சதுர்வேதங்களைக் கேட்கும் இறைவன் அவள் பாடலைக் கேட்டுச் சிரிப்பான். பிறகு அவள் தன் தனங்களின் பாலையும் எண்ணெயையும் கலந்து ஊட்டி, எண்ணெய் அழுக்குப் போகச் சுத்தம் செய்து, விழுங்கும்படிச் செய்வாள். திருமுறுவல் செய்யும்படித் திருமுகத்தை அசைத்துச் சிரிப்புண்டாக்கித் தானும் சிரித்து, அதன் பிறகு தாங்க முடியாத அன்பால் மகிழ்ந்து, "முத்தம் கொடும்!" என்று கேட்டு, சதுர்வேதங்களும் நித்யவாசஞ் செய்யும் அவரது அழகிய திருவாயினில் முத்தமிடுவாள்.

சிவபெருமானுன அந்தக் குழந்தையை தன் துடைமீது இருத்தி, "என் வாழ்வுக்கு உரிய செல்வமே!" என்று திருவடித் தாமரை மலர் போன்ற பாதங்களைத் தன் விழிகளில் ஒற்றிக்கொள்வாள். தலைமீதும் ஒற்றிக்கொள்ளுவாள். இவ்விதம் பிறப்பதென்பதே இல்லாத சிவக்குழந்தையை அன்போடும் ஆசையோடும் பெச்சமாதேவி வளர்த்து வந்தாள்.

இந்நிலையில், பெண்ணரசியான பெச்சமா தேவியின் பெரும் பக்தியின் உறுதிப் பாட்டை உலகத்தாருக்கு அறிவிக்கும் பொருட்டு, சிவபெருமான் திடீரென்று வெண்ணெய் உண்ணுமலும், பாலை உண்ணுமலும், தாய்ப்பாலை உண்ணுமலும், தூங்காமலும் நோயினுலும் துன்பப்படும் குழந்தையைப் போலானுர்.

அதைக் கண்டதும் பெச்சமா தேவி மனங்கலங்கினுள். "இந்த அநர்த்தமான செயலுக்குக் காரணம் என்ன? ராஜ குமாரனே! யாருடைய திருஷ்டி தோஷம் பட்டதோ? பச்சை வெண்ணெயும் பாலும் செரிக்காமற் போய்விட்டதோ? பசி மிக்க தேவதையின் தோஷம் மூடியதோ? உன்னை இந்தப் பிணி மூடிக்கொண்டிருக்க நான் எப்படிப் பார்த்துச் சகித்திருப்பேன்? என்ன செய்வேன், கடவுளே!" என்று பெருமூச்செறிவாள்; அழுவாள்; சோர்வாள். பிறகு குழந்தையைப் பார்த்துப் பார்த்துப் புலம்புவாள். வயிற்றைத் தட்டிப்பார்த்து 'ஓ' என்று அலறியும் 'பால் உண்ண மாட்டாதோ!' என்று தனங்களைத்தந்தும், தனங்களைக் கடிக்காமையினுல் புலம்பியும் "தலை சாய்ந்து விட்டதோ?" என்று அழுதும் அணைத்து ஏந்திக்கொண்டும் தவிப்பாள். முகத்தில் அறைந்து கொள்வாள். "குழந்தைக்கு இந்தக் கொடிய நோய் முதிர்ந்துவிட்டால் என்ன செய்யுமோ? அதற்கு முன்பு என் உயிரை மாய்த்துக்கொள்வேன்" என்று பெச்சமாதேவி மனத்திடத்தோடு அரிவாளைக் கழுத்தில் மாட்டிக்கொண்டு அறுத்துக்கொள்ள முயன்ருள். அப்போது குழந்தைத் திருமேனியே, தொன்மையாகியத் திருமேனியாகிக் காட்சி தந்து, "அம்மா! நான் உன்னை மெச்சினேன். விரும்பிய வரங்களைக் கேள்!" என்ருர் சிவபெருமான். அதைக் கண்டதும் பெச்சமாதேவி மெய்சிலிர்க்க "சிவபெருமானே! உனது திருமேனியிலடைந்த பிணியானது நீங்கி, நீ என் முன்பு வந்தாயல்லவா? அதுவே எனக்குப் போதும்! வேருெரு வரமும் எனக்கு வேண்டாம்! நீ சௌக்கியமாய் வாழவேண்டும் என்பதே நான் வேண்டும் வரம்!" என்ருள்.

சிவபெருமான் புன்சிரிப்பு பூத்து, "நமது தாயான நீ க்ஷேமமாயிருப்பதால், நம்மை ஏன் பிணியானது அணுகப் போகின்றது? இந்த உலகத்தில் உனக்கு மோக்ஷ சாம்ராஜ்யத்தைப் பரம மகிழ்ச்சியுடன் அருள் செய்வோம். நீ நம்மைச் செவ்வையாக வளர்த்து வந்த நற்காரியத்தினுல் நீ நமக்கு "அம்மவ்வை" என்று திருவாயி மலர்ந்தருளி, மறைந்து தேஜோ ரூபமானுர்.

# 20. கலிய நாயனுர் கதை

கலிய நாயனுர் என்று ஒரு சிவபக்தர் இருந்தார். அவர் சன்மார்க்கத்தில் ஒப்பற்றவர். ஸ்ரீ பஞ்சாக்ஷர மகாமந்திரத்தை யன்றிவேறெந்த மந்திரத்தையும் உச்சரிக்காதவர். சிறந்த ஆசாரசீலர். அவர் ஒரு சமயம் தாம் குடியிருந்த நகரத்தை விட்டு வேருெரு நகரத்துக்குப் போகவேண்டும் என்ற கருத்துடன் பயணப்பட்டார். அவர் அப்படிச் செல்லும்போது, வழியிலே ஒரு காட்டைக் கடந்துசெல்ல வேண்டியிருந்தது. அங்கு சிவபெருமான், துருவாலயம் இல்லாமல் அந்தப் பெரிய காட்டில் எழுந்தருளியிருப்பதைப் பார்த்தார். உடனே, சிவலிங்கப் பெருமானின் அருகே விரைந்து சென்று பெருந்துன்புற்ற மனத்துடன் சந்நிதியில் வணங்கி, மேலே எழுந்து தழுவிக்கொண்டார். அன்புடன் பெருமூச்செறிந்தார். கண்ணீர் சிந்தினுர். அந்தச் சிவலிங்கத்தை நோக்கி, "ஐயனே! தக்ஷனுடைய யாகத்தை அழித்த காலத்தில் மனம் வருந்திய தேவர்கள் உமக்குத் தீங்கிழைப்பாராயின் அதை நீக்க வல்லவர் யார்? மன்மதனது சரீரத்தை எரித்ததற்காக, அந்த மன்மதன் ஒரு தீங்கிழைப்பானுயின் நான் என்ன செய்வேன்? சிவபெருமானே! பிரம்மதேவனுடைய அழகான தலையை அறுத்த கொடிய பகைமைக்காக, அவன் உம்மைத் தேடி வந்து தீங்கிழைப்பானுயின், நான் செத்தே போவேன்! உமது ஒரு திருவடியால் உதைப்பட்ட யமன், அந்த விரோதத்திற்காக இங்குவந்து உமக்கு தீங்கிழைத்தால் என்னசெய்வேன்?" என்று அரற்றினுர். பிறகு மேலும் சிவலிங்கத்தை நோக்கி, "ஐயனே! குற்றஞ் செய்த நரசிம்ம மூர்த்தியின் சரீரம் அழியும்படி நீ அவனைக் கிழித்தெறிந்த விரோதத்திற்காக அவன் கோபித்து உன்னுடன் போர் செய்து உன்னைப் பிடித்துக்கொள்வானுயின் என்ன செய்வேன்? புன்னகை செய்தே திரிபுரங்களை எரித்ததை யோசித்து, அந்தச் சத்துருக்கள் எதிர்த்து வந்து போர் செய்வாராயின் நான் என்ன செய்வேன்? அந்தகாசுரனை கிழித்தெறிந்த விரோதத்திற்காக

அவன் சந்ததியார் வந்து போரிட்டால் என்ன செய்வேன்? சக்கரத்தால் மாண்ட ஜலப்தகாசுரனுடைய சந்ததியார் கோபித்தால் என்ன செய்வேன்? யானையை வலுவில் கொன்று அதன் தோலை யுரித்ததற்காகவும் புலியைக் கொன்றதற்காக வும் இந்தக் காட்டிலுள்ள யானைகளும் புலிகளும் சேர்ந்து உமக்குத் தீங்கிழைத்தால் அதை நீக்க வல்லவர் யார்?'' என்று கலிய நாயனர் அழுதும் மனம் வருந்தியும் சொல்வா ரானர்.

மீண்டும் அவர், ''ஐயனே! நம்மைவிடத் தாழ்ந்த மனிதர் களுக்கு நமது பதவிகளைவிட மேலான பதவிகளைச் சிவபெரு மான் அனுக்கிரகம் செய்ததற்குக் காரணம் என்ன? என்று மனப்பகை கொண்ட தேவர்கள் நீர் தனியாக இருக்கும் இந் நிலையில் ஒரு தீங்கிழைத்தால் நான் என்ன செய்வேன்? இமயத்தில் தோன்றிய மயில் போன்ற சாயலையுடைய உமா தேவி உம்முடன் எழுந்தருளியிருப்பதை நான் பார்த்ததில்லை. தபோதனர்கள் உம்மைப் பூஜித்ததையும் பார்த்ததில்லை. ஒருவர் தூக்கி உம்மை என் தலைமேல் வைப்பாரானுல், ஒரு நொடிப்பொழுதில் எங்களுடைய நாட்டில் ஒரு திருக்கோயிலைக் கட்டுவித்து, உம்மை அதில் எழுந்தருளச் செய்து பயமின்றி இருப்பேன்? நான் என்னதான் எண்ணியும் என்ன பயன்? தன்னந்தனியாக மனதிடத்துடன் நமது சிவபெருமான், இருக் கிருர் என்ருல் அவர் ஒரு மாவீரர்; தீவினையால் உண்டாகும் விரோதத்தின் காரணத்தை அறிந்தவர். அதனுல்தான் பகை மைக்கஞ்சாமல் வீற்றிருக்கிருர்!'' என்று நினைத்து, அவரை விட்டுப் போக மனமில்லாமல், அங்கேயே தங்கித் தமது பெருஞ்செல்வம், ஆடுமாடுகள், ரத்தினங்கள், ஆகிய யாவற்றையும் சிவபெருமானின் திருக்கோயில் திருப்பணிக் கென்றே கொடுத்து அவ்விடத்தில் கோயில் ஒன்றைக் கட்டத் துவங்கினர்.

திருக்கோயிலுக்குரியக் கர்ப்பக்கிருஹத்தையும் அர்த்த மண்டபத்தையும் கட்டி முடித்த பிறகு வானளாவும் திருக் கோபுரங்களையும் திருமதில்களையும் அகழிகளையும் கட்டி, திரு வாயில்களுக்குப் பெரிய கதவுகளையும் அமைத்து, பகைவரால் காக்க முடியாத கோட்டை போல அதைக் கட்டி முடித்தார். பிறகு, ஆலயத்தில் சிறந்த கிணறு ஒன்றையும் தோண்டி, சிவ பெருமானது பரிசுத்தமான திருவமுதிற்காக அமுதுபடி அளந்து கொடுப்பதற்கான நெற்களஞ்சியங்களையும் அமைத்து நல்ல மலர் வனங்களைப் பயிரிட்டு, சிவபெருமானுக்குரிய பூஜையை நாள்தோறும் விரும்பிச் செய்து வந்தார்.

அவர் தம் நண்பர்களை அழைத்துத் திருக்கோயிலைச் சுற்றிக் காவல் செய்ய நியமித்தார். தாமும் காவல் செய்து வந்தார்.

இவ்விதமாகத் திருப்பணிகளிலும் ஊழியர் சம்பளத்திலும் தமது செல்வம் யாவையும் செலவிட்டார். நாளடைவில் செல்வம் கரைந்தது. காவலாளர்கள் விலகினர்கள். யாருமே இல்லாமல் தாம் மட்டுமே திருக்கோவிலை காவல் செய்ய வேண்டியிருந்தது. அந்நிலையில் அவர் மணிகளைக் கோர்த்து இடுப்பிலே கட்டிக்கொண்டு, உடை வாளை ஒரு கையிற் பிடித்துப் பிறப்பாகிய வேங்கையை வேட்டையாடுபவரைப் போலக் கோலமணிந்து, இடையிற் கட்டிய மணிகளின் சப்தம் கலீர் கலீர் என்று ஒலி செய்ய, கலியநாயனர் இரவு முழுவதும் அன்புடன் காவல் செய்து வரலானர்.

பலர் சுற்றியிருந்து காவல் செய்வதைப்போல ஒருவரே கோட்டைப் பத்தேறியை ஏறிப்பார்ப்பார். இவ்விதமாகச் சில நாட்கள் கடந்தன. அவரது கையிலிருந்த தீவட்டிக்கு எண்ணெய் வாங்குவதற்குக்கூட அவரிடம் திரவியம் இல்லாமற்போயிற்று. ஆபரணங்கள் ஆடைகள் ஆகியவற்றைக் கொடுத்துத் திரவியம் பெற்று, அந்தத் திரவியமும் செலவழிந்து போயிற்று. பிறகு காட்டிற்கிடந்த காய்ந்த கட்டைகளைக் கொளுத்தி அந்த வெளிச்சத்தைக்கொண்டு சில நாட்கள் காவல் புரிந்தார்.

இப்படியிருக்க, ஒருநாள், 'நாம் திருக்கோயிலைவிட்டு விறகுக்காகப் போவோமானுல் சிவபெருமான், தனித்திருக்க



நேருமே' என்று யோசித்து, தமது இடுப்பில் உடுத்தியிருந்த ஆடையையும் தலைப்பாகையையும் சுட்டெரித்து, அதுவும் போன பிறகு, மேலும் பொருள் இல்லாமையால், எப்படியும் சிவபெருமானின் திருக்கோயிலைக் காவல் செய்தேயாக வேண்டும் என்ற விருப்பத்தால் தம் தலைமயிரை மேலே சேர்த்துக்கட்டி அதையும் தீவட்டியைப்போலச் சுட்டெரித்துச் சிவாலயத்தை அன்புடன் வலம் வந்தார்.

அப்போது அவரது தலைமயிர் பொசுங்கி, நெருப்பானது மண்டையைப்பற்றி, கொழுந்து விட்டெரிந்து நெற்றிக் கமலத்திலிருக்கும் பரஞ்சோதியும் வெளிப்படுதற்குரிய ஜ்யோதியும் எரிக்கத் துவங்கியும், அவர் சிவபக்தியினின்றும் நீங்காத மனதிடத்தோடு காவல்புரிந்தார். அவரது பக்தியைக் கண்டு, அவரது அன்பைத் திருவுளமுகந்த சிவபெருமான், கலியநாயனர் முன்பு ரிஷபவாகனத்தின்மீது காட்சியளித்தார்.

சிவபெருமான், நாயனுரை "உமக்கு வேண்டிய வரம் என்ன?" என்று கேட்க, அவர் பெருமானை வணங்கி, "ஐயனே! அடியேனுக்குத் தேவையான ஒரு வரத்தைக் கேட்டுக்கொள்வேன். தரித்திரம் மிகவும் பீடித்த தேவர்களைப்போல நீர் இந்தக் காட்டிலிராமல், தூய்மையான உமது ஸ்ரீமகா கைலாயத்துக்கு இப்போதே இவ்விடத்திலுள்ள சிவகணங்களுடன் போவோம். விரைவாக வாரும்!" என்ருர்.

உடனே, மலர்களால் ஜோடித்த பூந்தேர் ஒன்று தோன்றியது. அதிலே சிவபெருமானும் அரிய நாயனுரும் அவர் கட்டிய திருக்கோயிலும் சிவகணங்களும் ஏறியமர்ந்தார்கள். அது, ஸ்ரீமகா கைலாயத்திற்குள் பிரவேசித்தது.

சிவபெருமானே அழைத்ததால் சிவபக்தர்கள் ஸ்ரீமகா கைலாசம் சென்ருர்கள். சிவபெருமானை கலியநாயனுரே கைலாயத்திற்குத் திருக்கோயிலுடன் அழைத்துச் சென்ருர் என்று தேவர்களும் மக்களும் புகழ்ந்து பாராட்டினுர்கள்.



## 21. நமித்தண்டி நாயனர் கதை

கலிய நாயனுரைப் போலவே நமித்தண்டி நாயனர் என்ற ஒரு சிவபக்தர் வாழ்ந்து வந்தார். அவர் காஞ்சிபுரத்தில் நிகழ்ந்த பிரம்மோத்சவத்தை தரிசிப்பதற்காக, ஏகாம்பா நாதர் திருவாலயத்தினுள்ளே பிரவேசித்து, ஸ்ரீ நடராஜமூர்த்தியைத் தரிசித்தார். அப்போது சிவபெருமானுக்கு வாதமோ என்ன நோயோ என்று அவர் நினைத்து சிவபெருமானைப் பூஜிக்கும் பிராமணனைப் பின்வருமாறு கேட்டார்.

"ஐயரே! சிவபெருமானதுத் திருவரை வளைந்ததற்குக் காரணம் என்ன? அங்கு ஒரு திருவடி தூக்கியிருப்பதற்குக் காரணம் என்ன? பூமியிலே ஒரு திருவடி பதிந்திருப்பதற்குக் காரணம் என்ன? குளிர்ச்சியுடைய திருக்கரம் எதிரே அறைய நின்றிருப்பதன் காரணம் என்ன? விரிந்த ஜடைகள் தொங்கியிருப்பதற்குக் காரணம் என்ன? திருவிழிகள் இமையாமல் இருக்கக் காரணம் என்ன? ஒரு கொடிய வாதரோகம் சிவபெருமானைப் பிடித்துக் கொண்டதோ? இந்தச் க்ஷணத்திலேயே இந்த வாதரோகம் நீக்குவதற்குரிய மருந்து கிடைக்காமற் போனுல் அவருடைய அழகானத் திருமேனிக்கு யாதுண்டாகுமோ? தெரியவில்லையே! சிவபெருமானின் திருமுடியும் சிறிது வளைந்திருக்கிறதே! ஐயோ! இந்தப் பிறவிரோகம் விரைவில் ஒழிவதற்குரிய ஔஷதம் என்ன?" என்று கேட்டார்.

அவருடைய கேள்விகளையெல்லாம் பற்றி யோசித்த, அந்தப் பிராமணர், அவர் மிகவும் மூடபக்தர் என்று நினைத்து, "நிறையப் பொருள் இருந்தால் அதை என்னிடம் கொடும்! அப்படிக் கொடுத்தால் சிவபெருமானைத் துன்புறுத்தும் இந்த வாதரோகம் விரைவில் நீங்குதற்குரிய ஔஷதம் இருக்கிறது"

என்று சொன்னார். உடனே நமித்தண்டி நாயனார், மிகவும் மகிழ்ச்சியடைந்து தம்மிடமிருந்தப் பொருள்கள் யாவற்றையும் கொண்டுவந்து, அந்தப்பிராமணரிடம் கொடுத்துவிட்டு,"அடியேனை ஆண்டருளும் அண்ணலின் இந்த வாதரோகம் இப்போதே நீங்கிவிடுமாயின் நானும் என் மனைவியும் பிள்ளைகளும் உம் வம்ச பரம்பரைக்கு அடிமையாவோம்" என்று சொல்லி வணங்கினார். அவர் கொடுத்த பொருளையெல்லாம் பிராமணர் எடுத்துக்கொண்டு, மிகவும் சிறந்த மருந்து என்று ஒருவகை எண்ணெயை நிமித்தண்டி நாயனாரிடம் கொடுத்து விட்டுப் போய்விட்டார்.

நாயனார் மிகவும் மகிழ்ச்சியுடன் நடராஜமூர்த்தியின் அருகேபோய், அவரதுத் திருமேனி முழுவதும் அந்த மருந்து எண்ணெயைத் தளரப்பூசித் தேய்த்தார். எவ்வளவு தேய்த்தும் பெருமானின் வாதரோகம் நீங்காமல் இருந்தது. அதைக் கண்ட நாயனார் மனங்கலங்கிச் சோர்வடைந்தார்.

"ஐயோ! பெருமானே, உம் திருமேனியிலே இந்த வாத ரோகம் எப்படித்தான் வந்ததோ தெரியவில்லையே? நான் இனி என்ன செய்வேன்?" என்று நாயனார் தம் முகத்தில் அறைந்துகொண்டு அன்பினால் அழுது, மயக்கத்தால் கீழே விழுந்தார். "இதோ என் உயிரை மடித்துச் சாகிறேன்" என்று எழுந்து தம் கழுத்தில் கத்தியைப் பூட்டி விரைவாக அறுத்துக்கொள்ள முற்பட்டார். அப்போது மழுவேந்தியத் திருக்கரமும் பிறையோடு கங்கை சூடி சர்ப்பகணங்களுடன் அழகிய ஜடாபாரமும் நெற்றிக்கண்ணும் புன்னகையும் நீல கண்டமும் கொண்டுத் திருக்கோலத்தோடு சிவபெருமான் காட்சியளித்து" மட்டில்லாத அன்புடையவனே! நில்! நில்! கண்டத்தை அறுத்துக் கொள்ளாதே! நாம் உன் பக்தியைக் கண்டு மகிழ்ந்தோம். உனக்குத் தேவையான வரம் என்ன? நல்ல வரத்தைக் கேட்டுக் கொள். நாம் அனுக்கிரஹஞ் செய்வோம்!" என்றார். அவரை நிமித்தண்டி நாயனார் சாஷ்டாங்கமாகப்பணிந்து, நாத்தடுமாற,"சிவபெருமானே அடியேனுக்கு யாதொரு வரமும் தேவையில்லை. உம்முடைய அழகியத் திருமேனியானது வாதரோகத்தினால் மடங்கியிருந்த பிடை முழுதும் இப்போதே நீங்கி, நீர் சுகப்படுவீராயின் அதுவே எனக்குப் போதும்!" என்றார்.

அவரைப் பரமசிவனார் கடைக்கண் நோக்கி, "நமக்கு உண்டாகிய இந்த வளைவு வாதரோகமல்ல. நாம் இந்த உலகத்தைப் பஞ்சகிருத்யத்தினால் ஒழுங்காக நிலைக்கச் செய்வதற்காக ஆடுகின்ற நடனமாம். பூவுலகமும் பாதாளலோகமும் ஸ்வர்க்கலோகமும் வலமிடமாகச் சூழ்ந்துவர, நாம் ஆடு

கின்ற இந்த நடனத்தின் பெயர்*பவுரியாட்டமாகும். விஷ்ணு, பிரம்மா முதலான தேவர்களும் சித்தர்களும் ஹர ஹர வென்று கோஷிக்கப் பாதச்சிலம்பின் ஒலியானது பதினன்கு உலகங் களும் செவிப் புலனற்றுப் போகவும், எம் தேவி கைத்தாள மிட்டு முழக்கஞ் செய்யவும், எம் மூச்சினுற் பூமியும் அஷ்டகுல பர்வதங்களும் ஆதிசேடனது தலைகளும் உருளவும், எம் ஜடா பாரத்திலுள்ள சந்திரன் கொதித்ததனுல், குளுமையான அமுத தாரை சரிந்து, சிரமாலையின்மேல் விழுதலால், பிராணன் அடைந்த தேவர்கள் துதிக்கவும் நாம் நடனம் செய்வோம்.

---

* பஞ்சகிருத்தியம் —ஸ்ருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம், த்ரோ பவம், அநுக்கிரஹம், என்னும் ஐந்தொழிலாகும். ஆனமாக் களுக்கு தநு, கரண, புவந, போகங்களைச் சக்தியாகிய மூல காரணத்திலிருந்து தோற்றுவிப்பதும் அவற்றை நிலைபெறச் செய்வதும், அவற்றை மூலதாரத்தில் ஒடுக்குவதும், ஆண்மாக் களை இருவினைப் பயனுகிய போக்யப் பொருள்களில் அமிழ்த்து வதும், ஆத்மாக்களுக்குப் பாசத்தை நீக்கி சிவைக்கியத்தை விளைப்பதுமாகியத் தொழில், பஞ்சகிருத்தியமாம்.

பூமலி கற்பகப் புத்தேன் வைப்பு
நாமநீர் வரைப்பினுனில வளாகமும்
ஏனைய புவனமும் எண்ணிங் குயிருந்
தானே வகுத்துன் றமருகக் கரமே
தனித்தனி வகுத்த சராசரப் பகுதி
யனைத்தையுங் காப்பதுன் னமைத்தகைத் தலமே
தோற்றுபு நின்றவத் தொல்லுல கடங்கலும்
மாற்றுவ தாரழ லமைத்ததோர் கரமே
ஈட்டிய வினைப் பய னெவற்றையு மறைத்துநின்
றூட்டுவ தாகுநின் றூன்றிய பதமே
யடுத்தவின் னுயிர்கட் கனவில் பேரின்பங்
கொடுப்பது முதல்வநின் குஞ்சித பதமே
இத்தொழில் ஐந்துநின் மெய்த்தொழிலாக.

—குமரகுருபர ஸ்வாமிகள்.

* பவுரி—கூத்து விகற்பம்.

தேவர்களுக்கு வரமளிப்போம். இவ்விதமான பஞ்சகிருத்திய மாகிய நமது நடனத்தை பக்தகோடிகள் உணர்ந்து ஆர வாரஞ் செய்வார்கள். நமது நடனம் இத்தகையது. இது வாதமல்ல !'' என்று கூறினுர். பிறகு நமித்தண்டி நாயனுரை ஒரு விமானத்திலமர்த்தி, மகா கைலாசத்திற்கு வந்து சேரும் படிச் சிவபெருமான் கூறி அவரை அழைத்துச் சென்ருர்.

## 22. சகளேச மாதிராசையர் கதை

திருவம்பை என்றத் திருத்தலத்தில் சகளேச மாதிராசையர் என்ற அரசர் ஒருவர் இருந்தார். அவர் ஒரு சிறந்த சிவ பக்தர். அன்பு செய்யத்தக்கச் சிவசரண்களில் புகழத்தக்க உண்மைச் சிவசரணராக விளங்கி வந்தார். அவர் சிவபெரு மானை நேசியாதவரைப் பிணம் என்று நினைத்து நெருங்கமாட் டார். வீர சைவ ஆசாரத்தில் சிறந்தவர். இனிமையாக இசைப் பாடுவதிலும் வீணை வாசிப்பதிலும் பரதநாட்டியத்திலும் வல்லவர். அழிவற்ற வேதாந்தத்தை அறிந்தவர். இல்ல றத்தில் விருப்பமற்றிருந்தும் விருப்பமுள்ளவர் போலக் காணப் படுபவர். *இயம, நியம அஷ்டாங்க யோகங்களில்

---

* அஷ்டாங்க யோகம்-இயமம், நியமம், ஆதனம், பிராணு யாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பன. இவற்றில் இயமமாகிய ஐந்தும் பூர்வயோகம், தாரணை, தியா னம், சமாதி—உத்தரயோகம். இயமம்—கொல்லாமை முதலிய பத்துப்பகுதிகளைக் கொண்டது. நியமம்-தவம் முதலிய பத்துப்பகுதியை உடையது. ஆசனம்—எண்பத்து நான்கு பகுதியையுடையது. பிராணுயாமம்-ரேசக, பூரக, கும்பகங் களினுல் சரீர ஜனித வாயு நிரோதனஞ் செய்தல், பிரத்தியா காரம்-விஷயங்களிற் செல்லாதவாறு இந்திரியங்களை அடச்கி, உள் நோக்கி இருத்தல். தாரணை- அந்தக்கரணம் இடை விடாது ஒருவகைப்பட்டிருத்தல். தியானம்-கடவுளைச் சிந்தனை செய்தல். சமாதி-சுபாசுப வாசனைகள் ஒழிந்து அடங்கி இருத்தல்.

வல்லவர். ஜீவகாருண்யத்தில் சிறந்தவர். வேதாங்கங்களில் சொல்லப்பட்டக் கணக்கற்ற சிறந்த உபசரணைகளை மகிழ்ச்சியுடன் செய்பவர். அவர் ஜங்கம மூர்த்திகளையன்புடன் துதித்து, நறுமணங்கமழும் மலர்களாலும் திருமஞ்சனத்தாலும் தமது திருமாளிகையில் பூஜித்துத் தியானித்து, சிவபெருமானைத் துதித்து, ஸ்ருதி பிடித்த வீணையில் மூப்பத்திரண்டு ராகங்களில் காலத்திற்கு ஏற்ற ராகங்களைத்தம் சிவபெருமானாகிய சகளேஸ்வரருக்கு மனப்பூர்வமாகப் பாடி, மனமகிழ்வார். கௌரி வீணை, இராவண வீணை, கைலாச வீணை, கின்னர வீணை, பினுது வீணை, சாரங்கவீணை, கச்சவ வீணை முதலிய பலவித வீணைகளை தினந்தோறும் வாசித்து மகிழ்விப்பார்.

இவரது இசைத்திறனையும் பக்தியையும் கண்டு ஜங்கம மூர்த்திகள் ஆச்சரியப்படுவார்கள். சகளேச மாதிராசருக்குத் தம்மைப் போன்றதொரு அரசரான மல்லிராசையர் என்பவர் இல்லறத்தில் பற்றற்று, உலகத்தினை ஆள்வதில் சுகமில்லை என்று அறிந்து, வாழ்வைத் துறந்து சிவபெருமானுகிய மல்லிகார்ச்சுனேஸ்வரர் கோயில் கொண்டிருக்கும் இடத்தில் தவம்புரிவதைக் கேள்விப்பட்டார். உடனே ஸ்ரீ சைலத்திற்குச் செல்லவேண்டும் என்று எண்ணமிட்டார்.

அங்கு மனோசலன மற்றவராகி, சிவானந்தத்தில் விருப்பங்கொண்டு, தூய்மையான வில்வ வனத்தில் மனத்திடத்தோடு தவஞ் செய்யும் மல்லிகாசையரின் நோக்கத்தையும் பக்தியின் பெருமையையும் சிவயோக சமாதியின் சிறப்பையும் சிவானுபவச் செல்வத்தை அடைந்திருப்பதையும் ஜங்கமமூர்த்திகள் கூறினர். மாதிராசையர் அவர்கள் கூறுவதைக் கேட்டுக் கேட்டு, உலக வாழ்க்கையில் பற்றற்ற அந்தச் சிவயோகியாரைத் தரிசிக்க விரும்பினுர். ஸ்ரீசைலத்தை மாதிராசையர் தியானித்துக் கைகூப்பி வணங்கித் துதித்து, ''ஸ்ரீகேதார க்ஷேத்திரத்திலுள்ள நிகரற்றத் தீர்த்தத்தை உண்பதாயினும் ஸ்ரீ காசி க்ஷேத்திரத்தையடைந்து மரிப்பாராயினும் மோக்ஷம் சித்திக்கும். இத்தகையப் பெருந்தவஞ் செய்வதைக் கடினம் என்று நினைத்து ஸ்ரீ சைல க்ஷேத்திரத்தின் சிகரத்தைத் தூரத்திலிருந்தே தரிசனஞ் செய்பவருக்கு அவ்விடத்திலேயே மோக்ஷம் உண்டாகும் என்று சொல்வது உண்மையேயாகும். அதைத் தரிசனஞ் செய்பவர்கள் அடையும் புண்ணியத்திற்குக் கணக்கேயில்லை. ஆகையால் அதை யோசித்து அந்தச் க்ஷேத்திரத்தில் வசிப்பவர்கள் சிவபெருமானேயாவார்கள். மிகச் சிறந்த புண்யத் தீர்த்தங்களுக்கும் தேவர்களுக்கும் தவமுனிவருக்கும் இருப்பிடமாகி யோகப்பயிற்சியில் வல்ல சித்தர்கள் வணங்குகிற திருத்தலமாகும். மக்களுக்கு விருப்பத்துடன் அந்தக் கனத்திலேயே பேரின்பத்தை அனுக்கிரகிக்க வல்ல

ஸ்ரீசைலத்தின் மகிமையைச் சொல்லாலும் எழுத்தாலும் சொல்ல முடியாது. விந்தியமலே, அகஸ்திய முனிவரால் பூமியில் சாய்ந்து அமிழ்ந்து விட்டது. மந்தரமலே விஷ்ணுமூர்த்தியின் கையினுல் மத்தாகிவிட்டது. மகாமேரு பர்வதமோ சிவ பெருமானதுத் திருக்கரத்தில் வில்லாகிவிட்டது. மைநாக மலேயோ, தன்னேப் பின்தொடர்ந்த இந்திரனுக்குப் பயந்து கடலில் மறைந்துவிட்டது. மாலிய பர்வதமோ, அடிக்கடிப் பிரவாகித்து விசாலித்து வருகிற கங்கை நதியின் அருப்பினுல் ஒடுங்கியது. சூரியனுடையத் தோற்றத்தால் தோன்றுமே யல்லாது உதயகிரி பர்வதம் இருண்டுவிடும். அஸ்தகிரி பர்வதமோ உலகத்தை வலம் வருவதனுல் களேத்துத் தன் வயிற்றில் புகுந்த சூரியன் கிரணங்களே ஒழித்தமையால், அழகானத் தாமரை மலர்கள் அழிந்தன. மானசோத்தர பர்வதமானது ஒரு காலத்தில் சிவபெருமானேச் சுமந்ததால் இளேத்து விட்டது. ரோஹணத்ரி பர்வதமோ மாறியிருக்கும் தன் கற்களின் தோஷத்தை ஒழித்துக்கொள்ள மாட்டாது! இவ்விதமாகப் பர்வதங்கள் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு தோஷம் இருக்கிறது. ஆகவே எம்பெருமானுன மல்லிகார்ச்சுனேஸ்வரர் விற்றிருக்கும் ஸ்ரீசைலத்தை நிகர்த்த பர்வதமேயில்லே!'' என்று நினேத்து துதித்தார். பிறகு எழுந்து “ நிகரற்றப் பர்வ

ஸ்ரீசைலம் கோயில்



தங்களுக்கெல்லாம் அரசாகிய ஸ்ரீசைலத்தை அடியேன் அடைவேன் !'' என்று தீர்மானித்துப் புறப்பட்டார். ஸ்ரீசைலத்தையடைந்ததும் அவர் அங்குள்ளப் புண்ணியநதிகளிலும், ஸ்தலங்களிலும், மங்கலகிரி துர்க்கங்களிலும் வன துர்க்கங்களிலும் ஜல துர்க்கங்களிலும் பெரிய குகைகளிலும், பாதாளங்களிலும் ஸ்படிகப் பர்வதங்களிலும் ஸ்வர்ணப் பர்வதங்களிலும் வஜ்ர பர்வதங்களிலும் நறுமணங்கமழ்கிற பர்வதங்களிலும் வேடச்சேரிகளிலும் ஸ்பரிச வேதிகளிலும் ஆலயங்களிலும் பூங்காவனங்களிலும் சந்திரகாந்த பர்வதங்களிலும் நவரத்தின பர்வதங்களிலும் மல்லிராசையரைத் தேடினார். மிருகங்களும் பறவைகளும் வசிக்கிற இடங்களிலும், மலைகளும் சரிவுகளிலும், ருத்திராக்ஷ பர்வதங்களிலும், ருத்திராக்ஷ வருஷங்களிலும், ருத்திராக்ஷக் கற்களிலும் விபூதி பர்வதங்களிலும் விரும்பியவற்றைத் தங்களுக்குள்ளே இன்சொற்களாகப் பேசிக்கொள்கிற பர்வதங்களிலும், கொடிகளிலும் புதர்களிலும் பெரிய காடுகளிலும் இசைபாடும் மலைகளிலும் பறவைகள், மிருகங்கள் நிறைந்தக் காடுகளிலும்கூட மல்லிராசையரை மாதிராசையர் தேடினார்.

பர்வதத்தைப் போல வன்மீகம் போர்த்திக்கொண்டு தோன்றுமல் இருக்கும் முனிவர்களையும், மரங்களோடு மரமாகத் தவஞ்செய்யும் முனிவர்களையும் ரோமங்கள் வளர்ந்து உடல் முழுவதும் மறைந்திருக்கும் முனிவர்களையும் பஞ்சாக்கினி மத்தியில் சலனமின்றித் தவஞ் செய்வோரையும், ஓடுகின்ற நதியில் கழுத்துவரையில் மூழ்கித் தவஞ்செய்வோரையும் கண்டார். மரங்களைப் பிச்சைக் கேட்டு, அவை வணங்கிக் கொடுக்கும் பழங்களைப் புசித்தும், மலைகள் தொழுது கொடுக்கும் கொம்புத்தேனை யுண்டும் பெருந்தவஞ் செய்யும் முனிவர்களையும் மாதிராசையர் கண்டார். மிகச் சிறந்த சிவபூஜையில் விருப்பமுடைய சித்தர்களையும், தேவர்கள் மாதர்களுடன் நீர் விளையாடுவதையும், ஜலபுருஷர்கள் ஜலமங்கையருடன் நீர் விளையாடும் பாதாளங்களையும், நாக கன்னியரையும் கண்டார். ஆனால், எங்கு தேடியும் மல்லிராசையரை மட்டும் அவர் காண முடியாமல் ஒரு வில்வ வனத்தின் அருகே வந்து, "இந்த மல்லிராசையர் எழுந்தருளியிருக்கும் ஆசிரமம் யாது ?'' என்று யோசித்தார். அந்த வனம் முழுவதும் மல்லிராசையரைத் தேடினார். அப்போது மாதிராசையரைச் சோதிக்க விரும்பி மல்லிராசையர் தெய்வீகத் தன்மை வாய்ந்த ஒப்பற்ற விஸ்வரூபம் ஒன்றை எடுத்து மாதிராசையரின் எதிரில் ஸ்ரீசைலம் முதல் ஆகாயம் வரையிலும் உயர்ந்து, விபூதி மலையோ, ஜ்யோதி ஸ்வரூபமோ என மயங்கும்படித் தோற்றமளித்தார். அதன் திருமுடியைத் தேடுவோம் என்று மாதிராசையர் நினைத்து மூன்றுண்டுகள் அலைந்து திரிந்தார். முன்னதாகத்

திருவடிகளைத் தேடாமல் பக்தி தவறிவிட்டேன் என்ற சிந்தனை யுடன் சோர்ந்து, மேலும் பத்தாண்டுகள் தேடியலைந்தார். முடிவில் "உன் அழகான விஸ்வருபத்தைக் கண்டேன். அது எத்தன்மையுடையது என்று அடியேன் யூகித்து, மந்த புத்தியோடு நானுகவே அதைத் தெரிந்து கொள்ள முயன்றேன். இது எளிய செயலல்லவே! உமது திருவருளினுல் உமது திருவடிகளைக் காண்பியும்!" என்று மாதிராசையர் அன்போடு துதித்து, ஒரு மாதகாலம் பூமியில் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கி, எழுந்திராமல் இடைவிடாமல் துதித்து வந்தார்.



இந்த நிலையில் யோகீஸ்வரரான மல்லிராசையர் பையப் புன்னகை செய்து மிகுந்த கிருபா கடாட்சத்தால், தம் விஸ்வ ரூபத்தை நீக்கித் தம் சிறந்த திருமேனியை அடைந்து, மாதிராசையர் முன்பு தோன்றி, "ஐயனே! நீ துன்பத்தினின்றும் நீங்கும் பொருட்டு அந்த விஸ்வருபத்தை எடுத்தோம். நீ இப்போது எழுந்திருப்பாயாக!" என்று இரு திருக்கைகளாலும் அன்புடன் மாதிராசையரைத் தூக்கி, மகிழ்ச்சியால் தழுவிக்கொண்டு, "எம்மை இந்த ஸ்ரீசைலத்தில் காண்பதற்காக நீ மிகவும் மனேதிடத்தோடு தவம் செய்தாய்! இனி எம்முடன் வருவாய்!" என்று அவரைத் தம் பர்ணசாலைக்கு அழைத்துச் சென்றுர். அங்கு அவர் தம் இஷ்டலிங்கப் பூஜைக் காலத்திலே பிரசாதம் கொடுத்து, சிவதத்வாநுபவ சுகரஸத்தில் திளைக்கச் செய்து, சந்நிதியில் சில நாழிகை இருத்தி, மாதிராசையரை நோக்கி, "நீ இன்னமும் பூமியில் சிலகாலம் தங்கிச் சொல்லுதற்கரியத் தவத்தை செய்தாலொழிய நமதுபாக்கியம் உனக்குச்

சித்திக்கமாட்டாது. நல்லதனமாகப் போய்விடு!'' என்றுர். அவரை மல்லிராசையரை வணங்கி, "தலைவ! பெருந் தரித்திரராகப் பிறந்தவர்கள், பெருஞ் செல்வத்தைக் காண்பாநாயின் அதை ஆசையுடன் எடுத்துக் கொள்வார்களேயன்றி அதை விட்டுவிட மாட்டார்கள். அடியேன் உமது திருவடிகளை இப்போது தரிசித்துவிட்டேன். இனி நான் போகமாட்டேன்!'' என்று விண்ணப்பித்தார்.

மல்லிராசையர், புன்னகை செய்து, எப்படியாவது அவரை அனுப்பிவிட வேண்டும் என்று முடிவு செய்து தழைகளால் நிறைந்துள்ள ஒரு கருவேல மரநிழலில் அவரை அழைத்துக் கொண்டு போனுர். அவரை அங்கேயே இருக்கச் சொல்லிக் கட்டளையிட்டு, தாம் ஒளிந்து கொண்டு, ஒரு இடையனைப் போல் கோலங்கொண்டார்.

முரடாகவும், கடினமாகவும் உள்ள தோல் வார்களினுல் அமைக்கப்பட்ட மிதியடிகள், உடுத்தியிருக்கும் கம்பளியின் மேலே கட்டியிருக்கிற பெரிய கச்சையுடைய இடுப்பு. ஒரு கையில் ஆடுகளைப் பயமுறுத்தற்குரிய உறுதியான தடி.



மற்றொரு கையில் ஒரு வெறுங்குடம், கோணல் முகம், ஊத்தைப்பல், பயமுறுத்தும் கண்கள், கனத்த காதுகள். முரட்டுத் தாடி, பெருத்த மூக்கு. இத்தகையக் கோலத்தோடு, கையில் பிடித்திருக்கிற தடியைப் பின்னே நிற்கச் செய்து, அதன்மீது சாய்ந்த வண்ணம், ஒரு காலை மட்க்கி, ஒரு காலில் நின்று கொண்டும் வலது கையை நெற்றியின்மீது கவிழ்த்து, ஆடுகளைப் பார்க்கிற கண்களும் அவற்றை அதட்டுகின்ற வாயும் கொடிய கோடரியும், கூர்மையுள்ள அரிவாளும் கொண்ட இடையையும் உடையவராய், நாய்களைக் கூவிக் கூப்பிட்டுக் கொண்டும், செடிகளிலும், புதர்களிலும் புகுந்து மேய்ந்து கொண்டிருந்த ஆடுகளையெல்லாம் சேர்த்துக் கொண்டும் மாதிராசையர் இருக்கும் கருவேல மரத்தின் கிளைகளையொடித்து ஆடுகளுக்குப் போட்டு, அவற்றைத் தின்னச் செய்துகொண்டிருந்தார்.

அதைக்கண்ட மாதிராசையருக்குக் கோபம் மூண்டது. "நிழலைக் கொடுக்கக் கூடிய இவ்வளவு பெரிய மரத்தையே வெட்டிவிடுவாய் போலிருக்கிறதே! இவ்வளவு பெரிய காட்டில் இந்தக் கருவேல மரமில்லாமல் வேறொரு மரமும் உனக்குக் கிடைக்காமல் போயிற்றோ? நீ துஷ்டனோ, கள்ளனோ, மூடனோ, துர்மார்க்கனோ, வெறியனோ! இடையனே! நீ ஒரு பாபிஷ்டன். நான் உன்னைச் சபித்து விடுவேன்!'' என்றார். அவரது கோபத்தைக் கண்டதும் இடையர் வேடத்திலிருந்த மல்லிராசையர் புன்னகை செய்த வண்ணம், "நீதான் கோபிஷ்டன்! கோபிஷ்டனே! பாபிஷ்டனல்லாமல் நாக்கினால் கடுஞ்சொற்களை நான் சொல்லமாட்டேன். கோபமே கொல்லும் யமனாகும்; கோபமே துக்கத்திற்குக் காரணம். கோபமே செல்வத்தை ஓடச் செய்யும்! கோபமே பெருமையைக் கெடுத்துவிடும். கோபமே பழிச் சொற்களுக்குக் காரணமாகும். கோபமே கடுஞ்சொற்களைச் சேர்த்துவிடும். கோபமே நரகத்தில் ஆழ்த்திவிடும். கோபமே தீமையாகும். கோபம் என்ற தீயினால் புண்ணியங்கள் அழிந்து போகாதோ? கோபத்தால் ஞானம் அழியாதோ? இது உன்னுடைய அறிவுக்குப் பெருமையோ? அல்லது நுட்பமான கல்வி கற்றோம் என்ற மமதையோ? நீ நல்லவன், நல்லவன்தான். எனக்கு இந்தக் கருவேல மரத்தைத் தவிர வேறு மரமில்லையோ என்று கேட்ட உனக்கு இந்தக் காட்டில் இந்தக் கருவேலமர நிழலைத் தவிர, வேறு நிழல் தரும் மரங்கள் இல்லையோ? நீ நல்லவன்தான். இந்த ஸ்ரீசைலத்தில் தவஞ் செய்கின்ற முனிவர்களுள் உன்னைப் போன்ற உபசாந்த நிலையை அடைந்திருக்கிற நல்ல ஜங்கம மூர்த்திகளே இல்லை. விரைவில் ஸர்வ ஸங்கப் பரித்தியாசம் செய்த உனக்கும் இந்த நிழல் ஆசை அளவு கடந்ததென்று சொன்னால் ஞானம் என்பது எளிதான விஷயமல்ல

என்று தெரிகிறது. விருப்பத்துடன் நெருப்பில் குதிக்கிற ஒரு பெண், தான் அணிந்துள்ள சேலை பெரு நெருப்பில் எரிந்து போய்விடுமே என்று நினைப்பாளாயின் அது ஞானமாகுமா? பயமில்லாமல் கிணற்றில் குதித்து இறந்துபோக நினைத்த ஒரு பெண், கிணற்றில் குதித்தும் அங்கு விருப்பமுடன் ஒரு தெப்பத்தைத் தேடுகிறுள் என்றால் அதீ ஞானமாகுமா? அது போலவே உன் ஆசை, உன் ஞானத்தை விட மேம்பட்டு விட்டது! உன்னுடைய ஆசையைச் சொல்லுமிடத்து, ''எனக்குப் பைத்தியமில்லை'' என்று சொல்லி, ''என்னுடைய தலையில் தலைப்பாகையைச் சுற்றிக்கொள்ள உலக்கையைக் கொண்டு வா'' என்று கேட்கும் பித்தனுடையச் செயலைப் போலவும், சந்நியாசம் வாங்கிக்கொள்ளும் பிராமணன் ஒருவன் தன்னுடைய செல்வத்தை ஒருவன் வசம் காப்பாற்றி வைக்கும்படியாகக் கொடுத்து போகிற பைத்தியக்குணத்தைப் போலவும், அதிவேகமாய் ஓடுகின்ற நதியில் அடித்துகொண்டு வரப்பட்டக் கரடியைப் பார்த்து கம்பளியென்று நினைத்து விரைவாகச் சென்று நீந்தி, அதைப் பற்றிக்கொண்ட முட்டாளை, அந்தக் கரடியானது பிடித்துக் கொல்லும்போது, கரையிலிருந்தவர்கள் 'அதை விட்டுவிடு' என்று கூக்குரலிடுதலும் ''நான் அதை விட்டாலும், அது என்னை விடாதே, நான் என்ன செய்வேன்'' என்று சொல்லி அந்த மூடன் இறந்த கதையைப் போலவும் இருக்கிறது. ''சர்வ சங்கப் பரித்தியாசம் செய்த முனிவனையும் ஆசை விடாது!'' என்று உபதேசித்து பழைய ரூபத்திற்கு மாறினுர்.

அவரை மாதிராசையர் வணங்கித் துதித்து ''ஐயனே! அடியேனிடத்தில் மோக்ஷமார்க்கமும் கிடையாது. சன்மார்க்கத்தில் மனமும் கிடையாது. அகங்காரமே உள்ளது. சகளேஸ்வரனே, நான் அஞ்சுகிறேன். அடியேனது பழவினை அடியேனை விட்டு ஒழியுமோ, ஒழியாதோ? வினை இருக்கும் வரை அந்த வினைக்குரியப் புண்ய பாவங்களைச் செய்து தான் அந்தச் சீவன் அலையுமேயன்றி எக்காலத்திலும் அதற்குச் சிவானுக்கிரகமும் பலிக்காது. சிவபக்தியும் உண்டாகமாட்டாது. பச்சைக்காயை அறுத்தால் அது கனியாக இருக்காது. ஆகையால் மேன்மையுடைய ஜங்கம மூர்த்தியே! சரணூர்த்தி! சிவபக்தர்களின் செல்வமே சரணூர்த்தி! உன் திருவடிகளே சரணம்!'' என்ருர்.

அவரை மல்லிராசையர் தழுவிக்கொண்டு, ''ஐயனே! அஞ்சவேண்டாம். துக்கத்தில் மூழ்காதே! மனத்தில் சிறிதேனும் அகங்காரம் கொண்டவர்கள் நமக்கு முன்னே நிற்கவும் கூடாது. நீ நமது வார்த்தையைக் கேட்காமல் இருந்ததற்காகவே இந்த மாய வித்தையைச் செய்தோம். நிலைபெற்ற சிவபெருமானது கிருபையினுல் அவதரித்த பசவண்ணன்

என்பவர், பக்தி என்ற பெரும் பாக்கியத்தை நிலைநாட்ட விரும்பி, நமது துன்பத்தையும் உலகத்தின் துன்பத்தையும் நீக்கவே உதயமாகியிருக்கிறான். அவனால், உனக்கு, மோக்ஷ ஞானத்திற்குரிய பக்தியுண்டாகும். நீ அவனிடம் செல்! அவன் வீரசைவ ஆசாரமாகியக் கடலிற்றிளைத்தவன். நீ எனது சிவபெருமானது கிருபையால் அறுநூற்றைம்பது ஆண்டுகள் பூமியில் அந்த வசவண்ணனிடத்தில் வாழ்ந்து வா! நாம் அழைத்ததும் நம்மிடம் வந்து ஐம்பது ஆண்டுகள் கழிந்து, உனக்கு ஆகக்கூடிய எழுநூறு ஆண்டுகளின் முடிவிலேயல்லாமல் மோக்ஷத்தில் விருப்பம் உண்டாகமாட்டாது. இவ்விடத்தில் அனுக்கிரகஞ் செய்ய வேண்டுவது எதுவாயினும் கேட்டுக்கொள்!'' என்று மல்லிராசையர் கட்டளையிட்டார்.

அதைக் கேட்டதும் மாதிராசையர் அழுது, யோகீஸ்வரரான மல்லிராசையரை சாஷ்டாங்கமாக வணங்கி, ''நான் செல்வத்தை விரும்புவேனாயின் நான் அயலாரின் மனைவியைப் போலாவேன். தீர்க்காயுளை விரும்புவேனாயின் சித்சக்தியாலுண்டாகிய மாயா சரீரமாகும். ஸ்வர்க்காதி இன்பங்கள் அழியும் தன்மையனவாதலினால் அவையும் விரும்பத் தக்கதல்ல. மேலான மோக்ஷத்தை விரும்புவேனாயின் அது சிவபெருமானது பொருளாகும். ஆகையால் நான் சிறிதும் ஆசையில்லாதவனாகவே இருக்கிறேன். ஐயனே, ஞானியாருடைய அன்புள்ள மனத்தில் குடிகொண்டிருப்பவனே! '' நன்றி!'' என்று வணங்கிவிட்டுக் கல்யாணபுரியிலுள்ள வசவண்ணரின் சந்நிதிக்கு விரைவாகச் சென்றார். அவரை வசவண்ணரும் கூடலசங்கமேஸ்வர் என்றே கொண்டாடி, வணங்கித் துதித்து, சகளேஸ்வர மாதிராசையரின் சீடரான வசவண்ணர் என்று உலகத்தார் மெச்சும்படிப் பணிந்தார். ஞானியான மாதிராசையரும் பக்தராகிய வசவண்ணரும் தோழர்களாயினர். இவர்கள் இருவரும் திருமடத்தில் இஷ்ட லிங்கப் பூஜை செய்து சிவானந்த அமிர்தத்தையுண்டு நிகரில்லாமல் வாழ்ந்து வருகின்றக் காலத்தில் சிக்கமாதையர் என்ற ஒரு சிவபக்தர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவருடைய கதையை இனிச் சொல்வோம்.

## 23. சிக்கமாதையர் கதை

சகளேச மாதிராசையர்—வலிமையுள்ள யமனின் நெருப்புக் கண்களில் மண்ணைக் கொட்டியும், அவனுடைய வாயை அடக்கியும், பிரம்மதேவன் ஏற்படுத்திய விதிவசத்தை வேரோடு அழித்தும், மாயாபாசத்தை ஒழித்த நல்ல விவேகமுடையவராய் விளங்கி, முக்காலமும் சிவலிங்க பூஜை செய்துகொண்டும், குன்ரு விரதத்தோடு இஷ்டலிங்க மூர்த்தியிட்மும் ஜம்கமமூர்த்திகளிடமும் நிகரற்ற பக்தி செலுத்திக்கொண்டும் மிகவும் அன்பு பூண்டு பேரின்பமாகிய அமுதத்தை அருந்தி, மெய்ஞானியாகவும் சிவசரணராகவும் கல்யாண புரியில் வாழ்ந்து வந்தார். அந்தக் காலத்தில் சிக்கமாதையர் என்ற சிவபக்தர் ஒருவரும் வாழ்ந்து வந்தார். அவர் ஒரு கிரகஸ்தர். சிக்கமாதையர் தம் மனையாளும் புத்திரரும் தாமுமாக சகளேச மாதிராசையரிடம் பக்தி செலுத்தி வந்தார். தம் தொழிலால் கிடைத்த வருமானத்திலேயே திருப்தியடைந்தார். சுகம் துக்கம் என்னும் இரண்டையுமே சமமாகப் பாவித்தார். அவர் தம் வேலை நடைபெற்ருலும் நடைபெருவிட்டாலும் மாதிராசையரின் பணிவிடையிலேயே அன்பும் கருத்தும் கொண்டிருப்பார். இந்நிலையில் அவர் மரப்பொந்து போன்ற தம் உடலை வாயுதாரணையினுல் சடுதியில் நழுவவிட்டுப் பிரிந்தார்.

சிக்கமாதையரின் மனைவியாரும், தன் கணவரைப் போலவே, தானும் ஜங்கமமூர்த்தி வழிபாடு செய்வதில் விருப்பமும் பக்தியும் உடையவளாக விளங்கினுள். பூதவுடல் அநித்தியமானது என்கிற தத்துவத்தை அவள் உணர்ந்திருந்ததால் தன் உயிர் போன்ற கணவர் உயிர் துறந்த பிறகுங்கூட ஜீவகரணம் போய் சிவகரணம் சித்திப்பது உண்மை என்று நம்பி வந்தாள். எனவே, அவள் மனம் துவளவில்லை. அவள் தன் நாயகரான சிக்கமாதையரின் உடலைச் சிறந்த ஜங்கமப் பாதோதகத்தினுல் குளிப்பாட்டி, மிக்க வெண்மையும் தூய்மையுமான விபூதியை சர்வாங்கமும் சம்பூரணமாகப் பூசி,



சலனமுள்ள மனமின்றி, சிறந்ததொரு மெத்தையின்மீது சாயச்செய்து உட்காரவைத்தாள். இந்த விசேடத்தை அயலார் அறியாதவாறு தன் வீட்டில் இஷ்டலிங்க பூஜையை அன்புடன் செய்யும் இடத்தில் தன் கணவரின் உடலை அடக்கஞ் செய்வதற்குரிய சமாதிக்குழியைத் தோண்டினுள்.

அதைத் தோண்டும் சப்தத்தைக் கேட்டு, தூங்கிக்கொண்டிருந்த அவளது பிள்ளை, திடுக்கென்று விழித்துக்கொண்டான். அவன் தன் தாயைப் பார்த்து, "அம்மா! இந்தக் காரியத்தைச் செய்வதற்குக் காரணம் என்ன? அப்பா பஞ்சுமெத்தையில் சாய்ந்துகொண்டு, ஒரு பேச்சும் பேசாமல் கோபமாக இருக்கிற காரணம் என்ன? அப்பா ஏன் வழக்கம்போல் ஜங்கமமூர்த்திகளிடம் போகவில்லை? சிவபூஜை செய்யும் இடத்தில் நீ ஏன் இவ்வளவு பெரிய குழியைத் தோண்டுகிருய்? சிவ பூஜைக்கு வேண்டிய தண்ணீருக்காகக் கிணறு தோண்டுகிருயா? உன்னேடு அப்பா கோபித்துக் கொண்டாலும்

கொஞ்ச நேரத்தில் சாந்தமாகிவிடுவாரே ? அப்பா ஏன் என்னுடனும் பேசாமல் இருக்கிருர் ? இதற்குக் காரணம் என்ன ? குறித்தகாலத்தில் சிவபூஜை செய்வதற்குரிய பூஜைப் பொருட்களை நீயும் ஏன் தயாராக எடுத்து வைக்கவில்லை ? பூஜா பாத்திரங்களைத் துலக்கவில்லையா ? நீ சுத்தமான ஆடையினுல் ஜலத்தை வடிகட்டவில்லையோ ? மிகவும் பரிசுத்தமான சந்தனத்தை வரளச் செய்துவிட்டாயோ ? ஒன்றுக்கும் உதவாமல் அக்ஷதைகள் முறிந்திருந்தனவோ ? திரளான மலர்களில் புழு வெட்டுப்பட்டனவோ ? தாயே ! பிரகாசிக்கிற தீபத்தைத் தூண்டாமல் அணைத்துவிட்டாயோ ? தந்தையின் இந்தக் கோபத்திற்குக் காரணம் என்ன ? தாயே ! நீ இஷ்டலிங்க மூர்த்திக்குத் திருவமுது படைக்கும்போது உன் மூக்குச் சுவாசம் பட்டுவிட்டதோ ? *மூவகைப்பட்ட பாதோதகங்கள் ஒன்ருேடு ஒன்று கலந்துவிட்டனவோ? நீ அப்பாவிற்கு எதிரே ஒன்றும் பேசாமல் இருப்பதற்குக் காரணம் என்ன? அவர் ஏன் உன்னுடன் கூடப் பேசவில்லை ?

அம்மா ! நான் அப்பாவைக் கைகூப்பி வணங்கி ' உங்கள் கோபத்தைத் தணித்துக் கொள்ளுங்கள் ' என்று அவரது பாதங்களில் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினுலாவது அவரது பொல்லாத கோபம் தணிந்து அவர் நம்மோடு அன்பாகப் பேசுவாரா ? நான் அப்பாவைக் கையைப்பிடித்து அழுது அழைக்கட்டுமா? சொல் அம்மா சொல் !'' என்று கேட்டான்.

உடனே தாய் தன் மைந்தனின் கையைப்பிடித்து இழுத்து, " நீ சிவசரணர்களின் திருமடங்களில் எல்லாம் சென்று, அவர்கள் செய்கிற சிவலிங்க பூஜை என்ற சொல்லை மட்டுமே மனத்தில் பதித்துக் கற்றுக்கொண்டாயே தவிர அதன் ரகசியப் பொருள்களை அறியவில்லை. இந்தக் கிணற்றைத் தோண்டினுல்தான் உன் தகப்பனுர் கோபம் தணிந்து உன்னுடன் பேசுவார். அதனுல் நீ விழித்திருக்காதே ! போய்த் தூங்கு !'' என்று மனமுருகும்படி சொல்லிவிட்டு, முன்பு தொடங்கிய சமாதிக்குழியை வெட்டலானுள் !

அப்போது அவளது பிள்ளை, அவளறியாமல் வெளிவாசற்கதவைத் திறந்துகொண்டு, வழக்கப்படித் தன் தந்தை செல்லும் வழியிலே சென்று, ஜங்கமமூர்த்தியாகிய மாதிராசையரின் சந்நிதிக்குச் சென்று, அவரை அன்போடு வணங்கி, " ஐய ! ஐய ! கேளுங்கள் ! என் தகப்பனுர் ஏனே பேசவில்லை ! முன்பு என் தாயிடத்தில் கோபமில்லாதவர், இப்போது கோபத்

---

*மூவகைப் பாதோதகம். குரு பாதோதகம், லிங்க பாதோதகம், ஜங்கம பாதோதகம்.

தோடு பேசாமல், விபூதியை நெற்றியிலும் உடம்பிலும் பூசிக் கொண்டும் நேற்று நீங்கள் கொடுத்த நீண்ட வெள்ளை யாடையை மேலே போர்த்திக்கொண்டும் மெத்தையின் மீது சாய்ந்து கொண்டும் அசையாமல் இருக்கிறார். கோபமடைந்து, என்னைப் பார்க்காமலும் பேசாமலும் இருக்கிறார். என் தாய் சிவபூஜாகிரஹத்தை மண்வெட்டியைக் கொண்டு தோண்டி, ஏனோ மண்ணை எடுத்துக்கொண்டிருக் கிறாள். வேறு யாராலும் அப்பாவின் கோபம் தணியாது. நான் உங்களை அழைத்துச் செல்லவே இங்கு ஓட்டமாய் ஓடி வந்தேன். நேற்றுவரை என் தந்தை என்னைக் கால்களின் மேலும் தோள்களின் மேலும் கைகளிலும் இருத்திக்கொண்டு, இனிய வார்த்தை சொல்லி, முதுகின்மீது சுமந்தும், என்னை இரண்டு கண்களில் ஒற்றிக்கொண்டும் கீழே இறக்கிவிட்டு, நான் எங்குபோனாலும் என் பின்னேயே வந்து, "பால லிங்கனே! வா, இஷ்டலிங்கமே! வா, என் அப்பனே!" என் றெல்லாம் சொல்லி மார்பில் சேர்த்துத்தழுவிக் கொண்டும் இரு கண்களைப் போலப் பார்த்து, என்னுடைய குடுமியை வாரி, உடம்பிற் படிந்த தூசியைத் துடைத்தும், நெற்றியிலே விபூதி யைத் தாரணம் செய்து, "மகனே! மனமிசைந்து ஸ்ரீபஞ்சா க்ஷர மஹாமந்திரத்தைச் சொல்!" என்று சொல்வார். நான் சொல்லும் மழலைச் சொற்களைக் கேட்டு மகிழ்ந்து, "இவன் வசவண்ணருக்கு அகம்படியாரனோ! சவுண்டையனின் தொண்டனோ! சகளேச மாதிராயருக்கு மாணவனோ, உலகம் புகழும் மடிவாலை மாக்கையனுக்குத் தவசிப்பிள்ளையோ? சங்கர தாசையரின் சேவகனோ, எங்கள் சேரமான் பெருமாள் நாயனு ருக்கு ஊழியனோ! அநபாய சோழனின் தொண்டனோ, நிம் மவ்வையாரின் மகனோ, காரைக்காலம்மையாரின் மகனோ! நீ யார்!" என்று செல்லமாக என்னைக் கேட்பார். எனக்கென்ன வேண்டும் என்று கேட்டு, என் பசியை விருப்பத்துடன் தெரிந்துகொண்டு, என் தாயை அழைத்து "பிள்ளை பசியினால் வருத்தமடைந்திருக்கிறான். அன்புடன் பாலலிங்கனுக்குச் சோற்றை இடு" என்று சொல்வார். என் தாய் தாமதித்தா லும் தானே சோற்றை எடுத்து அன்போடு எனக்கு ஊட்டு வார். பிறகு உம்மிடம் வரும்போது என்னை அவரோடு அழைத்து வருவார். அவரது குருநாதரின் பெயரை உடை யவன் நான். அதனால் என்னை அவர் ஏசுவதும் இல்லை. அப் படிப்பட்ட என் தந்தை இப்போது என்னிடம் ஏனோ கோப மாக இருக்கிறார். நான் என்ன சொல்லி அழைத்தாலும் பேச வில்லை. அவர் ஏன் இப்படி இருக்கவேண்டும்? இனி நான் சிவ பூஜை செய்யும்போது அவர் மேலே விழுந்து விளையாடமாட் டேன். சிவபூஜைக்கு முன்பே சோறுபோடு என்று தொல்லை தரமாட்டேன். சிவபெருமானுக்கு நிவேதனம் செய்தவற்றைத் தவிர வேறெதையும் உண்ணமாட்டேன். குற்றமுள்ள தெருக்

கடைகளில் உள்ள சிற்றுண்டிகளுக்கு ஆசைப்படமாட்டேன். என்மீது குற்றமில்லை. அப்பாவின் கோபம் இனி உம்மால் தான் தணியவேண்டும். உமது திருவடிகளைத் தரிசிப்பாரா ைல் தன் கோபந்தணிவார். உமது பேச்சையன்றி, வேறொரு வர் சொல்லைக் கேட்கமாட்டார். ஆகையால் நீங்கள் எமது மடத்துக்குத் தயவு செய்து வரவேண்டும்!'' என்று மன்றாடி, பூமியின்மீது சாஷ்டாங்கமாக வீழ்ந்து அவரை வணங்கி அழு தான். அவரது மென்மையான கல்லாடையைக் கைகளால் பற்றியிழுத்து, அவரது தூய்மையான திருவடிகளை இறுகப் பிடித்துக்கொண்டு, ''என் தகப்பனாரின் கோபம் நீங்கள் வராமல் தணியாது. நீங்கள் சீக்கிரமாக என்னுடன்கூட வாருங்கள்!'' என்று அவரது கையைப் பிடித்து இழுத்து அழுதான்.

பாலலிங்கனை கையைவிட்டு விடும்படி மாதிராசையர் சொல்லி, ''பாலலிங்கனே என்னுடன் வா!'' என்று அவனை யும் அழைத்துக்கொண்டு புறப்பட்டார். மாதிராசையர், தம்மை அதிகமாய் அடிமைகொண்டருளிய சகனேஸ்வரரது திருவடிகளைத் தியானித்து, ''நீலகண்டனே! உன் பக்தர்கள் மனத்தில் எண்ணியதை, நீ முற்றிலும் உணர்ந்து அருள் செய் யும் தலைவன். ஆகையால் சிவபெருமானே! நம்பும் உன் அடியாரின் வாக்கும், உன் திருவாக்கைப் போலவே சித்திக் கும்படி இப்போது அருள் செய்வாயாக!'' என்று வேண்டித் தியானித்தார். பிறகு சிக்கமாதையரின் திருமடம் நோக்கிச் சென்றார்.

அங்கே அவரது மனைவியைக் கண்டு, ''பெண்மணியே! நீ சிவபூஜாக்கிரகத்தில் என்ன செய்கிறாய்? சிக்கமாதையர் உன்னுடன் கோபங்கொள்ளக் காரணம் என்ன? சொல்!'' என்றார்.

உடனே அவள், மாதிராசையரை வணங்கி நின்றாள். சிக்கமாதையரின் திருமேனியை மாதிராசையர் பார்த்துவிட்டு ''சிக்க மாதையனே! என் திருமடத்திற்கு வந்து முறையிட்ட வாறு மகனின் அலைச்சலைத் தீர்க்காமலும் நீ பேசாமலும் இருக் கக் காரணம் என்ன? சிவபூஜைக்குரிய காலமாயிற்று வா! மனம் ஒற்றுமைப்பட்ட அன்பு ஒன்றே முக்தி விசேஷமாம். விரைந்து வா!'' என்று தம் கருணைக் கண்ணோட்டத்தால் இனிய திருவாக்கினை மலர்ந்தருளினார். உடனே மாதையரின் உயிர் திரும்பிவந்து, அவரது உடலில் பிரவேசித்தது. அவர் தூக்கத்திலிருந்து விழித்தவரைப் போல் எழுந்து போது புலன் களுக்குரிய இயக்கத்தையடைந்து, எதிரே நின்ற மாதிராசை

யரைத் தரிசித்து, அன்புடன் சாஷ்டாங்கமாக வணங்கினர். அவருடைய திருவடிகளை நெற்றியிலும் கண்களிலும் ஒற்றிக் கொண்டார். மெய்சிலிர்க்க நின்று, கைகளைக் குவித்து வணங்கி "அடியேனை அடிமை கொள்ளும் பொருட்டுத் தோன்றிய சிவபெருமானே! சரணார்த்தி, சரணார்த்தி பாபா ஹிதனே, சரணார்த்தி! சிவபக்தரின் செல்வமே, சரணார்த்தி!'' என் உயிரே சரணார்த்தி!'' என்று துதித்தார்.

அவரும் அவரது மனைவியும் மகனும் சகனேச மாதிராசை யரை வணங்கினர்கள். அப்போது அங்கு சூழ்ந்திருந்த ஜங்கம மூர்த்திகள் மாதிராசையரை நோக்கி, "ஐயனே! தந்தையின் பக்தியினலே மகனுடைய உயிரை சிவபெருமான் வரும்படிச் செய்தருளினர். இந்த மகனுடைய பக்தியினலே, தந்தையின் உயிரை வரும்படிச் செய்தருளிய மகத்தான காரியம் உம்மாலேயே நிறைவேறியது. உம்மைத் தொலைவி லிருந்தே தரிசனஞ் செய்பவருக்கு* தவந்த ஸம்பந்தமாகிய பந்த பாசங்களில்லை. செவிடர்களின் செவிப்புலன்களில் தங்களது திருவாக்குப் படுமாயின், அவர்கள் எல்லா விஷயங் களையும் தெளிவாகக் கேட்பார்கள். உம் திவ்விய திருஷ்டியி னல் ஊமையரும் பேசுவார்கள். பிறவிக் குருடர்களும், கண் பார்வை பெறுவார்கள். ரோகிகளும் சுகஜீவிகளாவார்கள். உனது கிருபா கடாட்சத்தால் கிழவர்களும் வாலிபராவார்கள். இறந்தவரும் உயிர் பெற்று எழுந்திருப்பார்கள். நஞ்சும் அமுத மாகும். இது உண்மை. கதறியழுத பிள்ளை, பெறுதற்கரிய தந்தையான செல்வத்தை கொடுத்தருளிய உமது பரோப காரப் பெருமையை சிவபெருமானே அறிய வல்லவர்!'' என்று போற்றினர்கள். சிவபக்தராகிய சிக்கமாதையருக்கு உயிரூட்டி வாழச் செய்த மாதிராசையர் தம் திருமடத்திற்குத் திரும்பிச் சென்ருர்.

---

*தந்தையின் பக்தியால் மகனின் உயிரை வரச்செய்தது என்பது —சிறுத்தொண்ட நாயனரைக் குறிக்கும். அக்கதையே அறு பத்துமூவர் கதைகள் எனப்படும். திருத்தொண்டர் புராணத் தில் காண்க. த்வந்தம் - இரட்டை. அதாவது சுகதுக்கம், உஷ்ண சீதம், பாப புண்ணியம் போன்றவை.

# 24. மடிவால மாச்சையர் கதை

இப்பரிகபுரி என்னும் ஊரில் ஈரங் கொல்லியர் (வண்ணார்) குலத்தில் மடிவால மாச்சையர் என்பவர் வாழ்ந்து வந்தார். அவர் சிவபக்தர்களுக்குப் பக்தி செய்பவர். மிகுந்த பராக்கிரம முள்ளவர். உண்மையான வீரசைவாசாரச் சம்பன்னர். புத்ர களத்திர, க்ருஹ க்ராம க்ஷேத்திர தனதான்யாதிகள் மேலும் மேலும் உண்டாகவேண்டும் என்ற அறுவகை ஆசை விகாரங்கள் சிறிதேனுமில்லாதவர்.

அவர் சிவனடியார்கள் தம்மிடம் வந்து, ஆடைகளைச் சந்தோஷமாகக் கொடுப்பாயாக என்று கேட்பார்களாயின், அவ்வாடைகளை அவர்களுக்கு கொடுத்து, ஆடைகளுக்குச் சொந்தக்காரர்கள் கேட்கும்போது, அவ்வாடைகளையே கொடுக்கவல்ல பெரிய வரத்தையுடையவராக விளங்கினர். அவர், வசவண்ணரின் புகழைக் கேள்விப்பட்டு, "நாம் வசவண்ணரிடம் சென்று, மனோசலனமற்ற ஜங்கம மூர்த்திகளின் ஆடைகளை வெளுத்து ஜீவிப்போம்!" என்று எண்ணி கல்யாணபுரியை அடைந்தார். அவரைக் கண்டதும் சாஷ்டாங்கமாக வணங்கி "சரணார்த்தி" என்றார். வசவண்ணரும் "சரண சரணார்த்தி!" என்றார். பிறகு மடிவால மாச்சையரின் சிறப்பினைத் தமது திருமடத்தில் கூடியிருந்த ஜங்கம மூர்த்திகளுக்குச் சொல்லிவிட்டு, தமது திருமடத்தில் அவர் இருக்க இடம் தந்தார். அன்று முதல் ஜங்கம மூர்த்திகளுடைய ஆடைகளை வெளுக்கிற பணிவிடைகளைச் செய்து கொண்டு, மடிவாலமாச்சையர் வாழ்ந்து வந்தார்.

அப்படியிருக்கும் காலத்தில், 'வணக்கம் உள்ள இடத்திலும் வணக்கமில்லாத வார்த்தையானது பக்தி மார்க்கத்துக்கு உரியதல்ல' என்று சில ஜங்கம மூர்த்திகள் கூறினார்கள். வசவண்ணர் அதையறிந்து யோசித்து, இஷ்டலிங்க மூர்த்தியை அன்புடன் பூஜித்துத் துதித்து "அடியேனை ஒரு பொருளையும் இரந்து கேட்கின்ற பக்தர்கள் கிடைக்காமற்

போனதால், அடியேனுடைய உடம்பு மிகவும் மகிழ்ச்சி குன்றியதனுல் மெலிந்துவிட்டது!'' என்று பொருள்படும்படி தமது இஷ்டலிங்கத்தின் மீது பாசுரம் ஒன்றைப் பாடியருளி ஞர். அதைக் கற்றுக்கொண்ட சில சிவனடியார்கள், மடிவால மாச்சையர் இருக்குமிடம் சென்று, அந்தப் பாசுரத்தை பக்தி யோடு பாடிஞர்கள். அதைக் கேட்டதும் மடிவால மாச்சையர் கோபத்துடன் தம்மிரு காதுகளையும் பொத்திக்கொண்டு, “ஹர ஹரா! இந்த அகங்கார வார்த்தைகளைக் கேட்பவர்கள் யார்? வசவண்ணர், ஜங்கம மூர்த்திகளை யாசகரைப் போல நினைத்துவிட்டாரே! இவ் வார்த்தைகளை நிலைபெற்ற ஜங்கம மூர்த்திகளுடைய வாயினுலும் சொல்லுந்தரமோ? சிவபெரு மானை அன்பு செய்கிற ஜங்கம மூர்த்திகளும் ஏழைகளோ? பாபிஷ்டனே! இவ்வாறு சொல்வதற்குக் காரணம் என்ன? இந்த அஹங்கார வார்த்தையானது மோக்ஷ மார்க்கத்திற்கு உபாயமுமல்ல. பழுத்த மூதறிவுமல்ல. பக்தி மார்க்கமுமல்ல. சிவனடியார்கள் சொல்கின்ற தோத்திரமுமல்ல. விவேகத்தை யுடைய வசவண்ணருக்கு இந்தத் துற்புத்தி உண்டாவதற்குக் காரணம் என்ன? நீங்கள் என் முன்பு நிற்காதீர்கள். இங் கிருந்து போய்விடுங்கள்'' என்று சொல்லிவிட்டு, துணிகளை வெளுக்கச் சென்றுவிட்டார்.

மடிவால மாச்சையரின் எதிரே பாடிய ஜங்கம மூர்த்திகள், நடந்தவற்றை வசவண்ணருடைய சந்நிதியில் சொன்னதும், ஆராத துயரமடைந்த நெஞ்சமுடையவராய், “நாம் தெரியா மற் சொன்ன இந்தக்கொடிய பாவம் எப்படி நீங்கும்?'' என்று யோசித்தார்.

உடனே அவர் மடிவால மாச்சையரது திருவடித்தாமரை களில் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கி, “சரணுகிய நான் ஒரு குற்றவாளி. என்னை அடிமை கொண்டு அனுக்கிரகம் செய்வாய். கொடியவனுகிய அடியேன் கர்வி, அற்பன், மஹா கோபிஷ்டன், உன்மத்தன். ஞான நூல்களைக் கற்றறியாத துன்மார்க்கன். மூடன், பற்றுள்ளவன், குருத்துரோகி, நீயே அடியேனுடைய அகங்காரத்தை அழித்துவிடு! நான் லக்ஷத் தெண்பதினுயிரம் பாசுரங்களைப் பாடினது, முழுவதும் உலகத் தில் நாய் மலையைப் பார்த்து குலைத்ததைப் போன்றதாகும். என்னுடைய தாஸோஹ மார்க்கத்தின் இழிவினை நீ அங்கீகரிக் காத காலம் முழுவதும் அடியேனது அன்பு சிவபெருமானுக்கு விருப்பமானதல்ல. ஐயனே! போதகாசிரியனே! அடியே னைப் பயப்படாதே என்று தேற்றி பக்தி மார்க்கத்தைக் காண் பிக்காமற் போவாயானுல் சாவென்று சொல்லக் கடவாய்!'' என்று வசவண்ணர் வேண்டினுர். அவர் சொன்னவற்றை யெல்லாம் மடிவால மாச்சையர் கேளாதவரைப் போல,

"உமது மனம் மூடர்களின் மனத்தைப் போல ஆனதற்குக் காரணம் என்ன? சிவபக்தர்கள் தரித்திரர்களா? நாமென்ன சீமான்களா? சகலமும் தெரிந்துகொண்டு பாசுரங்களை இயற்று ததற்குக் காரணம் என்ன? ஸத்குருவில்லையோ? நல்லது.



நாம் கூடிப் பழகுவதற்குரிய விவேகசாலியோ? சிவபக்தர்கள் யாசகர்களோ? பிக்ஷையேற்றற்கு உரிய ஜங்கம மூர்த்தி களுக்குக் கொடுப்பவர்களின் மனத்தில் தோன்றும் அகம் பாவத்தை என்னவென்று சொல்வது? நாம் கொடுக்கிற யானைகளும், குதிரைகளும், பெண்களும், சிறந்த ஆடைகளும், திரவியங்களும் சீலம் மிகுந்த சிவனடியார்கள் மதிக்கத்தக்க பொருள்களேயல்ல!" என்று தாம் வெளுக்கும்பொருட்டு வைத்திருந்த ஆடைகளை எடுத்து சிவனடியாரின் பாதம் படிந்த தண்ணீரில் நினைத்து அலசி எடுத்து விதிர்த்தார்.

உடனே அவர் விதிர்த்த திசைகளில் எல்லாம் சிதறிய நீர்த்திவலைகள் யாவுமே நவரத்தின ராசிகளாகத் தெறித்தன. குவியல் குவியலாகக் கொடுக்கக் கூடியனவாகவும் மின்னற் கொடி போலவும் பளிச்சிடும் நவரத்தினக் குவியல்களைக்

கண்டதும் வசவண்ணரின் மனம் குழைந்தது. அவர் அகங்காரம் அகன்றது.

இந்தச் செய்தி விஜ்ஜலராஜனுக்கு எட்டியது. அவன் கல்யாணபுரி மக்கள் சூழத் திருமடத்திற்கு வந்தான். அங்கு குவிந்து கிடந்த நவரத்தினங்களைக் கண்டு அதிசயித்தான். பயந்தான். தூரத்தில் நின்று, "சிவகணங்களில் கிருபா கடாட்சமுள்ள மடிவால மாச்சையரைப் போன்று இந்தவுலகத்தில் சிவாநுக்கிரகத்தை அடைந்தவர்கள் எவரும் இல்லை!" என்று புகழ்ந்து அவரது அழகிய திருவடிகளைச் சாஷ்டாங்கமாக விழுந்து கும்பிட்டான். வசவண்ணரும் அவரது திருவடிகளைத் தொழுது, "நீ மலமில்லாதவன். நான் கெட்ட மலமுடையவன். நீ தர்ம குணமுடையவன்; நான் தர்ம குணமில்லாதவன். நீ பாசபந்தமில்லாதவன், நான் பாசபந்தமுள்ளவன். நீ பொறுமையுள்ளவன்; நான் பொறுமையில்லாதவன். நீ போதகன்; நான் மாணவன். நீ மேம்பட்டவன்; நானே கீழ்ப்பட்டவன். நீ கொடையாளன்; நான் யாசகன்; நீ பக்திக்குப் பிராணனைப் போன்றவன்; நான் பக்திக்கு யமன் போன்றவன். அற்பர்களிடத்தில் பாசபந்தத்துக்கு உரிய துர்க்குணங்கள் உண்டாயின் ஜங்கம மூர்த்திகள் அவற்றைப் பொருட்படுத்துவார்களோ? அடியேனிடத்தில் வணக்கமுள்ள சொல்லும் பக்தியும் கொஞ்சமேனும் இல்லை. துன்மார்க்கனாகிய அடியேனது அகங்காரத்தை ஒழித்து அருள் புரிவாயாக! மோக்ஷ பாக்கியத்தையும் அருள் செய்வாயாக! தெளிதற்குரிய நல்ல சன்மார்க்கமாகிய தூய்மையான ஒழுக்கத்தை அனுக்கிரஹஞ் செய்து, அடியேனை அடிமை கொள்வாயாக! உபசாந்த நிலையை அடைவதற்குரிய பூரண ஞானம் இந்தத் தன்மையானதென்று அருள் செய்யும் மேன்மையுடைய பக்தியாகிய கற்பக விருட்சம் நீ ஆவாய்! அடியேனிடத்து அனேக பிழைகள் இருக்கின்றன. அவற்றையெல்லாம் போக்கி ஆட்கொள்வாய்" என்று வசவண்ணர் இறைஞ்சினர். அதைக் கண்ட மடிவாலமாச்சையர் புன்னகையோடு. அவரைத் தழுவி பேதம் பாராட்டாமல் மகிழ்ந்து ஆனந்தப்படுவதை, மற்றைய ஜங்கமமூர்த்திகள் அனைவரும் கண்டனர், மகிழ்ந்தனர்.

அவர்கள் ஒருவருக்கொருவர் பேசியதாவது: "யோசித்துப் பார்த்தால், சிவபெருமானிடம் போற்றுதற்கரிய கோபமும் அனுக்கிரஹமும் எடுபடாமல் இருக்கின்றன. நல்ல தானியங்களை, உலகத்தார் உமியைப் போக்கியே உண்பார்கள். ஞான சாஸ்திரங்களைக் கற்றுணர்ந்த ஜங்கமமூர்த்திகளும் தம்முடைய சரணர்களைத் தப்பு வழியிற் செல்லவிடாமல், உபதேசஞ் செய்தல்லவோ அடிமை கொண்டு அருள் செய்வார்கள். "வெளுப்பது என்பது ஆடைகள் மீது எழுந்த கோபம் அல்லவே!

அவற்றின் மீது படிந்துள்ள மாசைப் போக்குவதற்காகவே அல்லவோ அழுக்கு ஒழியும் பொருட்டல்லவோ, கிடைத்தற்கரிய பொன்னைப் புடமிடுகின்றனர்! ரிஷபவாஹன ஆரூடரான சிவபெருமானுக்கு அன்புள்ள வசவண்ணர் விரும்பிச் செய்கிற பக்தியானது நிறைவேறும் பொருட்டே மடிவால மாச்சையர் வற்புறுத்திச் சொல்வது சரியான கணக்குத்தான்!'' என்றார்கள்.

இவ்விதமாக ஜங்கம மூர்த்திகளும் சிவசரணர்களும் துதித்து நிற்கும்போது, கூப்பிய கரத்துடன் நின்றுகொண்டிருந்த வசவண்ணரை, மடிவால மாச்சையர் நோக்கி, "உள்ளத்தில் கர்வங் கொண்டிருப்போருக்குப் பக்தி அற்பமேயாகும்!'' என்று சொல்லியருளினர். பிறகு முற்காலத்திலிருந்த சிவசரணர்களுடைய வரலாறுகளைச் சொல்லத் துவங்கினர்.



# 25. சங்கரதாசையர் கதை

ஜங்கமபுரம் என்ற ஸ்தலத்தில் சங்கரதாசையர் என்று ஒரு சிவபக்தர் வாழ்ந்து வந்தார். அவர் நரை, திரை, மூப்பு, சாக்காடு என்பவை வந்தடையாமைக்கு ஏதுவாகிய தைரிய முள்ளவர். பெண் போகத்தை விரும்பாதவர். பரசமய வாதி களின் தர்க்கங்களைக் கண்டிப்பவர். கால கர்மங்களின் தொடர்பில்லாதவர். வீரபத்திரரைப் போன்ற பராக்கிரம முள்ளவர். அவர் ஜங்கம மூர்த்திகளுடைய கந்தைத் துணி களைத் தைத்துக்கொடுத்து, அந்தத் தையல் தொழில் மூலமாக நாள்தோறும் பெற்று வந்த ஐந்துபடி நெல்லைத் தம்மிடம் வருகிற சிவபக்தர்களனைவருக்கும் அமுது படைக்க வல்ல வரத்தைப் பெற்றவர்.



இந்நிலையில் அந்த ஜங்கமபுரத்தில் வாழ்ந்த சேடதாசை யர் என்பவர், பன்னிரண்டு ஆண்டுகளாக ஒரு பட்டு வஸ்தி ரத்தை நெசவு செய்தார். அவ்வளவு நேர்த்தியான பட்டா

டையை அந்த நாட்டு அரசனிடம் விற்பதற்கு எடுத்துச் சென்றார். அவர் செல்லும் வழியில் ஒரு சிவபக்தர், அவர் முன்பு தோன்றி அந்தப் பட்டு வஸ்திரத்தைத் தமக்குக்கொடுக் கும்படி வேண்டினார். சேடதாசையர், அந்தப் பட்டாடையை அவருக்கே கொடுத்துவிட்டார். உடனே, சேடதாசையர் வீடு முழுதும் பொன்னும் நெற்களஞ்சியங்களும் சிவபெருமா னின் திருவருளால் நிரம்பின.

சேடதாசையர், ஒரு சமயம், சங்கரதாசரைச் சந்திப்பதற் குச் சென்றிருந்தார். அவரது மடத்திற்குச் சென்று சங்கர தாசையரின் திருவடிகளில் சாஷ்டாங்கமாக வணங்கி, அன் போடு உரையாடிக் கொண்டிருந்தார். அப்போது அந்தச் சங்கரதாசையரின் திருமடத்தில் தானியங்கள் சிறிதும் இல் லாமையைக் குறிப்பால் உணர்ந்து கொண்டார். அப்போதே தமது மாளிகைக்குச் சென்று, தம் மனைவியிடம் சொல்லி, ஒரு கூடை நெல்லை ஒரு வேலைக்காரனிடம் கொடுத்து, சங்கர தாசையரிடம் சேர்க்கும்படிக் கொடுத்தனுப்பினார். வேலைக் காரன் அந்தக்கூடை நெல்லை சங்கரதாசரிடம் கொடுத்து, தன் எஜமானர் அதைக் கொடுத்து அனுப்பியதாகச் சொன்னான்.

அதைக் கண்டதும் சங்கரதாசையர். "நம்மீது அன்புள்ள சேடதாசையர், நமது வறுமையைக் கண்டு, இந்த நெல்லைக் கொடுத்தனுப்பினார். நல்லது நல்லதே! ஒரு பட்டு வஸ்தி ரத்தை ஜங்கமமூர்த்திக்குக் கொடுத்து, அதன் மூலம் வற்றாத நெற்களஞ்சியங்களையெல்லாம் அன்றையத்தினமே சேட தாசையர் அடைந்தார். இப்போது இந்த நெல்லை நாம் ஏற் றுக்கொள்வோமாயின், வறுமையுடைய நாம் அவர்க்குச் சிறிதும் கொடுக்கமாட்டோம். இருப்பினும் அவர் இந்த நெல்லை அன்புடன் கொடுத்து அனுப்பியதால் அவர் நல்லவர் நல்லவரே!" என்று நினைத்து, அந்தக் கூடை நெல் முழுமை யும் தமது ஒரு கைப்பிடிக்குள் அடங்குமாறு பிடித்தார். உடனே சேடதாசையரின் நெற்களஞ்சியங்கள் யாவும் காலி யாயின. தேடத் தேட ஒரு மணி நெல்லும் கூட இல்லாமல், சேடதாசையரை வறுமை பீடித்தது.

அதைக் கண்டதும் சேடதாசையரின் மனைவி, சேடதாசை யரை நோக்கி "நாதா! பெரியோருடைய தன்மையை முழு மையாக உணர்ந்து செய்யாத பக்தி முழுதும் குற்றமாகும். நம்முடைய மனத்திலுண்டாகிய அகங்காரத்தினால், சிவபெரு மானையொத்த சங்கரதாசையருக்கு இன்றையத்தினம் ஒரு கூடை நெல்லை வேலைக்காரன் வசம் கொடுத்தனுப்பினோம். ஜங்கமமூர்த்திகளுடைய பசியைத் தணிக்கவல்ல சிவனடியா ருக்கு வறுமையென்பதே இருப்பதில்லை!" என்றாள்.

சேடதாசையர் தம் மனைவி கூறியதைக் கேட்டு யோசனையில் ஆழ்ந்தார்.

அப்போது சிவபெருமான், சங்கரதாசையர் முன்பு காட்சி கொடுத்தருளி, "உனக்கு வேண்டிய வரம் என்ன?" என்று கேட்டார். அதற்கு அவர், "அடியேனுக்கு எதிரே எழுந்தருளி காட்சி கொடுத்ததே ஒரு பெரிய வரமாகும். நான் வேறு ஒரு வரத்தையுமே விரும்பவில்லை!" என்றார்.

சிவபெருமான், "நாம் அனுக்கிரஹம் செய்கின்ற வரத்தைத் தேவையில்லை என்று சொல்வது தர்மம் அல்ல. ஆகவே, யாதாயினும் ஒரு வரத்தை விரும்பிக் கேட்டுக்கொள்!" என்றார்.

சங்கரதாசையர் மகிழ்ந்து, "அப்படியானால், ஐயனே! அடியேனுக்கு இரண்டு கண்களும் பகலில் விளங்குவதுபோல இரவிலும் விளங்கிப் பிரகாசிக்கும் வண்ணம் ஊசியில் நூலைக் கோர்க்கும்படியான வெளிச்சத்தைக் கொடுப்பீராக!" என்று கேட்டார். சிவபெருமான், தம்முடைய நெற்றிக்கண்ணைப் போன்ற ஒரு நெற்றிக்கண்ணை அனுக்கிரகம் செய்தருளினார்.

அதன் பிறகு, சங்கரதாசையர் சிவபெருமானுடைய புகழைப் பரவச்செய்து வந்தார். துஷ்ட தெய்வங்களின் அகங்காரத்தை அழிப்பவரானார். பரசமயவாதிகள் என்ற யானைகளைக் கொல்லும் சிங்கம்போலானார்.

அவர் தமது நெற்றிக்கண்ணால் உற்றுப் பார்த்தால், எலும்புகள் முறிந்து உருகி, எரிந்துவிடும். இதையறிந்த துஷ்ட தெய்வங்கள், சங்கரதாசையரின் சந்நிதானத்தையடைந்து "உம்முடைய தொண்டர்களாகிய எங்களுக்குத் தகுதியான வேலையை நியமித்தருளவேண்டும்" என்று விண்ணப்பித்தன. சங்கரதாசையர் கருணைகொண்டு, ஒவ்வொரு தெய்வத்துக்கும் ஒவ்வொரு வேலையைக் கட்டளையிட்டார். அவையும் தத்தமது வேலையைச் சிறப்பாகச் செய்து வந்தன.

இப்படிப்பட்ட சூழ் நிலையில், கல்யாணபுரியில் ஒரு விஷ்ணு பக்தரான ஜகதேவமல்லன் என்பவன் வாழ்ந்து வந்தார். அவர் சங்கரதாசையரின் ஆற்றலையறிந்து, "சிங்கம் யானைகளை கொல்வதைப்போலப். பெரிய தெய்வங்களைக் கொல்வதே பராக்கிரமமேயல்லாமல், குற்றம் என்பது சிறிதும் தெரிந்துகொள்ளாத சிறிய தெய்வங்களை, சிவபெருமானிடம் பெற்ற நெருப்பாகிய நெற்றிக்கண்ணால் கொல்வதனால் உண்டாகும் பயன்தான் என்ன? எமது மூலகாரணனாகிய விஷ்ணு மூர்த்தியை எரித்து வெற்றியடைந்தால் அல்லவோ அது

வெற்றியாகும்? இந்தச் சங்கரதாசையன் இத்தகைய செயலைச் செய்யமாட்டாதவன் பயமில்லாமல் விஷ்ணுவை, எனது நெற்றிக்கண்ணால் எரித்துவிட முடியுமா?'' என்று சொல்லி, ஒரு பெரிய விஷ்ணு கோயிலைக்கட்டி, உருக்கினால் ஸ்ரீ விஷ்ணுவின் விக்கிரகத்தைச் செய்வித்து, அதன்மீது ஐந்து உலோகங்களை சேர்த்துக் கவசஞ் செய்து நிற்கவைத்து, அந்த விக்கிரகத்திற்கு உரியதாகிய ஆடையாபரணங்களை அன்புடன் அணிவித்து, மந்திர புஷ்ப அர்ச்சனை செய்து துதித்து, இரவும் பகலும் வாத்தியங்கள் முழங்கும்படிச் செய்வித்தார்.

அந்த முழக்கத்தைக் கேட்ட சங்கரதாசையர், சினங்கொண்டார். வெற்றியின் மேலே மனங்கொண்டு, சிவனடியார்களுடன் அந்தக் கோயிலுக்குள்ளே சென்று, அழிக்கும் வல்லமையுடைய நெற்றிக் கண்ணினால் உற்றுப் பார்த்தார். உடனே அந்த உருக்காலான விஷ்ணு விக்கிரகம் இளகி, அதன் மீதிருந்த பஞ்சலோகம் முழுவதும் பிரவாகத்தைப் போலக் கரைந்தது. சிவசரணர்கள் சங்கரதாசையரைப் பாராட்டிப் புகழ்ந்தனர்.



சங்கரதாசையரின் வெற்றிச் செய்தி சேடதாசையருக்கும் எட்டியது. அவர் தம் மனையாளுடன் சென்று, சங்கரதாசையரின் திருவடிகளில் விழுந்து வணங்கி. ''எம்பெருமானே! நாங்கள் உமது தொண்டர்கள். ஐயனே! அடியேன் செய்த குற்றங்களை மன்னித்து, எங்களைக் காப்பாற்றுங்கள்'' என்றார்கள்.

சங்கரதாசையர் புன்னகை செய்து "அன்றையத்தினம். ஒரு பட்டு வஸ்திரத்தை ஒரு ஜங்கமருக்குக் கொடுத்து, நீர் அடைந்த நெற்களஞ்சியங்கள் எல்லாம் ஒழிந்துவிட்டதோ, பரவாயில்லை, நீர் இந்தப் பூமியை மண்வெட்டி கொண்டு வெட்டுங்கள்" என்று கட்டளையிட்டார். அவர் கட்டளை யிட்டவண்ணம் பூமியைத் தோண்டத் தோண்ட பெருஞ் செல்வம் வளர்ந்து வருகின்ற மகிமையைச் சேடதாசையரும் சிவனடியார்களும் பொது மக்களும் கண்டார்கள். உடனே. சேடதாசையர், சங்கரதாசையரின் திருவடிகளில் சாஷ்டாங்க மாக வணங்கினர். அப்போது சங்கரதாசையர். "கேளுங்கள்! தரித்தரரின் பாதங்களில் விழுந்து வணங்கினல் உமக்குச் செல்வம் கிடைத்து விடுமோ? பறிமாறி உண்பதற்கும், விருப் பத்துடன் உடுப்பதற்கும் கொள்வதற்கும் கொடுப்பதற்கும் எப்போதும் பெருஞ் செல்வத்தை அடைந்திருக்கின்றவர்களை தொழுது சுகமாய் வாழுங்கள். நமக்கு உள்ளது சிவபெரு மானின் அருட் செல்வம் ஒன்றேயாம். உமக்கோ இவ்விடத் தில் தோண்டி எடுத்த செல்வத்தைக் கொடுத்தோம். இதை நீங்கள் மாடுகள்மீது சுமத்திக்கொண்டு செல்லுங்கள். மேலும் இந்த மண்ணையும் எடுத்துச் செல்ல விரும்பினல் இதையும் எடுத்துச் செல்லுங்கள்" என்று கட்டளையிட்டார். சேட தாசையர் சங்கரதாசையரை நோக்கி, "ஐயனே! இவ்வாறு அடியேன் பயப்படும்படியாகத் திருவாய் மலர்ந்தருளாமல் அடியேனது குற்றங்களை மன்னித்து அனுக்கிரகம் செய்யுங்கள்" என்று சொல்லி வணங்கினர். அப்போது சங்கரதாசையர், அவரைத் தழுவிக்கொண்டு "அழியாச் செல்வத்தை நாம் சிவானுக்கிரகத்தால் கொடுத்தோம்" என்ருர். இவ்விதமாக அகங்காரத்தாலுண்டாகிற காமமும், குற்றமுள்ள குரோதமும் இறப்பவர்களுக்கு இல்லையென்று சொல்லும் லோபமும் மோஹ மும் பொல்லாத மதமும் கொண்ட மனத்தினருக்கு அன்பு இராது. வசவண்ணரே! நமது சிவபெருமானைப் புண்ணிய வசத்தால் அடைந்தும், அஹங்காரங் கொண்ட தபோதரைப் யற்றிச் சொல்கிறேன் கேளுங்கள்.

# 26. நிம்மவைக் கதை

புதலே என்ற ஸ்தலத்தில் நிம்மவை என்ற சிவபக்தை வாழ்ந்து வந்தாள். அவள் நல்ல ஒழுக்கமும் ஆசாரமும் பழிச் சொல்லுக்கு இடமில்லாத மெய்யான பக்தியுடன்கூடிய வீர சைவாசாரத்தையுடையவள். சிவபக்தர்களின் திருமடங்களில் தண்ணீர் எடுத்துக் கொண்டுபோய் கொடுக்கும் வேலையைச் செய்து வந்தாள். அவளது மகன் திருமடத்துப் பசுக்களை மேய்க்கும் தொழிலில் கிடைத்து வந்த பணத்தைக் கொண்டு சிவபுண்யக் கர்மத்திற்கு சிவபக்தர்களுக்குத் திருவமுது படைத்தும் செலவிட்டு வாழ்ந்து வந்தான்.

இந்நிலையில் திருச்செங்காட்டங்குடியில் வேதியராகிய சிறுத்தொண்ட நாயனர் என்பவர் தாம் பெற்ற பிள்ளையையே கறியமுதாகச் சமையல் செய்து அர்ப்பணம் செய்ததால், மனம் மகிழ்ந்த சிவபெருமான், அவரது திருக்குமரனை மீண்டும் உயிர்பெற்று எழச் செய்தார். பின்னர் சிவபெருமான் அவரையும் அவரது மகனையும் ஸ்ரீ மஹாகைலாச மஹாசபைக்கு அழைத்துச் சென்றூர். அங்கு சிவபெருமானின் திருச்சபையில் வீற்றிருந்த சிறுத்தொண்ட நாயனருக்கு ஓர் எண்ணம் தோன்றியது. அதாவது தாம் பெற்ற பிள்ளையையே அறுத்து கறிசமைத்துச் சிவபெருமானுக்கு அர்ப்பிதம் செய்த பக்தர்கள், தம்மைப்போன்று ஒருவரும் இல்லை. தாம் ஒருவரே அத்தகைய பெருஞ் செயலைப் புரிந்தததாகக் கர்வம் கொண்டார். இவ்விதமாகச் சிறுத்தொண்டர் நினைத்தவுடனேயே சிவபெருமான் அவரைப் பார்த்துப் புன்னகை செய்தார். தம் அருகில் வீற்றிருந்த உமாதேவியாரையும் திருச்சபையில் வீற்றிருந்தவர்களையும் அவரவர் இடத்திற்கு அனுப்பிவிட்டு, நன்னெறியையுடைய சிறுத்தொண்டரும் தாமுமாக ஜங்கமக்கோலம் கொண்டு, பூவுலகிற்கு . வந்து நிம்மவ்வையாருடைய திருமடத்தை நோக்கிச் சென்றூர்கள்.

இவ்விதமாகத் தம் வீடு தேடி வந்த ஜங்கம மூர்த்திகளை, நிம்மவ்வை வரவேற்று உபசரித்து, அவர்களது திருவடிகளில் சாஷ்டாங்கமாக வீழ்ந்து வணங்கி அவர்களை உட்காரச் செய்தாள். பிறகு சீக்கிரமாகச் சமையல்செய்து, அவ்விடத்தில்

உள்ள உள்ளறையில், சமைத்தவற்றை வைத்துவிட்டு, சுத்த ஜலம் எடுத்து வருவதற்குச் சென்ருள். ஜங்கமமூர்த்திகள் இருவரும் அவள் வீட்டுத் திண்ணையில் தூங்குபவர்களைப் போலப் பொய்த்தூக்கம் தூங்கிக்கொண்டிருந்தார்கள். அந்தச் சமயத்தில் நிம்மவ்வையின் மகன் வந்தான். வந்தவன் பசியோடு இருந்ததால், வீட்டினுள்ளே நுழைந்து சமையலறையில் வைத்திருந்த உணவுப் பொருள்களில் அதிரசம் ஒன்றை எடுத்துத் தின்றுகொண்டிருந்தான்.

அதற்குள் தண்ணீர் எடுத்து வரச்சென்ற நிம்மவ்வை திரும்பி வந்தாள். சமையலறையினுள்ளே நுழைந்ததும் தன் புத்திரன் ஜங்கமருக்கென சமைத்து வைத்திருந்தவற்றில் அதிரசத்தை எடுத்துத் தின்றுகொண்டிருப்பதைக் கண்டு கொண்டாள். அவளுக்குக் கோபம் பொங்கியது. தண்ணீர்க் குடத்தை தரையில் வைத்துவிட்டு, "அடே! இந்தத் தகாத



செயலைச் செய்துவிட்டாயே! எனது சிவபெருமானுக்குச் சமைத்து வைத்த அமுதினைத் தின்பதற்கு நீ நாயோ? என்று சொல்லி அவனை உயிர் போகும்படி ஓங்கியறைந்தாள். அவன் அந்த அடியில் மடிந்துவிட்டான்.

உயிர் துறந்த மகனைச் சீக்கிரமாக இழுத்துக்கொண்டு போய், கொல்லைப்புறத்தில் மறைத்துவிட்டாள். பிறகு அவனது திருஷ்டி தோஷம்பட்ட பாத்திரங்களிலிருந்த அமுதையும் அறு வகைகளையும் பாத்திரங்களுடன் வீசிவிட்டு, பூர்ண பயத்துடனும் பக்தியுடனும் மீண்டும் புதியதாகச் சமையல் செய்யலானுள்.

சமையல் செய்யும்போது "ஐயோ, ஜங்கம மூர்த்திகள் பசியோடிருக்கிருர்களே! ஐயகோ! நான் என்ன பாவம் செய் தவள்! என்னிடத்தில் இத்தகைய பாபிஷ்டன் மகனுகப் பிறந்தானே. அவன் கண்களை வேலாயுதத்தைக் கொண்டு தோண்டிவிடட்டுமா? தொட்ட கைகளை வெட்டி விடட்டுமா? மென்ற வாயினை துளைத்து விடட்டுமா? துஷ்டனுடைய உடம்பைக் கொத்திக் கொத்தி வீசி விடட்டுமா? அந்தோ! ஜங்கம மூர்த்திகள் பசியோடிருப்பார்களே!" என்று சொல்லிக் கொண்டே சமைத்தாள். அவளது பக்தியின் உறுதிப்பாட்டினைச் சிவபெருமான் தமது திருவிழிகளால் சைகை காட்டி, சிறுத்தொண்டருக்குக் கூறினுர். சமையல் செய்தவுடன் நிம்மவ்வை, ஜங்கமமூர்த்திகள் குளிப்பதற்காகத் தண்ணீரைக் காய வைத்தாள்.

ஜங்கம மூர்த்திகளை அந்த வெந்நீரில் நீராடச் செய்த பிறகு, சிவபூஜைக்குரிய ஆசனங்களில் எழுந்தருளச் செய்தாள். பூஜை முடிந்ததும், அவர்களுக்குத் திருவமுது படைக்கலானுள். அப்போது சிவபெருமான் நிம்மவ்வையை நோக்கி, "அம்மையே! தண்ணீர் கொண்டு வரச் சென்ற நீ தாமதித்து வருவதற்குக் காரணம் என்ன? நீ பெற்ற மகன், பசியோடு வந்தான். உன்னை நெடுநேரம் அழைத்துவிட்டுப் போய் விட்டான். பிள்ளைகளின் பசியை முன்னதாகத் தீர்க்கும் தாய் மார்களை நீ உலகத்தில் பார்த்ததில்லையோ? வெளியே சென்ற மகன் எவ்விடம் போனுன்? எப்போது வருவான்! சீக்கிரமாக அவனையும் கூப்பிட்டு வா! ஹரஹரா! புத்திரர்களை அகற்றி விட்டு உணவருந்த கைதான் முன்வருமா? விருப்பத்திற்குரிய புத்திரர்களை நாங்களும் பெற்றவர்களில்லையா? திவ்வியமான பதார்த்தங்களை செய்யும் சுபதினத்தில் புத்திரர்கள் இல்லாமல் உணவருந்துவதா? நீயோ, மகன்மீது ஆசையில்லாதவளாக இருக்கிருய்? அவன் பசியோடு போயிருக்க நீ எங்களுக்கு அமுது படைத்துவிட்டாய். சீக்கிரமாக விசாரித்துப் பார்த்து

அவனைக் கூப்பிடு. வெளியே சென்ற பிள்ளையைக் கூப்பிடாமலும் அவன்மீது ஆசையில்லாமலும் சகித்திருப்பதெல்லாம் குற்றமாகும். ஆகையால் அவனை அழைத்து வருவாய்'' என்று புன்னகை செய்தார். உடனே நிம்மவ்வை அவரை நோக்கி, '' நீ, அடியாளுக்கு எளிதாகக் கிடைப்பவனல்லன். யாரிடத்தில் உனது மோசச் சொற்களைச் சொல்கின்றாய்? அடியேன் பெண்பிள்ளை என்றும் ஒன்றும் தெரியாதவள் என்றும் எண்ணிவிட்டாயே? நீ விளையாட்டாகப் பேசுகிறாய்? மனதிடம் உடையவளாகிய அடியாளை அந்தச் சிறுத்தொண்ட நாயனார் புத்திர வாஞ்சையினால் அழைத்ததைப்போல நினைப்பது மதியீனம். உனது பெருமைக்கு இது சரியல்ல. இறைவனே. அருமையாகச் சமைத்துப் படைத்த இந்தத் திருவமுதை முற்றிலும் நீ விருப்பத்துடன் உண்ணாமற் போவாயாயின் உன்னை ஒரு அடி எடுத்து வைக்கவும் விடமாட்டேன். நான் யாருக்காக சமையல் செய்தேன்? அந்தக் கொடும்பாவியைக் கொன்றுவிட்டேன். பரம்பொருளே! மறுபடியும் அழைப்பாய் என்று நீயே சொல்வாயானால், பூலோக வாழ்வை விட மேலான உனது சிவபதத்தைக்கூட நான் விரும்பமாட்டேன். ஐயனே! யாவராலும் செய்யத்தகாத கொடிய பாவமாகிய சிவதுரோகத்தைச் செய்து என் மகன் மாண்டான். அந்தப் பாபிஷ்டனை நான் மீண்டும் அழைக்கமாட்டேன்'' என்றாள்.

அதைக் கேட்டதும் சிறுத்தொண்ட நாயனார் வெட்கித் தலைகுனிந்தார். அவர் உடல் நடுங்கியது. நிம்மவ்வையின் மனவுறுதியையும் பக்தியையும் கண்டு மகிழ்ந்த சிவபெருமான் தொன்மையான தமது திருவுருவத்துடன் தோன்றினார்.

அதைக் கண்ட நிம்மவ்வை அவரை நோக்கி, '' ஐயனே! உனக்கு இந்தக் கோலங்கொள்வது பெரிய காரியமல்ல. இந்தக் காரியம் செய்வது வல்லமையும் அல்ல. உனக்கு ஒரு விண்ணப்பம். உயிருக்கு உடல் ஆதாரமாகவும் உடலுக்கு உயிர் ஆதாரமாகவும் கலந்து கொள்வதைப்போல குருவுக்கு லிங்கம் ஆதாரமாகவும் லிங்கத்துக்குக் குரு ஆதாரமாகவும் கலந்திருக்கும் திருமேனியான, ஜங்கமமூர்த்தத்தை ஒழித்து, நீ விருஷபாருட மூர்த்தத்தைக்கொள்வாயானால், அழகிய ஜங்கம மூர்த்தைப்போல வழிபடுபவர்கள் உன்னையும் அடியேனையும் கைகொட்டி நகைப்பார்கள். இந்தச்செயலுக்கு நான் சம்மதிக்க மாட்டேன். இந்தப் பலவகையான வேடங்கள் உனக்கு ஏன்? ஒரு வேடம் இகழ்ச்சியானதென்றும் ஒரு வேடம் புகழுக்குரியதென்றும் நான் எண்ணமாட்டேன். இந்த மூன்று கண்களுக்கும் மேலாக இன்னும் மூன்று கண்கள் படைத்திருந்தாலும், ஆயிரங்கண்களையே கொண்டிருந்தாலும், தேவர்களுக்கும்

மேலான நீ முன்பு எடுத்த அவதாரமான ஜங்கம மூர்த்தத்தையே நான் விரும்புகிறேன். திருநீலகண்ட நாயனருக்கு உள்ளம் உவக்கும்படி இளமைப் பருவத்தைக் கொடுக்கப் போகும்போது, நஞ்சுண்ட நீலகண்டத்துடன் அன்ருே வடிவமெடுத்தாய். சேடதாசையர் விற்பதற்காகக் கொண்டுபோன பட்டாடையை நீ கேட்டபோது உன் திருமுடியில் கங்கை இருந்ததோ? சிறுத்தொண்ட நாயனுரின் சின்னஞ் சிறு பாலகனை சீராளனின் இறைச்சியை நீ உணவாக அருந்தும்போது உமது இடது பாகத்தில் உமா தேவி இருந்ததுண்டோ? முன்ஞெரு சமயம் வெள்ளாள மஹாராஜனின் தேவிக்காக நீ வடிவமெடுத்துச் சென்றபோது உம் விரிசடையில் பிறைநிலா சூடியிருந்ததுண்டோ? முன்பு மானக்கஞ்சாற நாயனர் தம் மகளைத் திருமணஞ்செய்துகொடுக்கும் சமயத்தில் அவளுடைய கூந்தலை பஞ்சவடிக்காக நீ தானங் கேட்பதற்கு வடிவெடுத்துச் சென்றபோது ஒளி வீசும் நெற்றிக் கண்ணுடனே நீ திருமணப் பந்தலுக்குச் சென்ருல்? திருக்குறிப்புத் தொண்ட நாயனர் துணி வெளுக்கும் நீர்த்துறைக்கு நீ வடிவெடுத்துச் சென்றபோது எருதுமீது ஏறியோ எழுந்தருளினுய்? பெரும் பசியினுல் இளையாங்குடிமாற நாயனுரின் வீட்டிற்கு நீ வடிவெடுத்துச் சென்றபோது இரண்டு திருக்கரங்களிலும் மழலோடும் மானேடுமா காட்சியளித்தாய்? அமர்நீதி நாயனரிடம் உன் கோவணத்திற்கீடாக பொன் பொருள்களையெல்லாம் நீ பெற்றுக் கொள்ளும்போது நான்கு திருத்தோள்களோடா காட்சியளித்தாய்? ஐயனே, உன்னுடைய பலவிதமான தந்திர வார்த்தைகளை யெல்லாம் சிறிதும் சொல்லவேண்டாம். உனக்கென்றே நான் தந்த அமுதை என்மேல் ஆணைப்படி உண்டருள்வாயாக'' என்று கூறினுள்.

அதைக் கேட்டதும் சிவபெருமான் புன்முறுவல் செய்து பொங்கும் ஆர்வத்தோடு தங்கி பொன்னனை வாய் நிறைய திருவமுது அருந்தினர். பிறகு அவர் சிறுத்தொண்ட நாயனுரை நோக்கி, ''சண்டேச நாயனர் முதலான முன்னேர்கள் என் மீது கொண்ட பக்தியால் தகப்பன்மார்களையும், பிள்ளைகளையும் கோபித்துக் கொன்ருர்கள். இப்போது இந்த நிம்மவ்வையின் பக்தி இனிமையைக் கண்டாயோ? இவளுக்கு இனிய வரங்களெல்லாம் நாம் வழங்கலாம் என்ருலோ இவள் ஒன்றையும் விரும்பமாட்டாள். என் மீதுள்ள அன்பைத் தவிர, தன் மனதாலும் சிறிதும் கருதமாட்டாள். உயிருக்குப் பாதுகாவலான தூய்மையான பக்தி செலுத்தும் இவளுடைய செய்கையைப் பார்! நம் சிவபதமல்லாத வேறு எந்தப் பதவியையும் இவள் தன் உள்ளத்திலும் நினைக்கமாட்டாள். சிவத்துரோகக் குற்றம் புரிபவர்களைக் கொல்லுதல் குற்றமல்ல. அத்தகைய

கொடிய பாவிகளை மறுபடியும் கூப்பிடு என்றபோது கூப்பிட மாட்டேன் என்று சொன்ன சொல்லும் நன்றே! இங்கு வந்திருக்கும் நான் இவளிடம் 'உனக்கு வேண்டிய வரங்களைத் தருகிறேன் என்று சொன்னாலும், இவள் சம்மதிக்கமாட்டாள். இவள் என்மீது வைத்திருக்கிற பக்தி மிகவும் அருமையானது!'' என்று கூறி அன்புடன் நிம்மவ்வையைப் பாராட்டிவிட்டு, ''இப்படி என்மீது அன்பு செலுத்துவதில் உயர்ந்து விளங்கும் சரணர்கள் அனேகர் ஆவார். நீயோ, எனக்கு நிகரில்லையென உன்னையே எழுச்சிக் கொண்டாய்!'' என்று எடுத்துரைத்தார்.

அதைக் கேட்டதும் சிறுத்தொண்ட நாயனாரோ, தம்மை விடச் சிறந்த பக்தர்களே இல்லை என்று தம்மைத் தாமே மெச்சிக்கொண்டதற்கு வருந்தினர். அவ்விதம் மெச்சிக் கொள்ளாத நிம்மவ்வையின் மைந்தன், இறைவன் திருவருளால் மீண்டும் உயிர்பெற்று வந்தான். அவன் சிவ பெருமானது மஹாகைலாசத்தையடைந்தான். பாபவிமோசனத்திற்குரிய இஷ்டலிங்கார்ச்சனையும் சிறந்த ஜங்கமாராதனையும், *நான்கு பதவிகளையும் விடச் சிறந்தது என்று கருதிய நிம்மவ்வை நிலைபெற்று வாழ்ந்திருந்தாள். சிவபக்தர்கள் குற்றமுள்ள அகங்காரங் கொள்வார்களாயின் பாபம் உண்டாகும். வசவண்ணரே! கேட்பாயாக!'' என்று மற்றொரு சிவபக்தரின் கதையை மடிவால மாச்சையர் சொல்லத் துவங்கினர்.



* நான்கு பதங்கள் : சாலோக்கியம், சாமீப்யம், ஸாரூப்யம் சாயுஜ்யம்.

# 27. அலாயுதர் கதை

நிம்மவ்வையாரின் திருமடத்திலிருந்து, சிவபெருமான் தம் சிறுத்தொண்ட நாயனுருடனும் ஜங்கமக் கோலத்துடனும் அலாயுதர் என்ற சிவபக்தரது மடத்தை அடைந்தார். சிவ சரணராகி அலாயுதர், ஜங்கம மூர்த்திகளின் திருவடிகளில் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கி, திருவடிகளைக் கழுவி, ஆசனங்களில் எழுந்தருளச் செய்தார்.

அப்போது சிவபெருமான், க்ஷேமலாபங்களை விசாரித்துப் பேசலானுர் ''எமது மனுேபீஷ்டத்தை குறிப்பாகத் தெரிந்து கொண்டு நிறைவேற்றுகின்ற ஜங்கமமூர்த்திகளும் நமக்கு மன மிசைந்து விருப்பமாக நடந்துகொள்ளும் சிவபக்தர்களும் இருக்கின்ற இடங்களுக்கு நாமே செல்வோம். அவர்களும் அழிவில்லாத இஷ்டலிங்கமூர்த்தியைப் போலவே பாவித்து நம்மையே தியானிப்பார்கள். இப்படிப்பட்டவர்களை நாமும் மெச்சிக்கொள்வோம்! சிவாநுபூதிமான்கள் என்று நினைக்கப் பட்ட சேரமான் பெருமாள் நாயனுரும் திருக்கருவையிலுள்ள அநபாய சோழரும் மாதா சென்னையரும் பாஹுர் பொம்மிதே வரும், திருஞானசம்பந்த சுவாமிகளுமாகிய இத்தகையர் தொடங்கமாகிய சிவசரணர்கள் நம்மைப் பூஜித்து, அபேத மாய்ப் பரமானந்த சுகத்துடன் வாழ்பவர்களுக்கு நாம் விரும்பு தற்குரிய ஜங்கமமூர்த்திகளாவோம். நாம் பார்க்காத தேசங் களும் ஜங்கமமூர்த்திகளும் சிவபக்தர்களும் இந்த உலகத்தில் இல்லை. நம்மைத் தெரியாத தர்மசிலர்களும் இல்லை. நாம் செய்கின்ற தொழில் எப்போதும் பூமியில் சஞ்சரித்தலேயாகும். நாம் அன்புடைய சிவபக்தரை அங்கீகரிப்போம். துன்மார்க் கர்களை விரும்பமாட்டோம். இவ்வாறே நமக்குண்டான தினங்களையெல்லாம் கழிப்போம். நம்மைப் போஷிப்பவர் களும் சன்மார்க்கமுடைய சிவபக்தர்களும் ஒழுங்குடன் வாழ் கின்ற திருச்செங்காட்டங்குடியில் தோன்றிய, சிறந்த பக்த ருகிய சிறுத்தொண்டன் என்பவன், சிவபக்தர்கள் என்ருல், அவர்களது பாதங்களின்மேல் சாஷ்டாங்கமாக வணங்கி, விரும்புதற்குரிய அமுதினைப் பக்தியுடன் நாள்தோறும் படைப் பான் அவனுடைய மனவுறுதியினுல் உண்டாகிய பயனை உலகத்தார் தெரிந்துகொள்வதற்காகச் சிவபெருமான், ஜங்கம

மூர்த்தியாக எழுந்தருளி, அவனது அன்புக்குரிய பிள்ளையை கறியமுதாகச் சமைத்துப் படைப்பாய் என்று கேட்டான். அந்த வார்த்தையைச் சிரமேற்றுங்கிய சிறுத்தொண்டன், தன் மகன் என்று சிறிதேனும் யோசியாமல் அறுத்து, சிறந்த பக்தி யுடன் கறியமுதாக்கி அளித்தான். அவனது அழகான புத்திர னும் உயிர்பெற்று வரும்படி அருள் செய்து சிறுத்தொண்டனை யும் அவனது உறவினரையும் தமது மஹாகைலாயத்தில் மகிழ்ச்சியாக வாழச் செய்தருளினன். "உலகத்தில் இவ்வித மாக அன்பு செய்யும் சிவபக்தருடைய பெருமையே பெருமை. அதுவன்றி, அற்ப பக்தியை உயர்வாகப் புகழ்வதால் பயன் என்ன?" என்றார்.

உடனே அலாயுதையர், "இது என்ன கொடிய செய்கை!' இது தர்மமாகுமோ, தூர்த்தனே! இத்தகைய பாபச் செய் கையைப் புகழ்வதால் பயன் யாது? பரம துஷ்டர்களாகிய ராக்ஷசர்கள் விரும்பி யுண்ணும் நரமாமி சத்தைச் சிவபெரு மான் பார்க்கலாமா? சிவபக்தனிடம் தோன்றிய அவனது பிள்ளையும் சிவபக் தனே யல்லவா? அத்தகையவனின் உடலை யறுத்துச் சமைத்துப் படைத்த தந்தையான சிறுத் தொண்டனை அன் புடையவன் என்றும் அவனது பக்தி சிறந்த சிவபக்தி என் றும் நீ சொல்வது எப்படிப் பொருந் தும்? இது எனக்குச் சந்தேகமாயுள்ளது" என்றார்.



உடனே. மாறு வேடத்தில் வந்திருக் கும் சிவபெருமான், "அலாயுதா! அழகிய பூமியில் மாதர்களா கிய சிவபக்தைகள் தமது அருமைப்

பிள்ளைகளைக் கூடச் சாகும்படி அடித்தவர்கள் எத்தனையோ பேர்கள் இருக்கிறார்கள். இது உண்மை. சிவபக்தர்கள் நல்லவற்றை இச்சித்துக் கேட்பார்களாயின், 'நாஸ்தி' என்று சொல்கிற படிப்படைப்பதே, சிவபக்த தர்மமாகும். அதுவே சிவபெருமானுக்கும் சந்தோஷமாகும். அத்தகைய சிவபக்தி அந்தச் சிறுத்தொண்டனிடத்தில் அல்லவா இருந்தது? இதை நீ நம்பாமற் போவீரயின், அவனது ஊருக்கு ஆளனுப்பித் தெரிந்துகொள். அலாயுதா! மேலுங்கேள்!



அந்தத் தேசத்தில் வீடுகளில் எல்லாம் அந்தச் சிறுத்தொண்டனின் வரலாற்றைப் பக்தர்கள் தினந்தோறும் துதிப்பார்கள். இது உண்மை. கொவ்வை பாதமுடைய கோதையரும் கூடி நெல் குத்தும்போதுகூட, அவன் புகழைப் பாடுவார்கள். உன்ஞல் அவ்விடம் சென்று அவர்கள் அப்படிப்பாடுவதை விட்டு விடும்படிச் சொல்ல முடியுமா?'' என்று கேட்டார்.

இதைக் கேட்டதும் அலாயுதருக்குக் கோபம் பொங்கியது. அவர் ஜங்கமருபத்தில் வந்திருந்த சிவபெருமானை நோக்கி, ''ஏனையா! சிவபக்தர்களை ரக்ஷிப்பவன் சிவபெருமான் என்று சொல்லப்படும் சொல்லே பாபச்சொல்லவா? சிவபக்தரின் உயிருக்குத் துரோகம் நினைக்கும் பாதகத்தை என்னவென்று தான் சொல்வது? சிவபக்தன் என்று சொன்னதுமே, அவனது உயிரை வாங்குவதுதான் சிவபெருமானது செய்கையோ? சிறுத்தொண்டபக்தன் மெய்ஞானமுடையவன். அவன் பக்தியை யாராலும் அடைய முடியாது. பெற்ற தாய் அரக்கியாவாளாயின், பெற்ற குழந்தை பிழைத்திருக்க முடியுமா? பேரறிவுடைய சிவபெருமானுக்கு எத்தனை வயதாகியும் அவன் என்ன சிறு குழந்தையா? தம்மை விரும்பும் தேவர்கள் முற்காலத்தில் மோக்ஷலோகத்தைக் கேட்டுப் பெற்றதால் மயக்கமுற்ருனே? வயது முதிராத இளைஞனையா சாகடிக்க நினைப்பது? இறைச்சியை சைவன் என்பவன் கண்ணுலும் பார்க்கத்தகுமோ! மனத்தாலும் நினைக்கலாகுமோ? இத்தகைய செயலை சிறுத்தொண்டன் செய்தான்! அவனை உலகத்தில் மதிப்பவர் யார்! சிவசரணரின் மனவுறுதியை அறிய, பிள்ளைக் கறியையா வேண்டுவது? இத்தகைய கட்டளையிடுகின்ற திருவாக்கும் ஒருவாக்கா? மைந்தனின் தலையை அறுக்க: கழுத்தின்மீது கத்தியை வைத்ததுமே, அவனது பக்தியை மெச்சி அந்தப் பக்தனுக்கு வேண்டிய வரத்தை அந்தச் சிவன் அளித்திருக்க வேண்டாமா? அவனும் பிள்ளைக்கறியை இச்சித்து, கழுத்தை யரிவதைப் பார்த்தும் சகித்திருந்து விட்டான். உலகத்தில் பிள்ளைகளைப்பெற்ற பாசம் அவனுக்கு இல்லாமற் போகலாமா?

சிறுத்தொண்டனும் சிறந்த பக்தனேயல்ல. பிறருடைய உயிரைக் கொல்வதற்குச் சம்மதித்து அழிவற்ற நடுநிலையை மனத்தில் அவன் நினைக்கவில்லை. தன்னுடைய உடலைக் காப்பதற்காகப் பாவத்திற்குப் பயப்படாமல், ஒருயிரைக் கொல்வதற்கு அவனுக்கு எப்படித்தான் கை வந்ததோ! ஐயகோ! பிறருடைய வீட்டில் பற்றிய தீ, தன் வீட்டிலும் பற்றிச் சுட்டெரித்துவிடுமே என்று தீயை விலக்காமல் தன் மைந்தனைக் கொல்வதால், தனக்குப் பாவம் உண்டாகாமற் போகுமா? இந்தப் பாவச்செயலை அவன் செய்யக் காரணம் என்ன? இதைப் பெரியோர்கள் ஏற்பார்களா? எக்காலத்திலும் ஒவ்வுமா? நாமாம்சமின்றி வேறெதுவும் அந்தச் சிவபெருமானின்

தொண்டையினுள்ளே செல்லாதோ? தன் பக்தி, இந்த நீசக் காரியத்தினலோ வெளிப்படவேண்டும்? அமுதும், பாலும், பழமும், தேனும், நல்ல கறியமுதும் இல்லாமலா போயிற்று? சிவபெருமானுக்கு இத்தகைய பக்தி விருப்பம் ஏன்தான் உண்டாயிற்றே? மேன்மையுடைய ஸ்ரீ மஹா கைலாயத்தில் எல்லாச் சிவகணங்களுக்கும், எல்லா பக்த மகேஸ்வரர்களுக்கும், இத்தகைய செயல்புரிந்த சிவபெருமானும் புறம்பாலரன் சிறுத்தொண்டனும் புறம்பாவான்!'' என்று பூமியின்மீது கையறைந்து, அலாயுதையர் அடித்துச் சொன்னர்.

'புறம்பு' என்ற சொல் செவிகளில் நுழைந்ததும் அந்த இரண்டு ஜங்கமமூர்த்திகளும் பயந்து வாட்டமடைந்து, ஆலோசித்தார்கள். அழகிழந்த இருவரும் தங்களுக்குள்ளேயே ஒருவர் முகத்தை மற்றெருவர் பார்த்தார்கள். அப்போது அலாயுதர் சிவபெருமானை ஜங்கமரை நோக்கி, ''ஐயனே! நீர் மாமிசத்தை புசிக்கின்ற புண்ணியக் கதைகளை இனிமேலாயினும் புகழாமல் விட்டுவிடு. இனி என் முன் நிற்காதே! போய்விடு. நானும் போகிறேன்'' என்று சொல்லி விட்டு, தமது மடத்துள் நுழைந்தார்.

அப்போது பிறைசூடிய பெருமான், பிறை நெற்றியுடைய உமாதேவியாரை நினைத்தார்.

உடனே, மங்கை உமையின் மனம் கலங்கியது. அவள் மேன்மையுடைய திருவெண்காட்டு நங்கையைத் தன்னுடன் அழைத்துக்கொண்டு, ஜங்கமத் திருக்கோலத்துடன், அலாயுதையரின் திருமடத்திற்கு வந்தாள்.

தேவியர் இருவரும் வந்ததும், அலாயுதர் அவர்கள் இருவரையும் துதித்துக் கும்பிட்டு, சாஷ்டாங்கமாக வணங்கி. எழுந்து, அவர்களது திருவடித் தாமரைகளைப் புனித நீர் கொண்டு கழுவினர். பிறகு மேன்மை பொருந்த அந்த ஜங்கம மூர்த்திகள் இருவரையும் அமுது செய்யும் அறைக்கு அழைத்துச் சென்று, தகுதியான ஆசனங்களில் விருப்பத்துடன் எழுந்தருளச் செய்தார்.

அன்புடன் அவர்களைத் துதித்தார். அப்போது உமா தேவியார், அலாயுதரை நோக்கி, ''செல்வமும் உடலும் உயிருமாகக் கூடியிருக்கும் மூன்று பொருள்களையும், மேன்மையுடைய ஜங்கமமூர்த்திகளுக்குத் தத்தஞ் செய்கின்ற உன் பெருமை எங்கும் பரவியுள்ளது. அதை மேலான ஜங்கமர்கள் சொல்லக் கேள்விப்பட்டு நாங்கள் உன்னைக்காண வந்தோம். அழிவில்லாதவனே! தர்மசீலனே! நாங்கள் உன்னை ஒரு பாக்கியம் வேண்டிக் கேட்கின்றோம். உயிர்க்காவலாகிய சிவாகமங்களின் விதி மார்க்கத்தினின்றும் விலகாதவனே! குற்றமற்ற சிவாதிக்யத்தை, பிரதிபலிக்கின்ற சத்திய மார்க்கத்தினின்

றும் விலகாதவனே! பக்திரத்தினமே! மேன்மையுடைய முக்தி விளைகின்ற நிலமே! அலாயுதனே!'' என்று அலாயுதரைப் புகழ்ந்தாள்.

அதைக் கேட்டதும் அலாயுதர், உமையம்மையை நோக்கி, ''ஜங்கம பூஜை ஒன்றையே செய்கின்ற அடியேனை நீ இவ்வளவு புகழ்வதற்கு நான் அவ்வளவு யோக்யதையுள்ளவனல்லவே! உனது சரணர்கள் பொருளைக் கொடுப்பார்கள், சிறந்த சிவாகமங்கள் விதிக்கின்ற சம்பத்தைக் கேள்!'' என்றார்.

அப்போது உமாதேவியார், தம் அருகே இருந்த திருவெண்காட்டு மங்கையைச் சுட்டிக்காட்டி இந்த அம்மை சிறுத்தொண்ட பக்தன்மீது விருப்பமுடைய மனைவியாவாள். நான் லோகநாதனாகிய சிவபெருமான் விரும்பும் பார்வதியாவேன். அவர்களை நீ புறம்பு என்று சொன்னதால், மனம் வருந்திய நாங்கள் இங்கு மெலிந்து வந்தோம். கணவன் இல்லாத பெண்டிரும், நற்குணமில்லாதவனுடைய பொருளும் பொருளற்றவனின் இளமைப்பருவமும் சிறப்புப் பொருந்திய சிவபெருமான்மீது அன்பில்லாதவரும், அன்பு என்கின்ற அன்றலர்ந்த அழகிய மலர்கள் இல்லாமற் பூஜை செய்யும் பக்தனின் பூஜையை நிகர்க்கும். எங்களுக்குப் பெறுதற்கரிய எங்கள் கணவர்களைத் தானஞ் செய்து, அவர்களுக்கு உண்டான அநாசாரத்தைச் சுத்தி செய்து, சிவசாரத்தை நீயே வழங்குவாயாக. பரமசாந்தமூர்த்தியே! சிறந்த பக்தியுடைய வீர சைவனே! புண்யவானே!'' என்று இனிய மொழிகளில் இறைவியானவள் கூறியதும், திருவெண்காட்டு நங்கையானவள் அலாயுதரின் திருவடிகளில் சாஷ்டாங்கமாக வீழ்ந்து வணங்கினாள். உடனே, அலாயுதர் புன்னகையுடன் 'புறம்பு இல்லை' என்று சொன்னார்.

உடனே சிவபெருமான் வான்பிறையும் ஆகாய கங்கையும் சூடிய திருமுடியோடும் திடமான நான்கு திருத்தோள்களோடும், மான், மழுவு எந்திய திருக்கரங்களோடும் புன்னகையோடும் நெற்றிக்கண் துலங்க, ரிஷப வாகனத்தின் மீது காட்சி கொடுத்தார். விஷ்ணு, பிரம்மா, இந்திரன், அஷ்டதிக்குப் பாலகர்கள், ஏகாதச ருத்திரர்கள், சந்திரன், துவாதசாதித்யர்கள், அஷ்ட வசுக்கள், தேவர்கள், முனிவர்கள், கந்தர்வர் முதலிய அனைவரும் துதித்தனர். தேவ துந்துபிகள் முழங்கின. ஹலாயுதர், சிவபெருமானது திருவடிகளின்மீது மலர் தூவி வணங்கினார். பின்னர், அலாயுதையனும் பார்வதி தேவியும், ஆயிரக்கணக்கான சூர்யப் பிரகாசமுடைய ஸவர்ண கசிதமான தேரில் ஏறி, ஸ்ரீமகா கைலாயத்தை அடைந்தார்கள். இவ்வாறு கூறிய மடிவால மாச்சையர் அடுத்த சிவபக்தரின் கதையைக் கூறலானார்.

# 28. சுந்தரப் பெருமான் நாயனுர் கதை

சுந்தரமூர்த்தி நாயனுர் என்பவர் திருநாவலூரில் அவதரித்தார். இவர் திருப்பத்தூரில் திருமணஞ் செய்துகொள்ளுப்போது, சிவபெருமான், கிழவேதியராக வடிவமெடுத்து வந்து அந்தத் திருமணப் பந்தலில் புகுந்து ''இவன் நமக்கு வமிச பாரம்பரியமாகத் தொடர்ந்து வருகிற அடிமைக்காரன்!'' என்று ஒரு முறிச் சீட்டைக் காட்டி, திருவெண்ணெய் நல்லூரில் தடுத்தாட் கொண்டு, நம்மீது பதிகம் பாடுவாயாக!'' என்று கேட்டார். உடனே அவர் பதிகம் பாடினுர். திருப்புகலூரில் செங்கற்களைப் பொன்னுகச் செய்தார். சிவபெருமானையே பாவை நாச்சியாரிடம் தூதாக நள்ளிரவில் அனுப்பினுர். முதலையுண்ட பிராமணப் பிள்ளையை மீட்டார்- மணி முக்தா



• பார்க்க ''அறுபத்துமூவர் கதைகள்''

நதியிற் போட்ட பன்னீராயிரம் பொன்னைத் திருவாரூர்த் திருக் குளத்திலிருந்து எடுத்தார். ஒரு சமயம் அவர் திருவாரூரி லிருக்கிற சிவாலயத்திலுள்ள, தேவாசிரிய மண்டபத்திலிருந்த சிவனடியார் திருக்கூட்டத்தை வணங்காமல் திருக்கோயிலின் உள்ளே சென்றார். அதைக் கண்ட விறன்மிண்ட நாயனார், "இவ்வளவு மனதிடத்துடன் உள்ளே பாடுகின்ற நீ யார்?" என்று கேட்க, அதற்குச் சுந்தரர், "தம்பிரான் தோழர்" என்று சொல்லிவிட்டு கோயிலினுள்ளே சென்றுவிட்டார். உடனே விறன்மிண்ட நாயனார், "இந்த அடியானும் இவனைச் சேர்ந்த சிவபெருமானும் புறம்பு" என்று சொல்லிவிட்டார்.

கோயிலினுள்ளே சென்ற சுந்தரரைச் சிவபெருமான் பார்த்து "நீ அடாத காரியம் செய்தாய். அடியாரை வணங் காமல் வந்து நம்மை வணங்குவது வழக்கமன்று; ஆகையால் நாம் இவ்விடம் இருக்கவொண்ணாது!" என்று சொல்லி, அடியார் கோலங் கொண்டு, பயணப்பட்டு, திருமதிற் சுவரி லுள்ள செங்கற்களைக் களைந்து வழி செய்துகொண்டு ஒருவருக் கும் தெரியாதபடி வெளிப்பட்டுச் சென்றார். சுந்தரர் அவரைப் பின் தொடர்ந்தார். சிவபெருமான், வெகுதூரம் சுந்தரரைத் திரும்பிப் பாராமலே சென்று ஒரு பெரிய காட்டினுள்ளே புகுந் தார். சுந்தரர் அவரை நெருங்கி, அவரது வழியை மறித்து நின்றார். இருவரும் அந்தக் காட்டிலேயே தங்கினார்கள். சிவபெருமான் சுந்தரரை நோக்கி, "அடியாரைத் துதிக்கா விட்டால் நாம் கோயிலினுள்ளே செல்லோம்" என்றார். பெருமான் கூறியவாறே அடியாரைத் துதிக்க சுந்தரர் சம்ம தித்தார். இருவரும் காட்டைக் கடந்து செல்லாமல் திருக் கோயிலினுள்ளே சென்றனர். பிறகு, சுந்தரர், 'தில்லைவாழ் அந்தணர் மூவாயிரவருக்கும் அடியேன்!' என்று பாடலானார். "திருநீலகண்டத்தின் மீது ஆணை!" என்று சொன்ன மனையா ளிடத்துப் பெண் போகத்தைத் துறந்து, மிகவும் வயது முதிர்ந் ததும் சிவபெருமானது கடாட்சத்தால் குற்றமற்ற இளமைப் பருவத்தையடைந்த திருநீலகண்டர் என்ற குயவர் குலத் துதித்த கிருபாமூர்த்திக்கும் அடியேன்.

சிவபெருமான் சிவபக்தரைப் போல எழுந்தருளி "உன்னு டைய மனைவியை எனக்குக் கொடு!" என்று கேட்க, அவ் வாறே தந்து மகிழ்ந்த கணவனும், காவிரிப்பூம்பட்டின வாசியு மான இயற்கை நாயனர்க்கு அடியேன்!

"என்னுடைய பசிக்கு அமுதுபடைப்பாய்!" என்று கேட்ட சிவ வேடத்தாருக்கு இல்லையென்று சொல்லாமல் இருட்டில் நெல் முளைகளை வாரிக்கொண்டு வந்து, சமைத்துப் பசியாக வந்தவருக்கு அமுதினைப் படைத்த இளையான் குடி மாறநாயனர்க்கும் அடியார்க்கும் அடியேன்!

வஞ்சகமாகிய சிவவேடத்தன் ஒரு சுவடியை எடுத்துக் கொண்டு மாளிகையில் வந்து கொல்லப்போகும் சமயத்தில் தத்தன் என்பவன் தனது தலைவனுக்கு உயிர்ச்சேதம் நேரிடுகின்ற செயலைக் கண்டு, விரைவாக அந்த வஞ்சகனைக் கொல்வதற்கு முன்னமேயே விலக்கிய நற்குணத்தையுடைய திருக்கோவிலூரில் அவதரித்த மெய்ப்பொருள் நாயனார்க்கும் அடியேன்: சிவபக்தரை வணங்காமல் செல்கின்ற மூடனாகிய அடியேனையும் சிவபெருமானையும் உண்மைத் தொண்டு செய்கின்ற சிவனடியார் அனைவர்க்கும் புறம்பென்று சொன்ன தைரியசாலியான, திருச்செங்குன்றூரில் அவதரித்த விறன் மீண்ட நாயனார்க்கும் அடியேன்.''



''சிவவேடத்தார் ஒருவர், தமது கோவணத்திற்குச் சமானமானதொரு கௌபீனத்தைக் கொடுப்பாய் என்று கேட்கவும், அதைக் கொடுக்க முடியாமையால் அதற்கு ஈடாகத் தனது குற்றமற்ற நிதியையும் மனைவியையும் தன்னையும் மனமிசைந்து தராசிலிட்டு நிறுத்திக் கொடுத்தவரும் புகழ்பெற்ற திருப்பழையாறை என்ற திருத்தலத்தில் அவதரித்தவருமாகிய அமர்நீதி நாயனார்க்கும் அடியேன். சிவபெருமானுக்கென்றே ஒரு சிவவேடத்தன் பூக்குடலை நிறைய மலர்கள் பறித்துக்கொண்டு

வரும்போது, பட்டத்து யானை ஒன்று, அம்மலர்களைத் தன் துதிக்கையால் பிடுங்கிக்கொண்டது. இந்தச் செயலைக் கண்டு அந்த யானையின் உயிரை வாங்கிய, திருக்கருவை நகரில் அவதரித்த எறியத்த நாயனார்க்கும் அடியேன் !

போர் செய்கின்ற பகைவனது நெற்றியில் பூசப்பட்ட விபூதியைப் பார்த்து, தன் கையிலிருந்த வாளாயுதத்தை எறிந்துவிட்டு, அவனைச் சிவபிரான் என்றே வணங்கியவரும் நல்லொழுக்கமுடைய சான்றோர் குலத்தில் பிறந்தவரும் திருவெயினனூரில் வாழ்ந்திருந்தவருமான ஏநாதி நாயனாருக்கு அடியேன் ! மூல காரணராகிய திருக்காளத்தி நாதரது திருவிழிகளில் ஒழுகிய உதரத்தைப் பார்த்து அவன் கையிலிருக்கிற அம்பினால் தனது கண்ணைத் தோண்டி அப்பித் திருவுடுப் பூராரது விளங்கும்படி அவதரித்த கண்ணப்ப நாயனார்க்கும் அடியேன் !

"திருப்பனந்தாள் என்ற திருத்தலத்தில் திருமேனி வளைந்திருந்த சிவலிங்கப் பெருமானது வளைவைச் சரியாகும்படிக் கட்டியிருந்ததோர் கயிற்றினைத் தன் கழுத்தில் கட்டி, இழுத்து நிறுத்தியவரும் மனையாளின் தாலியை வழியில் எதிர்ப்பட்ட தூபகைங்கரியத்துக்காகக் கொடுத்தவரும், திருக்கடவூரில் அவதரித்தவருமான குங்கிலியக்கலய நாயனார்க்கும் அடியேன் !

ஆராய்ந்தமைந்த திருமணப் பந்தலில் மணப்பெண்ணான தம் மகளின் கூந்தலை அறுத்து சிவவேடத்தாருக்குக் கொடுத்த மானக்கஞ்சாற நாயனார்க்கும் அடியேன் !

"தமது அன்புத் தெய்வமான சிவபெருமானுக்கென்றே செந்நெல் அரிசியை நிவேதனத்துக்காகக் கொண்டு போகும் போது, தாம் தவறி விழ, அந்த நெல்லரிசி நில வெடிப்பில் சிந்திப்போனதைக் கண்டு தமது கழுத்தை அரிவாளால் அறுத்துக்கொண்டு, அவ்விடத்திலேயே உண்ணச் செய்தவரும், திருக்கண்ண மங்கலமென்ற ஸ்தலத்தில் அவதரித்தவருமாகிய அரிவாட்டாய நாயனார்க்கும் அடியேன் !

சப்தஸ்வரம் நிறைந்த வேய்ங்குழலில் சிவபெருமானது சிறந்த புகழான ஸ்ரீ பஞ்சாக்ஷர மகாமந்திரத்தையே மனமுருக ஜெபித்து, இன்னிசை முழங்கி, சிவபெருமானை மகிழச் செய்தவரும், திருமங்கலம் என்ற திருத்தலத்தில் அவதரித்தவருமான ஆனாய நாயனார்க்கும் அடியேன் !

சமணர்களால் சிவபெருமானது கைங்கரியத்துக்குரிய சந்தனக் கட்டை கிடைக்காமற் போக. அதற்காகத் தம் முழங்



கையையே சந்தனக் கட்டையைப் போலத் தேய்த்து, சிவானுக்கிரகத்தை பெற்ற மதுரை மூர்த்தி நாயனார்க்கும் அடியேன்!

நிகரற்ற ஸ்ரீ பஞ்சாக்ஷர மந்திரத்தையே ஜபித்து, ஒப்பற்ற திருஞான சம்பந்த சுவாமிகளுக்கு நண்பராகி, அழகிய திருப் பள்ளித் தாயத்தை சிவபெருமானுக்கு கட்டிக் கொடுத்தவரும் திருப்புகலூரில் அவதரித்தவருமான முருக நாயனார்க்கும் அடியேன் !

கண்டத்தளவுள்ள ஜலத்தில் அகோராத்ரமும் நின்று, இரண்டு கைகளையும் சிரத்தின்மீது குவித்து ஸ்ரீ ருத்திரத்தை ஜெபித்த திருத்தலையர் உருத்திர பசுபதி நாயனார்க்கும் அடியேன் !

இருவினைத் துன்பத்தினின்றும் நீங்கிய திருப்புறத்தொண்டரும், திருவாதனூரில் வசித்தவரும் நீசத்தன்மை நீங்கிச் சிவனருள் பெற்றவரும் மேன்மையான நெருப்பினின்றும் முக்தி சிரேஷ்டராய் விளங்கியவருமான திருநாளைப் போவார் நாயனார்க்கும் அடியேன் !

காஞ்சிபுரத்தில் சிவபக்தர்களது ஆடைகளை வெளுத்துக் காய வைக்கும் பொருட்டு துவைக்கும்போது, விடாமழை பெய்ததால் துணிவெளுக்கும் பாறையில் தன் தலையை மோதிக் கொண்டு சிவானுக்கிரகத்தைப் பெற்ற திருக்குறிப்புத் தொண்ட நாயனார்க்கும் அடியேன் !

நம்மை அடிமையாகக் கொண்ட சிவபெருமானது பூஜையைக் கெடுத்தானே என்று, தன் பிதாவினது இரண்டு கால்களையும் வெட்டி, சிவபெருமான் கொன்றைமாலையைப் பிரகாசமாகப் பெற்றுக்கொள்வாய் என்று அருளிச் செய்ய, அதனைப் பெற்றவராகிய, திருச் சேய்ஞ்ஞாரில் அவதரித்த சண்டேச நாயனார்க்கும் அடியேன்!



கல்லானது தெப்பமாக மிதக்க, விஷமானது அமிர்தமாக கொல்லவந்த கொடிய யானை வணங்க, திருமறைக் காட்டில் மூடப்பட்ட வலிமை மிகுந்த கபாடமானது திறக்கவும் சூட்டினால் பொசுக்கும் சுண்ணாம்பு நீற்றறையும் குலைநோயும் குளிர்ந்தொழியவும், அஞ்ஞான அந்தகாரமாகிய ஜன்ம துக்கம் ஒழியவும் மேன்மை பொருந்திய வீரட்டானேசுவரருக்குத் தொண்டராகியவரும், திருவாமூர் என்ற ஸ்தலத்தில் அவதரித்தவருமான திருநாவுக்கரசு சுவாமிகளுக்கும் அடியேன்!

மேன்மை மிக்க பாண்டிய மன்னருக்கு முதல் அமைச்சரானவரும், சமணர்களை கழுமரங்களில் ஏற்றியவரும், குறுநில மன்னர் குலத்தில் பிறந்தவரும் திருமணமேற்குடி என்ற தலத்தின் தலைவருமான குலச்சிறை நாயனார்க்கும் அடியேன்!

விரும்பிச் செய்கின்ற சிறந்த சிவ ராஜயோகத்தை எப்போதும் பயின்று பிரத்யக்ஷத்தால் அறிந்து, திருப்பெருமிழலை என்ற ஸ்தலத்தில் வாழ்ந்த குறும்ப நாயனார்க்கும் அடியேன் !

சிறந்ததொரு மாங்கனியைச் சிவ வேடத்தாருக்குப் படைத்துவிட்டு, சிவபெருமான் வீற்றிருக்கும் திருக்கயிலாயத்துக்குத் தன் தலையாலேயே நடந்தவரும், சிவபெருமானே அன்புடன் 'எமது அம்மை' என்றழைக்கப் பெற்றவருமான காரைக்காலம்மையார்க்கும் அடியேன் ! அடிவற்ற திருநாவுக்கரசு சுவாமிகளின் பெயரால் குளுமைதரும் தண்ணீர்ப் பந்தலையும் வேறு பல தர்மங்களையும் செய்த, திருத்திங்களூர் வேதியர் தலைவராகிய அப்பூதியடிகளார்க்கும் அடியேன் !



தமது திருமேனியின்மீது சிலந்திப் பூச்சியொன்று மேலேயிருந்து வழுவி விழுதலும் அப்போது உனது மனைவியானவள் வந்து ஊதித் துமிந்ததனுல், அந்தச் சிலந்திக் கொப்புளத்தால் உண்டாகிய நோய் போயிற்று என்ற மொழியினை, சிவபெருமானிடத்திருந்தே பெற்றவரும் திருச்சாத்தமங்கை என்ற தலத்தில் வாழ்ந்தவருமாகிய திருநீலநக்க நாயனார்க்கும் அடியேன் !

திருவேமாப்பேரூரில் அவதரித்தவரும் திருவாரூர் தியாகராசப் பெருமானுக்கு ஏற்றுதற்குரிய திருவிளக்கு நெய்க்கு இடையூறு செய்த கொடிய சமணர்களை ஜெயித்து, நல்ல தண்ணீரினுல் திருவிளக்கேற்றிய கள்ளங்கபடமில்லாத நமிநந்தியடிகளுயனார்க்கும் அடியேன் !

உலகத்தார் செழிப்படையவும், சமணர்கள் ஆற்றல் அழியவும் அவதரித்து, செந்தமிழ்ப் பதிகங்களைப் பாடுவதற்கென உமாதேவியாரின் திருமுலைப்பாலைப் பருகி, சீர்காழியில் வீற்றிருக்கும் திருத்தோணியப்பரைப் போற்றி, எலும்பைப் பெண்ணுக்கியும், முற்காலத்தில் திறக்கப்பட்டிருந்த கபாடத்தை மூடியும், பாலை நிலம் நெய்தல் நிலமாகவும், சர்ப்பம் சாகவும், மதத்தால் கர்வித்த புற சமயவாதிகள் அழிய இடி

விழவும் திருப்பதிகங்களைப் பாடியருளிய திருஞான சம்பந்த சுவாமிகளுக்கும் அடியேன் !




"எமது மூதாதையருக்கெல்லாம் தலைவராகிய சிவபெருமான் தடுத்தாட் கொண்டு அருளிய சுந்தரனே நமக்கு உண்டாகிய சூலை நோயைத் தீர்க்கவல்லவன்?" என்று தமது வாளையுருவித் தமது வயிற்றைக் குத்திக் கிழித்தவரான திருப்பெரு மங்கல ஏயர்கோன் கலிக்காம நாயனார்க்கும் அடியேன் !

திருச்சாத்தனூரில் வாழ்ந்திருந்து, மாண்டுபோன இடையனது உடம்பிற் புகுந்து, தந்தையாகிய சிவபெருமானுக்குச் சதுர்வேத விதிப்படி தொன்மையான செந்தமிழ்ப் பாடல்கள் மூவாயிரம் பாடியருளிய ஜீவன்முக்தரான திருமூல நாயனார்க்கும் அடியேன் !

பிறந்தபோதே கண்கள் இல்லாமல் கயிற்றையே அடையாளமாகக் கொண்டு, சிவபெருமானுக்குத் திருக்குளம் பெருக்கக் கட்டும்போது கொடிய சமணர்கள் பொருமையினல் அவமதித்துத் தங்களுடைய கண்கள் கெடவும் தான் தனக்கில்லாதிருந்த கண்களைச் சிவானுக்கிரகத்தால் பெற்றுக் கொண்ட திருவாரூர் தண்டியடிகளரையனர்க்கும் அடியேன்!

அழகிய வயல்களால் சூழ்ந்த திருவேற்காடு என்னும் ஸ்தலத்திற்குத் தலைவனும் தாம் ஆடுகின்ற சூதாட்டத்தில் பணத்தைச் சம்பாதித்து, அப்படிக் கிடைத்நதை யெல்லாம் திருக்குடந்தை சிவபக்தர்களுக்கு உதவி செய்து, அன்னமளித்த மூர்க்க நாயனர்க்கும் அடியேன்!

ஸ்ரீபஞ்சாக்ஷர மஹாமந்திரத்தைச் செபித்ததன்றி வேறென்றையும் ஜெபிக்காதவரும் திருவம்பர் என்ற திருத்தலத்தில் அவதரித்த பிராமணரும், தமது யாகங்களுக்குச் சிவபெருமான் மனமகிழ்ந்து எழுந்தருளப் பெற்ற பக்தருமான சோமாசி மாற நாயனர்க்கும் அடியேன்!

காஞ்சிபுரத்தில் ஒரு வெள்ளிடையிலிருந்த சிவசிங்கத்தின்மீது செங்கற்களை அன்புடன் எறிந்து, அடைக்கலம் என்று சரணடைந்தவரும், திருச்சங்க மங்கை என்ற திருத்தலத்தில் அவதரித்தவருமான சாக்கிய நாயனரது அடியார்க்கும் அடியேன்!

விபூதி, ருத்துராக்ஷங்களாகிய சிவச் சின்னங்கள் தாரணஞ் செய்கின்ற சிவனடியார்களையே ஆராதிக்கும் மனத்தையுடையவரும் பிராமண குலத்தில் பிறந்தவரும் திருவாக்கூர் என்ற திருத்தலத்தின் தலைவனும் சிறந்த சிவனருட் செல்வனுமாகிய சிறப்புலி நாயனர்க்கும் அடியேன்!

மூலகாரணரும் தந்தையுமாகிய சிவபெருமானுக்கு கனியமுதாகத் தன் பிள்ளையையே சமைத்து சிவபெருமான் அழைப்பாய் என்று கட்டளையிட, அவனை அன்புடன் அழைத்துச் சிவனருளைப் பெற்ற திருச்செங்காட்டாங்குடியின் தலைவரான சிறுத்தொண்ட நாயனர்க்கு அடியேன்!

தான் பார்த்த ஒரு வண்ணனின் உடல்மீது படிந்திருந்த உவர் மண்ணைத் திருநீராகவும் அவனைச் சிவனடியாராகவும் எண்ணி வணங்க, நான் வண்ணன் என்று அவன் வணங்க, அவனது நற்குணத்தைக் கொண்டாடி, நான் அடிச்சேரன் என்று வணங்கியவரும் திருவஞ்சைக்களம் என்னும் தலைவனும், சொன்னவற்றை உணர வல்லவரும் சிவபெருமானை நாள்தோறும் பூஜித்து,

பூஜை முடிவில் சிவபெருமானது திருநடனத்தை நாள்தோறும் காண்கின்ற பாக்கியத்தைப் பெற்றவரும் சிவபெருமான் அருளிய திருமுகத்தைப் பாணபத்திரரால் பெற்றுச் சிறந்த சிவபக்த செம்மலாகவும் அரசராகவும் விளங்கிய சேரமான் பெருமாள் நாயனூர்க்கும் அடியேன்!

பாபங்களினின்று நீங்கிய பக்தர்கள் செய்வதற்குரிய பணிவிடைகள் யாவற்றையும் கற்பித்துப் பயில்வித்துச் சிவகணநாதத் தலைவர் என்ற பெருமையை அடைந்தவரும், சீகாழிக்குத் தலைவருமாகிய சிவகணநாத நாயனூர்க்கும் அடியேன். சிவபெருமானது திருவடிகளை உலகத்தை ஆள்வதற்குரிய மகுடமாகச் சூட்டிக் கொண்டு, அவரது திருவருளை நல்ல மனத்தால் சிந்தித்ததனால் உலகத்தை நெடுங்காலம் அரசு செய்த திருக்களந்தை கூற்றுவ நாயனூர் அடியார்க்கும் அடியேன்!

செந்தமிழ் வளர்த்த மதுரையில் சங்கப் பலகையை அடைந்து, புகழ்பெற்ற சொக்கலிங்கப் பெருமாள்மீது செவிக்கினிய செந்தமிழ்ப் பாடல்களை உணர்ச்சி மிகுந்த அன்புடன் பாடியவராகிய பொய்யடிமை யில்லாத புலவர்களுக்கும் அடியேன். 'கொடிய யானையையும் அடியேனையும் கொன்றுவிடு!' என்று வாளாயுதத்தைக் கொடுத்துச் சிறந்த ஒரு சடையிருக்கக் கண்டு, அவ்வபட்ட தலையின் பொருட்டு, மேன்மையான நெருப்பிற் குதித்துச் சிவானுக்கிரகத்தை யடைந்தவரான திருக்கூடுவைப் புகழ்ச்சோழ நாயனூருடைய அடியார்க்கும் அடியேன்!

அனுக்கிரஹம் செய்யும் சிவவேடத்தாருக்கு நூறு பொன் தருபவரும், அன்ன நடை மாதர் இன்பத்துக்கு இலக்காக வைத்திருக்கின்ற சரீரத்தையுடைய தூர்த்தருக்கு இரண்டத்தனைப் பொன்னைக் கொடுப்பவருமாகிய நரசிங்க முனையரைய நாயனூரின் அடியார்க்கும் அடியேன்!

கருங்கடலில் மீன்கள் அகப்பட்டால், அதில் உள்ள ஒரு தலை மீனை சிவபெருமானுக்கென்றே கடலில் விட்டுவிடுபவரும், வறுமையடைந்த காலத்தில் பொன்மயமான ஒரே மீன் வலையில் அகப்பட அதனையும் தன் வழக்கப்படி கடலிற் போக விட்டுவிட்டு சிவனருளை அடைந்தவரும், திருநாகையில் வாழ்ந்தவருமான அதிபத்த நாயனூருக்கும் அடியேன்.

தனது பணிவிடைக்காரன் வஞ்சகமாகச் சிவனடியார் திருவேடத்துடன் வர, அவனது திருவடிகளைக் கழுவும் பொருட்டு ஜலம் விடுகின்றபோது, சிவனடியார் வேடத்தில் வந்தது தமது வேலைக்காரன் என்று மனைவியானவள் சுட்டிக் காட்டவும் உடனே கையை வெட்ட வல்லவரும் திருப்பெண்ணுகடம் என்

திருத்தலத்தில் அவதரித்தவருமாகிய கலிக்கம்ப நாயனுர்க்கும் அடியேன்.

தேவநாயகராகிய சிவபெருமானுக்கு அலங்காரமான திரு விளக்குகளை உள்ளும் புறமும் ஏற்றுவதற்குரிய பொருள் இல்லாமல், கூலிக்குச் செக்கை ஓட்டிக் கழுத்தை அறுத்து, ஒளி விளக்குகளை ஏற்றி வைத்து, மேன்மையாகிய சிவானுக்ரகத்தை யடைந்தவரும் திருவொற்றியூர் என்ற திருத்தலத்தில் அவதரித்தவருமான கலியநாயனுர்க்கும் அடியேன்!

யாராவது தமக்கெதிரே சிவனடியார்களை அவமதிப்பார்களாயின், தானே மூன் சென்று அவர்களது நாக்களை அவ்விடத்திலேயே அறுக்க வல்லவரும் புகழும் அழகும் பொருந்திய திருவிரிஞ்சை என்ற திருத்தலத்தில் அவதரித்தவரும் புகழ் பெற்றவருமாகிய சத்தி நாயனுர்க்கும் அடியேன்! சிவஸ்தலங்களுக் கெல்லாம் குற்ற மற்ற ஒவ்வொரு வெண்பாவைப் பாடியவரும், சிறந்த சிவபக்தருமான ஐயடிகள் காடவர் கோன் நாயனுருடைய திருத்தொண்டர்க்கும் அடியேன்,

திருவிருக்கு வேளுர் என்ற திருத்தலத்தில் வாழ்ந்து, வறுமையை அடைந்து, சிதம்பரம் சென்று, அங்கு அனுக்கிரகம் செய்யா நின்ற திருப்புலீச்சரம் என்ற திருக் கோயிலில் வீற்றிருக்கின்ற சிவபெருமானுக்குக் கணம் புல்லினுலும் மயிர் முடியினுலும் திருவிளக்கேற்றிய கணம் புல்ல நாயனுர்க்கும் அடியேன்!

சொல்விளங்க, பொருள் மறைந்து கிடக்கும்படித் தன் பெயராலேயே தமிழ்க் கோவை பாடி, சிவபெருமானது மேன்மையான ஸ்ரீ மஹாகைலாசத்தைச் சேர்ந்தவரும் திருக்கடவூரில் அவதரித்தவருமாகிய காரி நாயனுர்க்கும் அடியேன்!

திருஞான சம்பந்த சுவாமிகளை எதிர்த்து வாதில் போரிட்டுத் தோற்றுப் போனசமணர்களைக் கொடிய கழுமரத்தில் ஏற்றிய நின்ற சீர் நெடுமாறர் என்ற பாண்டியர், திரு நெல்வேலிப் போர்க்களத்தில் போரிட்டு வென்றவர் அத்தகைய நின்றசீர் நெடுமாற நாயனுர்க்கும் அடியேன்!

இருதய கமலத்தையே நித்யாலயமாகவும் ஞானத்தையே திருவிளக்காகவும் தன்னையே புஷ்பமாகவும் கொண்டு, யாவரும் விரும்புதற்குரிய ஞான பூஜையை அன்புடன் செய்து சிவபெருமானை வணங்கியவரும் திருமயிலாப்பூரில் வாழ்ந்தவருமான வாயிலார் நாயனுர்க்கும் அடியேன்!

பகைவர்களிடம் போர் செய்து அவர்களை வெல்வதற்குரிய வகையினை உணராதவர்கள் கொடுக்கின்ற கூலிப்பணத்தைப்

பெற்று அந்தப் பகைவர்களை வென்று, அப்பொருள்களை எல்லாம் சிவனடியார்களுக்கே கொடுத்தவரும் திருநீடூரில் வாழ்ந்தவருமான முனையடுவார் நாயனார்க்கும் அடியேன்!

உமாதேவியின் நாதனும், திருவாரூரில் எழுந்தருளி யிருப்பவருமாகிய வன்மீக நாதருக்காக பறித்த அன்றலர்ந்த நன்மலரை, முகர்ந்து விட்டாளே என்ற குற்றத்துக்காகத் தன் மனைவியின் மூக்கை சிவ வேடத்தாராகிய செருத்துணை நாயனார் அறுக்கவும், அந்த மலரை எடுத்த குற்றத்துக்காக தாமே அவளது கையையும் அறுத்தவராகிய கழற்சிங்க நாயனார்க்கும் அடியேன்!

உலகம் திகைத்தற்குரிய கொடிய பஞ்ச காலத்தில் உண்மைச் சிவனடியாருக்காக. நெல்லைத் திருடிய அன்பர், உண்மை பேசியதற்காக, "எனது மேலான பொருள்கள் யாவும் சொந்தமாய் விட்டதாகையால் வேண்டிய வரையில் எடுத்துக் கொண்டு போகலாம்!" என்று பறைசாற்று வித்தவரான திருவிருக்கு வேளூர் இடங்கழி நாயனார்க்கும் அடியேன்!

மேன்மை பொருந்திய அரசரான. கழற்சிங்க நாயனாரின் மனைவியானவள், சிவபெருமானுக்குரிய மலரை முகர்ந்தாள் என்று கோபங்கொண்டு, அவளுடைய மூக்கைத் துணிந்து அறுத்தவரும், தஞ்சையரசருமாகிய செருத்துணை நாயனார்க்கும் அடியேன்!

அழகிய சோலைகள் சூழ்ந்த திருச் செருவிலிபுத்தூரில் அவதரித்த ஆதிசைவ குலத்தவரும், பஞ்சத்தால் உடல் இளைக்க, நாள்தோறும் வழக்கப்படி திருமஞ்சனஞ் செய்வதுபோல் ஒரு நாள் திருமஞ்சனாபிஷேகம் செய்யும் போது உடல் பலவீனத்தால், தன் கையிலிருந்த நீர்க்குடம் சிவபெருமானின் திருமுடி மீது விழுந்துவிடவும், சிவபெருமானால் நித்தம் ஒரு பொற்காசு பெற்றுக் கொண்டவருமான புகழ்துணை நாயனார்க்கும் அடியேன்!

சிவபெருமானது திருவமுதின் பொருட்டு ஆணையிட்டுப் போயிருந்த நெல்லை, உண்ண வுடன்பட்டவரரகிய உறவினரையும் மகனையும் தன் வாளாயுதத்தினால் வெட்டியவரான திரு நாட்டியத்தான் குடியின் அரசராகிய கோட்புலி நாயனாரது அடியார்க்கும் அடியேன்!

சிவனடியார்களையும் சிவபெருமானையும் வேற்றுமை பாராட்டாமல் அர்ச்சனை செய்து, அன்புடன் பணிகின்ற பக்தர்களாகிய பெரியோர்களுக்கும் அடியேன்!

பிரம்மாதி தேவர்களை விட்டுப் பதியாகிய சிவபெருமானது மகிமையை வேதாகம, புராண, இதிகாச விதிப்படி, உள்ளது உள்ளபடி ஆராய்ந்தறிந்து, அந்தச் சிவபெருமானது திருவடிகளையே மெய்யன்புடன் பாடும் தொண்டர்களாக இருக்கின்ற பெரியோர்க்கும் அடியேன்! சிவபெருமானையே சித்தத்தில் பதிய வைத்திருக்கிற அடியார்களுக்கும் அடியேன்! நிர்மலனாகிய சிவபெருமான் வீற்றிருக்கும் திருவாரூர் என்ற திருத்தலத்தில் பூர்வ ஜன்ம புண்ணியத்தால் பிறந்திருக்கும் பெரியோர்க்கும் அடியேன்! சிவலிங்கப் பெருமானது திருமேனியை மூன்று காலமும் அர்ச்சனை செய்கின்ற பெரியோருக்கும் அடியேன்! சிவாகம விதிப்படி ஒழுங்காக முழு நீறு பூசிய திருமேனியை உடைய முனிவர்களுக்கும் அடியேன்! நிகரற்ற பக்தர்களாய், சிவபெருமானது திருவடிகளையே முக்காலமும் சரணடைந்தவர்களான மெய்யடியார்க்கும் அடியேன்!

மேகத்தைப் போன்ற கறுத்த ஸ்ரீ கண்டத்தையுடையவராகிய சிவபெருமான் வீற்றிருக்கும் பொருட்டு, ஒரு திருவாலயத்தை அன்பு என்னும் மனோபாவனையினால் கட்டி முடித்து, ஹ்ருதய கமலத்தில் வீற்றிருக்கச் செய்து, சிவபெருமானை பூஜித்தவரும் திருநின்றவூர் என்ற திருத்தலத்தில் அவதரித்தவருமான பூசலார் நாயனார்க்கும் அடியேன்!

பெருமை பொருந்திய திருவளக பாரத்தையுடைய உமாதேவியார் அருளிய ஞானப்பாலையை மகிழ்ச்சியாகத் திருஞான சம்பந்த சுவாமிகள் உண்டார் என்று கேட்ட மாத்திரத்தில் இனிமையாகிய முலைப்பால் சுரக்கப்பெற்றவளும் சமணர்களை யொழித்தவளுமாகிய மங்கையர்க்கரசியார்க்கும் அடியேன்!

சிவபக்தர்கள் உடுப்பதற்கான கீளும், கௌபீனமும் நெசவு செய்து கொடுத்து, எமது சிவபெருமான் வீற்றிருக்கும். சிறந்த ஸ்ரீ மஹா கைலாயத்தை யடைந்தவரும் காம்பீலி என்ற திருத்தலத்தில் நெடுநாள் வாழ்ந்தவரும் பத்ம சாலியர் குலத்தில் அவதரித்தவருமான நேச நாயனார்க்கும் அடியேன்!

அன்புடைய மனத்துடன் சிவபெருமானையே சிந்தித்து, மேன்மையான சிலந்திப் பூச்சியாக அவதரித்துத் தனது வாய் நூலினால் சிவலிங்க பெருமான் மீது வெய்யல் படாதவாறு திருத்தட்டியைப் பின்னி, சிவானுக்கிரகத்தால் குற்ற மற்ற அநேக சிவாலயங்களை உண்டாக்கிய கோச் செங்கட் சோழ நாயனார்க்கும் அடியேன்.

அழியாத புகழையுடைய திருவெருக்கத்தம்புலியூரில் வாழ்ந்து, திருஞான சம்பந்த சுவாமிகள் பாடியருளிய தேவாரம்



பாடல்களுக்குத் தமது யாழின் இசையைப் பொருந்தும்படிச் சேர்த்து வாசித்து, சிவபெருமானிடம் சேர்ந்து திருநீலகண்ட யாழ்ப்பாணநாயனுர்க்கும் அடியேன்.

திருநாவலூர் என்ற திருத்தலத்தில் சடையநாயனுர் முற்பிறவியில் செய்த தவப்பயனுல் 'மனைவியாராகிய இசை ஞானியார், சமயாசாரியர் ஆதற்குரிய யோக்யதையடையும் என்ற சுந்தரமூர்த்தி மூர்த்திசுவாமிகள் தோத்திரஞ் செய்தலும், சிறந்த சிவனடியாராகிய விறன் மிண்ட நாயனுர் 'புறம்பில்லை' என்று சொன்னுர்.

'மனத்தில் அகங்காரமானது இவ்விதமாக நிலைபெற்று நின்ற பேர்களுடைய பக்தியை தனக்கு நிகரற்றவனும் சுகத்தையே கொடுப்பவனுமாகிய சிவபெருமான் விரும்ப மாட்டான்" என்று மடிவாலமாச்சையர் சொல்ல, பசவண்ணர் அதைக்கேட்டு, மகிழ்ச்சியுடன் சிவபெருமானைத் துதித்தார்.

கருணை மிகுந்த மடிவால மாச்சையர், அவ்விதம் துதிசெய்த பசவண்ணரையும் மற்ற ஜங்கம மூர்த்திகளையும் போகச் சொல்லிவிட்டு, பிறகு ஜங்கம மூர்த்திகளுடைய ஆடைகளை வெளுத்துக் கொண்டே சிவஸ்தோத்திரம் செய்பவராய், தண்ணீர்த் துறையில் நின்று விட்டார்!

# 29. கின்னரப் பிரமையர் கதை

திருப்பொண்டூர் என்ற திருத்தலத்தில் கின்னரப் பிரமையர் என்ற சிவசரணர் ஒருவர் வாழ்ந்து வந்தார், அவர் அகங்காரம் சிறிதேனும் கொள்ளாதவர், தவசீலர், பரசமய வாதிகள் என்ற பெரிய மலைகளைத் துகளாகச் சாய்க்கும் பேரிடியைப் போன்றவர். உயர்ந்த வீர சைவ குலத்தில் பிறந்தவர், ஜீவகாருண்ய முள்ள வர். ஞானக்கல்வியில் தேர்ந்தவர், சோம்பல் என்பது சற்றும் இல்லாதவர். அவர் பாபத்தினின்றும் நீங்கிய சத்காரியத்தினுலுண்டான தும் பரிசுத்தமானதுமான தமது திரவியங்கள் யாவற்றையும் சிவனடியார் திருக்கூட்டத்தினரை உபசரிப்பதில் செலவிட்டு வந்தார். இதனுல் அவரது பொருட் செல்வம் நீங்கியது. எனவே அவர் நாள்தோறும் சிவபெருமானது திருச்சந்நிதியின் முன்பு கின்னரம் என்ற தமது வீணையை வாசித்துத் துதித்தார்.

அதைக் கேட்டு மகிழ்ந்த சிவபெருமான் "நீ ஒரு பொற்காசினை நித்தமும் பெற்றுக் கொள்வாய்" என்று அருள் செய்தார்! அதன் படியே நாள்தோறும் யாழிசையால் இன்றவனைத் துதித்து அந்தப் பொற்காசைப் பெற்று வந்தார். அதையும் சிவனடியார்க்கு அன்னமளிப்பதிலும் உபசரிப்பதிலுமே செலவிட்டு வந்தார்.

அத்தகைய காலத்தில் பசவண்ணரின் புகழ் கின்னரப் பிரமையரின் செவிகளுக்கு எட்டியது. அவர் பசவண்ணரைக் காண வேண்டும் என்ற நோக்கத்துடன் கல்யாணபுரி என்ற பட்டினத்துக்குச் சென்றுர், அவரைக் கண்டதும் பசவண்ணர் சிவபெருமான் என்றே வணங்கி, விதிப்படி சகல உபசாரங்களையும் செய்தார். கின்னரப் பிரமையர் பசவண்ணரின் திருமடத்திலேயே தங்கித் தத்துவ ஆராய்ச்சிகளைச் செய்து கொண்டிருந்தார்.

ஒருநாள் கல்யாணப் பட்டினத்திலுள்ள திரிபுராந்தகேசுவரர் கோயிலுக்கு கின்னரப் பிரமையர் சென்று உல்லாசமாக இருந்தார். அப்போது ஒரு தூர்த்தன், தன் மனைவியான ஒரு வேசிக்காக ஒரு ஆட்டை வாங்கிக் கொண்டு, அந்தக் கோயிலின் சந்நிதித் தெரு வழியாகச் சென்று கொண்டிருந்தான். அவன் ஓட்டிச் சென்ற ஆடானது வழிதவறிக் கோயிலினுள்ளே சென்றுவிட்டது. அதைப் பின்தொடர்ந்த அந்தத் தூர்த்தன், "அதைப் பிடியுங்கள், பிடியுங்கள்!" என்று கூவிக்கொண்டே கோயிலுக்குள் நுழைந்

தான். ஜீவகாருண்யமுடைய கின்னரப்பிரமையர், அவனைப் பார்த்து, 'தம்பி! இப்போது நீ இந்த ஆட்டைக் கொல்வதற்குக் கொண்டு போவதால் இது பயந்து, நமது சிவபெருமானது திருவாலயத்தில் சரணாகதி அடைந்துவிட்டது. கொலை செய்வதானது ஒரு கொடிய பாபமாகும். விலைக்கு வாங்கிய இதன் கிரையம் என்னவென்று சொல்வாய்.' இந்தத் தொகையை நான் கொடுத்து விடுகிறேன். மேலும் சிவசரணர்கள் தம்மைச் சரணாகதியடைந்த ஜீவப்பிராணிகள் பிழைக்கும்படி அவற்றை ரட்சித்தலே தர்மமாகும். உனக்கும் இந்த ஜீவகாருண்யமாகிய காரியமே மேன்மையாகிய மோக்ஷ சாம்ராஜ்யமாகும். எடுத்த காரியம் ஆகவேண்டும். ஆகையால் உன் மனைவிக்குப் பொருளாகக் கொடுத்து அவளையும் சம்மதிக்கச் செய்வாய். சிறந்த பொன் இரண்டத்தனை கொடுப்போம் பெற்றுக் கொண்டு போவாய்!'' என்று பிரமையர் சொன்னார்.

ஆனால் தூர்த்தன், ''நீங்கள் கொடுக்கும் பொன்னை நான் பெற்றுக் கொள்ள மாட்டேன். அந்த ஆடுதான் எனக்குத் தேவை!'' என்றான்.

உடனே பிரமையர், ''நான் சொன்ன இரண்டத்தனை கிரயத்தையும் தவிர மேலும் இருமடங்கு கிரயத்தை நீ விரும்பினால் அதையும் கொடுக்கிறேன், பெற்றுக்கொள்'' என்றார். பேராசையோடு. ''எனது ஆடு ஆயிரம் பொன் கிரயத்துக்கு வாங்கியது'' என்றான். ஜீவகாருண்யம் நிறைந்த கின்னரப் பிரமையர். அவன் கேட்ட ஆயிரம் பொன்னையும் கொடுத்துவிட்டார், அப்படிக் கொடுத்தும் அவன் அதைப் பெற்றுக் கொண்டான்.

''நான் இந்த ஆட்டை விலைக்கு வாங்கிக் கொண்டேன், நீ சம்மதிப்பாயானால் லிங்க முத்திரையைப் பதியவைப்பேன்.'' பதில் சொல் என்று பிரம்மையர் கேட்டார் அதற்கு தூர்த்தவனும் சம்மதித்தான். பிறகு அவன் கோயிலை விட்டுப் போய்விட்டான், அவன் தெருவழியே போகும்போது யோசிக்கலானான். ''நாம் நமது காதற் கிழத்தியின் வீட்டுக்குப் போகும்போது, நமது ஆடு முன்னாகவும் நாம் பின்னாகவும் போகாவிட்டால் அவள் கோபிப்பாளே'' என்று யோசித்து, ஒரு விலையுயர்ந்த ஆடாகப் பார்த்து விலைக்கு வாங்கிக் கொண்டு அதை ஓட்டிக் கொண்டு போனான.

இந்த விஷயம் அவனது மனைவியான வேசிக்கு எட்டியது. அவன் வீடு வந்ததும், ''என்னையா! நீ என வீட்டிற்கு வெட்கமில்லாமல் வந்துவிட்டாயே! உன் முகத்தை என் கண் எதிரே காண்பிக்காதே! உன் பொருளால்தானே, என் ஜீவனத்துக்கு உபயோகமாக இருக்கிறது? என்னிடம் இருக்கும் பொருளைக் கண்டதில்லையோ? ஊரிலிருக்கிற தூர்த்தர்கள் பின்னும் முன்

னுமாய் தாம்பூலப் பைகளை வைத்துக் கொண்டு அலைகிறார்களே! நீ அவர்களுக்கு நிகராவாயோ? நான் காணும்படி நீ ஏன் இந்த வேலையைச் செய்துவிட்டாய்? என்று அந்த வேசி ஏசினாள். அதற்கு அவன் "இந்த ஆடும் இன்னும் ஆயிரம் பொன்னையும் கொடுத்து மேலும் பல ஆடுகளை வாங்கிவந்து இப்போதே உன்னிடம் கொடுப்பேன். நீ விரதத்தை விசேஷமாக அனுபவிப்பாய்! கோபிக்காதே! இன்னும் கூடுதலான பொருளை நீ கேட்டாலும் நான் கொண்டுவந்து கொடுக்கிறேன்' என்றான். அதற்கு ஆசை நாயகி, "நீ வாங்கிவந்த இந்த முதல் ஆடுதான் எனக்கு வேண்டும் அதைக் கொண்டுதான் எனது விரதத்தைச் செய்வேன். இல்லாவிட்டால் எனது விரதம் நிறைவேறாமற் போய்விடும், என்னைக் குல தெய்வம் கொன்றுவிடும்!" என்றாள்.

அவன் அந்த வேசியின் பேச்சுக்குப் பயந்து பெருங்காமிக்கு அறிவில்லை என்பதுபோல, கின்னரப் பிரம்மையரிடமே சென்றான். சென்றதும் அவரை நோக்கி, "ஐயா, இந்தப் பொன்னை நீங்களே வாங்கிக் கொள்ளுங்கள், அந்த ஆட்டை என்னிடமே விட்டு விடுங்கள்" என்றான்.

அதற்கு அவர், "முன்னமே நாம் அந்த ஆட்டுக்கு லிங்க முத்திரை போட்டுவிட்டோம். நீ ஏன் இங்கு வந்தாய்! நான் அந்த ஆட்டை உன்னிடம் விடமாட்டேன். நீ போய்விடு!" என்றார். அந்த தூர்த்தன் அந்த ஆட்டை பிடித்துச் செல்வதற்காக, அதனிடம் விரைந்து சென்று கிட்டப் போனான்.

கின்னரப் பிரம்மையர் கோபங் கொண்டு, "அடா, இந்தத் தகாத காரியம் செய்யக் காரணம் என்ன? நீ இந்த ஆட்டைப் பிடிப்பாயாயின் பசவண்ணர் மேல் ஆணை! நீ அற்பன்; போய்விடு! போய்விடு!" என்று சொன்னார். ஆனால் துர்த்தன் அவரது பேச்சை மதிக்காமல் அந்த ஆட்டைப் பிடிக்க முன் சென்றான்.

உடனே அவர், "லிங்க முத்திரையிட்ட இதைத் தொடுவாயானால், என் கையாலேயே உன் தலையைச் சீவி விடுவேன். உண்மை. நான் எதற்கும் அஞ்சமாட்டேன். பயம் என்பதேயில்லாத சிவபக்தர்களைச் சரணாகதியாக அடைந்த தீனர்களுக்கு அந்தச் சிவபக்தர்கள் வயிரக்குப்பாயம் போன்று இருப்பார்கள்!" என்று சொல்லி, விரைந்து சென்று, அவனது சிரத்தை தமது வாளால் வெட்டிவிட்டு ஆர வாரித்தார். வெட்டுண்ட வேகத்தில் அவனது தலையானது பரிசுத்தமாக இருந்த சிவபெருமானது சந்நிதானத்தில் விழுவது அநுசிதம் என்று கருதிய பிரம்மையர், அந்தச் சண்டாளனது சடலத்தையும் தலையையும் அந்தத் திருவாலயத்தின் மதிற்சுவருக்கு அப்பால் வீசி எறிந்து விட்டார்!

பிறகு, செத்தவனுடைய உறவினர்கள் அவனது பிணத்தைத் தூக்கிக் கொண்டு விஜ்ஜலராஜனின் அரசவைக்குச் சென்று, அவன் முன்பு வைத்து "செங்கோல் ஓச்சுகின்ற அரசனே! நாங்கள் சொல்வதில் பிழையில்லை: சிவன் கோவிலிற் புகுந்த ஆட்டைப் பின் தொடர்ந்து சென்ற எங்கள் உறவினனை, கின்னரைப் பிரம்மையர் கொலைசெய்து விட்டார்!" என்று பிராது செய்தார்கள்.

அதைக் கேட்ட விஜ்ஜல மன்னன், அருகிலிருந்த பசவண்ணரை நோக்கி, "ஐயா! சிவபெருமானின் சிறந்த பக்தர்கள் மனிதர்களுக்கு குற்றஞ் செய்யாதவரைக் சொல்வதோ பெருமையாகும்? அப்படியானால் நீங்களும் உமது சிவபக்தர்களுமே சுகமாக வாழவேண்டுமோ? நம்மைக் கண்டிப்பவர்கள் யார்; நமக்கு நிகர் நாமே என்று நீங்கள் உம்மையே மெச்சிக்கொண்டு இத்தகைய தகாத காரியங்களைச் செய்ய அனுமதிப்பது முறையாகுமா? ஆட்டின் சொந்தக்காரனுடைய ஆட்டை நியாயத்தின்படிக் கொண்டு போகக் கடவை யென்று விட்டுவிடாமல் அவனைக் கோபத்தால் கொலை செய்த பரம துஷ்டனை ஜங்கம மூர்த்திகள் என்று நீங்கள் அவனைப் பார்க்காமலே நினைப்பது பெரிய தவறல்லவா?

"காலினால் சிவபெருமானை 'உதைப்பதும்' இறைச்சியை மிகுதியாக அவருக்கு ஊட்டுவதும், தர்மமல்லாமல் பெற்ற தந்தையைக் கொல்வதும், மனைவியை ஜங்கம மூர்த்திகளுக்குக் கொடுப்பதும் உயர்குலத்தார் தாழ்ந்த குலத்தார் வீட்டில் உணவருந்துவதும், கற்களைக் கொண்டு சிவபெருமான் மீது அடிப்பதுமாகிய இவைகள் தான் சிவபக்தர்கள் செய்யும் சிறந்த புண்ணியச் செயல்களோ? நீங்கள் வாக்கால் புண்ணியத்தைப் பேசிவிட்டுச் செயலால் பாபங்களைச் செய்யலாகுமோ? இப்படியெல்லாம் நீங்கள் செய்வதால், நான் இந்த நாட்டை எப்படித்தான் அமைதியாக ஆளமுடியும்? நானே உமது பராக்கிரமத்திற்கு பயந்து இருப்பது? அதைவிட நீரே இந்த அரசாட்சியை ஏற்று நடத்தலாமே!" என்றான்.

அதற்குப் பசவண்ணர், "விஜ்ஜல மன்னனே! தவச்சீலரான கின்னரைப் பிரம்மையரைப் பற்றி நீயறியாதவன். அதனால்தான் இத்தகைய தகாத வார்த்தைகளைப் பேசுகிறாய்? அவர் உலகத்தாரைப்போல அவசரப்பட்டு எதையும் செய்திருக்க மாட்டார். ஆகையால் எதையும் தீர விசாரித்து தீர்ப்பு வழங்குவதே உனது கடமையாகும். மேலும் சிவபெருமானிடம் பக்திமிக்கவரும் சிறந்த சிவனடியாருமான கின்னரப்பிரம்மையரின் பெருமை உனக்குத் தெரியாது. அவர் என்ன சிறுவரா? அவர் குற்றத்தைப் பார்த்து

யோசித்திராமல் கொன்றிருக்கமாட்டார். ஆகையால் தக்க தூதர் களை அவர் இருக்குமிடத்திற்கு அனுப்பித் தெரிந்து கொண்டு, அதன்பிறகு எதையும் செய்வாயாக!'' என்று சொன்னர்.

விஜ்லராஜன், ஆராயாமல் குறைகூறிய தன் பிழையை உணர்ந்து, தன் தூதர்களை அனுப்பிவைத்தான்.

அத்தூதர்கள். கின்னரப்பிரம்மையர் இருந்த சிவபெருமானின் திருக்கோயிலுக்குச் சென்று, கின்னரப்பிரம்மையரின் திருவடி களில் சாஷ்டாங்கமாகப் பணிந்து, எழுந்து ''ஐயனே! யாவராலும் காண்பதற்கரிய ஜங்கம மூர்த்திகளே! அற்பன்மீது கோபித்து, இந்தக் குற்றத்தை செய்ததற்குக் காரணம் என்ன?' என்று ஒருபுற மாக ஒதுங்கி நின்று கேட்டார்கள்.

அதற்குக் கின்னரப்பிரம்மையர் உள்ளதை உள்ளபடி விவர மாக எடுத்துரைத்தார். பிறகு அவர் முடிவாக, ''இந்தச் செய் திக்கு இந்தக் கோயிலில் குடி கொண்ட திரிபுராந்தகேஸ்வானே மேலானசாக்ஷியாவான். அவனைக் கொண்டே இரவுதைச் சொல்லச் செய்வேன். உங்கள் அரசன் எதையும் விசாரித்து அறிந்து தீர்ப் புச் செய்யவல்லவராயின் அவரிடம், போய்ச் சொல்லுங்கள்!'' என்றுர். தூதர்கள், அரசனிடம் சென்று முறையிட்டனர். அதைக் கேட்டதும் அரசன் மிகவும் கோபங்கொண்டு தன் பரிவாரங் களுடன் திருக்கோயிலுக்குச் சென்ருன். அவனுடன் பசவண்ண ரும் சென்ருர்.

பசவண்ணர், சின்னரப் பிரம்மையரின் திருவடிகளைப் பணிந் தார். பரிவாரங்களும் கல்யாணபுரத்துப் பொதுமக்களும் கோயிலி னுள்ளே சென்ருர்கள். சிவபக்தர்கள், கின்னரப் பிரம்மையரின் பக்திப் பிரபாவத்தை அறிந்தவர்களாக இருந்ததால், எல்லோரும் அவரைப் போற்றினுர்கள் ''மன்னன் விஜ்ஜலனே கின்னரபிரம் மையனை நோக்கி, ''ஐயரே! எங்கே உமது திரிபுராந்த கேஸ் வரரைச் சாட்சி சொல்லச் சொல்லும்!'' என்று கட்டளை யிட்டான் அப்போது பூட்டியிருந்த கர்ப்பக் கிரகத்தின் கதவுகளிலிருக்கின்ற ஓட்டை வழியாக உற்றுப் பார்த்தார். உடனே, அந்தக் கதவுகள் ஓசைமிகும்படித் திறந்து கொண்டன.

கின்னரப் பிரமையரின் சிவபக்திப் பெருமையால், சிவன் கோயிற்கதவுகள் தாமாகத் திறந்துகொண்டன. அப்போது திரி புராந்த கேஸ்வரன் சாட்சி சொல்வாளு என்று பொதுமக்களும் பக்தர்களும் திகைத்து நின்ருர்கள்.

கின்னரப் பிரம்மையர் சந்நிதிமுன் சென்று ''ஐயனே! மேன்மையுடைய தாசமையர் பொருட்டு எறும்பினைப்பேச வைத்

தாய்! பாலூர் பொம்மையர் பேசு என்று சொன்னதுமே பேசினே. இந்த உலகத்தாருக்கு எதிரே, அடியே எனக்கு அவ்விதமாகவே சாட்சி சொல்வாயாக' என்று கூறிவிட்டுத் தம் கைவாளை விரித்து நின்று ஆரவாரஞ் செய்தார். அந்தப் பெருமுழக்கம் திரிலோகங் களும் செவிடுபடும்படி முழங்கியது. ஒருநாழிகை வரை இதுபோலப் பெருமுழக்கம் ஒலித்ததால், விஜ்ஜலராஜனும், மற்றும் அங்கு வந் திருந்த பலரும் மூர்ச்சையடைந்தனர்கள். சிவனடியார்கள் மூர்ச்சை யாகாமல் இருந்தார்கள்.

பசவண்ணர், சின்னரப் பிரம்மையரை வணங்கி, "ஜங்கம மூர்த்திகளுக்கு மிகவும் அன்புள்ளவனே! அகங்காரி மற்றவரே! கற்பக விருக்ஷம் போன்ற திருக்கைகளையுடையவரே! ஞானசிரி யரே!" என்று துதித்தார். கின்னரப் பிரம்மையர், திரி புராந்தகேஸ்வரரை தியானிக்கிற அன்புடன் பார்த்து "ஓசை நிற்க!" என்று சொல்லியருளினர். உடனே, அந்த ஓசை நின்றது.

மயங்கி யிருந்தவர்கள் மயக்கம் நீங்கி எழுந்து, தெளிந் தார்கள். விஜ்ஜலமன்னன் மயக்கம் தெளிந்து எழுந்ததும். ஜங் கம மூர்த்திகளாகிய கின்னரப்பிரம்மையரை வணங்கி, "பக்தியின் ஸ்வருபமே! ஓலம். மூடர்களின் குற்றங்களை மன்னிப்பீராக, திரி புராந்தகேஸ்வரன் உமது சொல்லைக்கேட்டுச் சாட்சி சொல்வார வென்று கேட்டதற்கு அவரே காட்சி சொல்லிவிட்டார். உலகத்தார் மூர்ச்சை யடைந்ததும், நீர் கிருபை கூர்ந்து வேண்டாம் என்று சொன்னதும் ஓசையை அடக்கினர். உமது பேரருளினல் நாங்கள் பிழைத்து எழுந்தோம்", என்று தோத்திரம் செய்தான்.

கின்னரப் பிரம்மையர், அந்த விஜ்ஜல மன்னனை நோக்கி, "நீ பினாகம் என்ற வில்லையுடைய சிவபெருமானுக்கு அன்பு செய்து மோக்ஷமடைவாயாக!" என்ருர்.

உடனே, சிவபெருமானது அருளால் தலையும் போய் பிராண னும் போய் இருந்த தூர்த்தன் உயிர்பெற்று எழுந்தான். விஜ்ஜல மன்னன் மகிழ்ந்தான். கின்னரப் பிரம்மையரை வணங்கி விட்டு யாவரும் தமதிருப்பிடம் சென்றனர்.

## 30. கலைக்கேத்த பிரமையர் கதை

கல்யாணபுரியில் கலைக்கேத்த பிரமையர் என்ற சிவபக்தர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் ஞானநூல்களைக் கற்றுணர்ந்தவர்களால் பெரிதும் மதிக்கப்பட்ட பெருமையுடையவர். ஜங்கம மூர்த்திகளையே சிவபெருமான் என்று மதிப்பவர். அவர் உலக ஆசாரத்தை மதிக்காத மேன்மையாளர். கல்லையும் ரத்தினத்தையும் பொன்னையும் மண்ணையும் சமமாக மதிப்பவர். சலனமற்ற அந்த மாயையைக் கடந்தவர். அவர் தன் தலையின் முன் குடுமியைக் கட்டி திருவெண்ணீற்றினை நெற்றியில் தரித்து, அதன்மீது அழகிய மைப்பொட்டு வைத்து, செவிகளில் சிவப்பு மலர்களை அணிந்து, இடையிலே கரிய ஆடையை அணிந்து, ஒருகாலில் சலங்கைகளையும் ஒரு காலில் சிலம்பையும் அணிந்திருப்பார். ஒரு கையில் மான் கொம்பையும் மறுகையில் ஒருமரத்தடியையும் ஏந்தியிருப்பார்.

அவர், "சிவனடியார் திருக்கூட்டத்தை நாடி, நடனஞ் செய்ய வல்ல பிருங்கி முனிவன் வந்திருக்கிறான். திருவெண்காட்டு நங்கை ஈன்ற மகன் வந்திருக்கிறான். என்று சிவனடியாரின் திருமடங்களுக்குச் சென்று முகஜாடைகாட்டி, கைத்தடியின் மீது மான் கொம்பைத் தட்டி, நடனம் ஆடுவார். அவ்வப்போது சிவபெருமானது திருவிளையாடல்களைப்பாடி, நடனஞ் செய்வார். அவர், இல்லறத்தார் வாழும் இடங்களுக்குச் சென்று, "தாய்மார்களே!" என்று அழைத்து, அவர்கள் கொடுக்கின்ற பிக்ஷை குறைவாயினும் அதிகமாயினும் அதை மகிழ்ச்சியுடன் ஏற்பார். யாசகத்தின் மூலம் தமக்குக்கிடைக்கும் காய்கறிகள், தானியங்கள் ஆகியவற்றைச் சமையல் செய்து, சிவனடியார்களுக்கு நாள் தோறும் அன்னமளித்து வந்தார்.

இப்படி அவர் வாழ்ந்துவந்த அந்தக் காலத்தில் ஒரு சிவபக்தன், கின்னரப் பிரம்மையாரை அண்டிப்பிழைப்போம் என்று எண்ணி வந்து, இந்தக் கலைக்கேத்த பிரமையரது வீட்டில் தங்கியிருந்தான். ஒருநாள், அவர் அவனைப் பார்த்து, "நீ ஏன் இப்படி உடல் மெலிந்து காணப்படுகிறாய்? காரணம் என்ன?" என்று கேட்டார்.

அதற்கு வறிஞன், "முன்பொரு காலத்தில் சிவபெருமான், சுந்தர மூர்த்தியின் சம்பாதனைக்குரிய பொருளைத் தந்தருள்வான் என்று சொல்வார்கள். இப்பொழுது கின்னரப் பிரமையருக்கு சிவபெருமான் நாள்தோறும் பொருள்தருகிருர் என்று ஊரிலுள்ள வர்கள் எல்லோரும் சொன்னூர்கள். அந்தச் சொல்லைக் கேட்ட வுடன் எனது தீராத வறுமையை. அவரிடம் சென்று ஒழித்துக் கொள்ளலாம் என்ற ஆசையோடு வந்தேன். அவருடைய திரு மடம் எங்கே இருக்கிறது? அவ்விடம் சென்று அந்தப் பெரியா ரைத் தரிசித்தால் என் வறுமை நீங்கும் என்று நம்புகிறேன்" என்ருன்.

கலைக்கேற்ற பிரம்மையர் மகிழ்ந்து, "இனிமேல் அவனைப் பற்றிப் பேசாதே! சதாகாலமும் சிவபெருமான் சம்பளம் கொடுத் தலும் அவன் வீணை வாசிப்பான். அவன் பொருள் ஆசையுள்ள வன், சத்பக்தியில்லாதவன். பேரின்ப மனோலயமில்லாதவன். அத்தகையவனைப் பெரியோர்கள் மதிப்பார்களோ? உண்மையான சிவனடியார்களுக்கு, இத்தகைய வாழ்வு ஒரு பெருமையாகுமோ? சிவபெருமான் மகிழ்ச்சியுடன் கொடுக்கும் சம்பளம் நாள் ஒன் றுக்கு ஒரு பொன்னுகும். தமது பெருமையை மிகவும் கேட்கின்ற ஜங்கம மூர்த்திகளைக் கெடச் செய்கின்ற இந்தப்பாதகனைப் பற்றி உலகத்துள்ள சிவபக்தர்கள் அறிந்தார்களானுல் எள்ளி நகைப் பார்கள். அத்தகைய கின்னரப் பிரம்மையினை நீ புகழ்வதற்குக் காரணம் என்ன? சிவபெருமானிடத்தில் மனோலயமடைந்தவர் களாகிய ஜங்கமமூர்த்திகளது சிறந்த புகழைத் தீர்க்காலோசனை செய்து கொண்டாடுவோமாயின் மோக்ஷம் உண்டாகும். அதைச் செய்யாமல் இந்தச் செய்கை என்ன பயனைத்தரும்? அவனே பொருளைத் தந்து உனது தீராத வறுமையைத் தீர்க்க வல்லவன்? அவன் மடம் வெகு தூரத்திலுள்ளது. ஆகையால் உனக்குத் தேவையான பொருளைப் பெற்று உன் வறுமையைப் போக்கிக் கொள்!" என்று சொல்லி, கைத்தடியின் மீது மான் கொம்பைச் சிவத்தியானத்தோடு அடித்தார். உடனேயே அந்த மான்கொம்பி லிருந்து குவியல் குவியலாக பொற்காசுகள் பொழியலாயின.

அதைப் பார்த்ததும் வறிஞன், கலைக்கேற்த பிரம்மையரின் காலடிகளில் விழுந்து வணங்கி தன் மேலாடையை விரித்து, குவிந்து கொண்டிருந்த பொற்காசுகளை வாரி வாரி எடுத்து, ஆசையோடு சேர்த்துக் கட்டித் தன் "தலையின்மீது வைத்துக் கொண்டு வசவண்ணரின் திருமடத்து வாசலுக்கு சென்ருன். பச வண்ணர், அந்த வறிஞனை வரவேற்ருர்.

அவன் பசவண்ணரிடம் தனக்கு பொருள்கிடைத்த விதத்தை யும் தான் கின்னரப் பிரமையரைத் தேடி வந்ததையும் கலைத

கேத்த பிரம்மையர் சொன்னவற்றையும் சொன்ணுன். பிறகு அவன் பசவண்ணரை நோக்கி, "ஐயனே! அங்கு மிகுந்துள்ள பொருள்களை என்னுல் சுமந்து செல்ல முடியாது. ஆகையால் எனக்கு ஒருஆளை சுமர்த்தி அனுப்பி, ஊர்போய் சேர உதவி செய்யுங்கள்" என்று கேட்டான்.

பசவண்ணர், ஆச்சரியமும் மகிழ்ச்சியும் அடைந்து, "இந்தச் செயலின் மகிமையைச் சிவபெருமானே உணர வல்லவர். மிக்கக் கருணையுடைய காமதேனுவுங் கூட, தன்னைக் கேட்டவர்களுக்கே வேண்டியவற்றைக் கொடுக்கும். இந்தக் கலைக்கேத்த பிரம்மையரைப் போல யார்க்கும் தானுக முன்வந்து கொடுக்காது. கலைக் கேத்த பிரம்மையர் இகழ்ந்து சொன்னது போல, கின்னரப் பிரம்மையரது சிறந்த நிலையை மோக்ஷத்திற்குரிய தல்ல வென்று இகழ வல்லவர் யாருமில்லை. பெரியோரைப் புரிந்து கொள்ள முடியாத செய்கை உணர முடிவது எளிதல்ல." என்று சொல்லிவிட்டு, தன் எதிரே இருந்த சிவபக்தன் வேண்டியபடி, பொருளைச் சுமக்க ஓர் ஆளை அமர்த்தி அனுப்பினுர். பிறகு, தாமும் அந்தக் கலைக் கேத்த பிரமையரைத் தரிசிப்போம் என்று விருப்பத்தோடு சென்ருர்.

கலைத்கேத்த பிரம்மையரை அவர் தரிசித்து, அவரது திருவடிகளில் வீழ்ந்து வணங்கினுர். அப்போது, அவர் பசவண்ணரை எழுப்பி, "பசவண்ணனே! நான் சொல்வதைக் கேள். உன்னிடம் இருக்கிற கின்னரப்பிரம்மையன், உடலானது மலபாண்டம் என்பதை யோசிக்கமாட்டான். அவன் பெரியோர்கள் மெச்சும் மோசடி மார்க்கத்தை உணர வல்லவன் அல்லன். "எனக்கொரு மனைவியைக் கொடுப்பாய்? என்று சிவபெருமானைப் பெண்ணுசையுடன் கேட்டு வாங்கிய சுந்தர மூர்த்தியைப் போல, இவனும் பொருளாசை யுள்ளவனுகி விட்டான். சிவபெருமானை அடைந்து படிக்காசைப் பொருளாசையினுல் கேட்டு வாங்கிக் கொண்டும், பெண்ணுசையால் சாக்ஷி சொல்வாய் என்று கேட்டுச் சொல்லச் செய்தும், போராட்டஞ் செய்து அடைதற்குரிய பயனுகிய இந்த வாழ்வோ பயனையுடையது? நமது சிவபெருமானை அன்பு செய்து பொருளை யடைய வேண்டாமோ? சிவபெருமானை வணங்காமல் கல்விகற்றுத்தான் யாது பயன்? சிவபெருமானுக்கு விருப்பமானவற்றை யெல்லாஞ் செய்து வணங்காவிட்டால், பொருள் கிடைக்குமோ? சிவபக்தர்கள் செய்த பக்தியின் பயனுல் முற்றிலும் வறுமையடைந்தோம். மற்றவர்களோ, சிவபக்தியால் பொருளை யடைந்தார்கள். அதிகாலையில் தூக்கத்திலிருந்தும் எழுந்து, அந்திக் காலம் வரையிலும் வேலைசெய்து பாடுபட்டும் நமக்குக் கிடைப்பதோ ஒரு நாழியளவுடைய தானியமாகும். ஒரு பொருளுமில்லை. உத்தமரே! உம்மிடமுள்ள கின்னரப் பிரம்மையருடைய பெரு

மையை எடுத்துச் சொல்ல நம்மால் முடியுமோ? ஒருமுறை பொருத்தமான இசையைப்பாடி, மேன்மையான பொருளேப்பெறும் சீமான் அல்லவோ அவன்! உலகத்தினருக்காக திரிபுராந்தகேஸ் ரனே மகிழ்ச்சியுடன் சாக்ஷி சொல்லும்படிச் செய்த அவன், தன்னே யடுத்துத் தரிசிக்க வருகின்ற சிவபக்தர்களுக்கு அமுது படைக்கப் பொருள் வேண்டாமோ? சிவபெருமான் அருள்கின்ற பொற்கா சோடு சேர்த்துக் கொள்ளும் பொருட்டு, என் கஷ்டார்ச்சிதத் திஞல் கிடைத்த சிறந்த பொருள் இங்கிருக்கிறத. நீ சிநேகமாக வுள்ள அந்தக் கின்னரப் பிரம்மையனே என்னிடம் அழைத்துவா!'' என்று சொல்லி, கலேக்கேத்த பிரம்மையர் பூமியில் தமது திருக் கரத்தை வைத்தார். உடனே, அளவில்லாத பொன் உண்டா யிற்று. அதைப்பார்த்த பசவண்ணன் மனமுருகி, வணங்கிஞர்.

இந்த நிகழ்ச்சிகளே ஞானதிருஷ்டியிஞல் உணர்ந்த கின்னரப் பிரம்மையர், கலேக்கேத்த பிரம்மையரின் திருமடத்துக்கு விரைந்து வந்து வணங்கிஞர். கலேக்கேத்த பிரம்மையர் அவ ரைத் தழுவி, அருகில் அமர்த்தி, ஜனன மரணங்களுக்குக் காரண மாகிய மயக்கம் ஒழிய உபதேசஞ் செய்தார்.

பசவண்ணரும் கின்னரப் பிரம்மையரும் மகிழும்படி, இஷ்ட லிங்க அர்ச்சனையைச் செய்வித்து அவர்களே அன்புடன் உபசரித் தார் கலேக்கேத்த பிரமையர்.



# 31. மோளிகை மாறையர் கதை

கல்யாணபுரியில், மோளிகை மாறையர் என்ற சிவசரணர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் திரிகால ஞானமுள்ளவர். சிவ லிங்க நிஷ்டையுள்ளவர். ஜீவன்முக்தர். அன்பிற்கு மூலர்; தூய்மையானவர்: தர்மசீலர்: பெருந்தன்மையுடையவர். சிவலிங்க அர்ச்சனை செய்வதில் அந்தரங்கத்திலும் பகிரங்கத்திலும் விருப்ப முள்ளவர். துறவியாக இருப்பவர். அறுவகையான உட்பகை யில்லாதவர். ஜங்கமமூர்த்திகளுக்குப் பூஜை செய்வதிலும் தொண்டு செய்வதிலும் ஆர்வமிக்கவர்.

அவர் தினந்தோறும் கோடரியைத் தூக்கிக்கொண்டு, நுழை தற்கு அரிய விசாலமான காடுகளில் சென்று, உறுதியான விறகு களை வெட்டிச் சுமையாகக் கட்டித் தமது தலையின்மீது சுமந்து, கடைத் தெருக்களுக்குச் சென்று, சுமைக்குத் தகுந்த விலைக்கு விற்பார். அத்தகைய விறகு விற்பனையில் கிடைத்த பணத்தைக் கொண்டு மகிழ்ச்சியுடன் ஜங்கமமூர்த்திகள் திருப்தியடையும்படி சுவையுள்ள அன்னம் படைத்து மகிழ்வார். ஊரிலுள்ள சிவனடி யார்கள் வசவண்ணரின் திருமடத்தில் தினந்தோறும் சுவையுள்ள அன்னத்தை அமுது செய்து சோம்பல் இல்லாமல் மாறையரின் திருமடத்திற்கும் சில நாட்கள் வந்து திருவமுது செய்வதுண்டு. அவர்கள் பசவண்ணரிடம் சென்று, "மோளிகை மாறையரைப் போல பெருமைக்குரியவர் இல்லை" என்று சொல்லி, "நீ படைக் கின்ற இஷ்டான்னத்தைக் காட்டிலும் நன்மையுடைய மோளிகை மாறையரது திருமடத்தின் கூழே சிறந்தது. அவர் கஷ்டப்பட்டு உழைத்து, அதன் ஊதியமாகத் தினந்தோறும் சம்பாதிப்பது ஒரு குறுணி தானியம். ஆனால் அவரது திருமடத்தில் தங்கி அமுது செய்யும். ஜங்கம மூர்த்திகளோ கணக்கற்றவர்கள்." என்று புகழ்ந்தார்கள்.

அதைக் கேட்ட பசவண்ணர், மோளிகைமாறையரைச் சந் திக்க விருப்பங் கொண்டு, அவரது திருமடத்திற்குச் சென்றார். அப் போது மோளிகை மாறையர் காட்டுக்கு விறகு வெட்டச் சென் றிருந்தார். மாறையரது மனைவியார் மட்டும் திருமடத்தில் இருந் தார். அவர் பசவண்ணரை வரவேற்று அவரது திருவடிகளுக்கு ஜலத்தைத் தாங்கி நின்றார். அதை பசவண்ணர் பயந்து நின்று ஏற்றுக் கொண்டு தமது திருவடிதனைத் தாமே தமது திருக்கரங்

களால் கழுவிக் கொண்டு, அந்த அம்மையாரை நோக்கி, "தாயே! எனது இஷ்டலிங்கத்திற்கு அமுது படைக்கக் கடவை!" என்று கேட்டார். பிறகு பசவண்ணர் சிவபூஜா காலத்தில் அன்புடன் இரண்டாயிரம் பொற்காசுகள் நிறைந்த பையை, சிவபூஜை செய்யுமிடத்தில் ஒரு புறமாக மறைவாக வைத்துவிட்டு, சிவபூஜை செய்து உணவருந்தி, மாறையரின் மனைவியிடம் விடை பெற்றுத் தம் இருப்பிடம் சென்றார்.

அன்று நடுப்பகலில் மோளிகை மாறையர் விறகுக் கட்டைச் சுமந்து கொண்டு திருமடத்திற்கு வந்தார். விறகைத் தலைவாசலில் வைத்துவிட்டு, உள்ளே நுழையும்போது, அவரது மனைவியார் ஜலம் கொண்டு வந்து, தன் கணவரின் திருவடிகளைக் கழுவினாள். பிறகு மாறையர் ஜங்கம மூர்த்திகளுக்கு அன்னம் படைக்கச் செய்து, சிவபூஜை செய்யும் அறையினுள்ளே சென்றார். அங்கே பசவண்ணர் முன்பு மறைவாக வைத்திருக்கும் பணப்பையை மாறையர் பார்த்து "இந்தப் பணப்பை இங்கு எப்படி வந்தது? இது வருவதற்குக் காரணம் என்ன? இங்கு வந்தவர் யார்?" என்று தம் மனைவியைக் கேட்டார். அதற்கு அவர் மனைவி நடந்தவற்றைக் கூறினார். அதைக் கேட்டதும், வந்தவர் பசவண்ணரே என்று சந்தேகமில்லாமல் உணர்ந்து, "பசவண்ணர் சத்பக்திக்கு உயிராக இருப்பவராயிற்றே! நாம் அடைந்துள்ள வறுமையைப் போக்க வல்லவர் வேறு யார் இருக்கிறார்கள்? ஆனால் நாமோ வறுமை என்பதையே உணரமாட்டோம். யாவற்றையும் உணர வல்லோம்" என்று சொல்லிவிட்டு, பசவண்ணர் வைத்திருந்த பொருளை இரண்டாகப் பிரித்து, இரண்டு சிறந்த ஜங்கம மூர்த்திகளுக்குப் பங்கிட்டுக் கொடுத்துவிட்டார். பிறகு அவர்களது மென்மையான தாமரைமலர் போன்ற ஸ்ரீ பாதங்களைக் கழுவி, அந்தப் பாதோதகத்தைத் தமது விறகுச் சுமையின்மீது தெளித்தார். உடனே அந்த விறகுச் சுமையில் இருந்த விறகுகள் பொன் மயமாக மாறின. மோளிகை மாறையர் அந்தத் தங்க விறகை விரும்பாமல், ஆயிரம் பொற்காசு நிறையுள்ளதாக அறுத்தறுத்து, ஓயாமல் ஜங்கம மூர்த்திகளுக்குத் தானம் செய்தார். அவர்கள் அதை ஏற்றுக் கொண்டு, பசவண்ணரிடம் சென்று, அவரிடம் நடந்தவற்றைக் கூறினர்.

அதையறிந்ததும் பசவண்ணர் வியப்படைந்தார். உடனே, அவர் மோளிகை மாறையரின் திருமடத்திற்கு விரைந்து சென்று, அவரது திருவடிகளில் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கி, "அடியேன் உம்மைச் சரணமாகக் கருதி அடைந்தேன். என்னை அனுக்கிரகித்து ரட்சிப்பீராக!" என்று வேண்டினார்.

மோளிகை மாறையர், அவரை நோக்கி, "பசவண்ணரே! என்னை இவ்வாறு புகழ்வதற்குக் காரணம் யாது? வறுமையுடைய சிவபக்தர்களுக்கு அன்புள்ள உயிர்போன்ற உம்மைப் போன்றவர் வேறு யார் உண்டு? பிரகாசமான பொற்காசுப்பை நமது திருமடந்தில் உம்மால் வைக்கப்பட்டிருப்பனத நாம் கண்டோம். இதனுல் எமது வறுமை தீர்ந்தது. நீர் நல்லவர். சம்பாதிப்பதற்குரிய பொருளாசையுடைய நீர் நல்லவர். நிகரற்ற கிருபையுடையவரே, நீர் நல்லவர்!!' என்று புகழ்ந்தார், மேலும் அவர் "பசவண்ணரே! நீர் நமக்கு அருள் செய்ததுபோல மற்றைய சிவபக்தர்களுக்கும் அருள் செய்தீரோ?" என்று விசாரித்தார்.

அவர் சொன்னவற்றைக் கேட்ட பசவண்ணரின் மனம் உருகியது. அவர் மாறையரை நோக்கி, "ஜங்கம மூர்த்திகளே! ஸ்பரிசவேதியானது இரும்பிலுள்ள குற்றத்தைப் பார்க்குமோ? ஸ்வர்ணமயமான மஹாமேரு கறுத்தகாக்கைக்ளின் குற்றத்தைப் பார்க்குமோ? அடியேனது பெரும்பிழையை நீர் பகுத்துணர்வீராயின் பெரிதாகத் தோன்ற மாட்டாது. மேன்மையான உபசுரா குணமுடைய மாறையரே; அடியேனை ஆட்கொண்டருள்வீராக! இலவமரத்தில் பழங்கள் உண்டோ? சுடுகின்ற சூளையில் குளிர்ச்சியுண்டோ? நீரில் நவநீத முண்டோ? அக்கினி குண்டத்தில் நீருண்டோ? கடினமான கல்லில் இரக்கமுண்டோ? மனேதிடமில்லாத அடியேனிடத்தில் பேரறிவு இல்லை. ஆகையால் என்னை ஆண்டருள்வீராக!" என்று பசவண்ணர் சாஷ்டாங்கமாக வணங்கி, நின்ருர்.

மோனிகை மாறையர் மிகவும் மகிழ்ந்து அவரை நேசத்துடன் தழுவி, ஞானமார்க்கங்களை உபதேசித்து உத்தரவு கொடுத்தார். பசவண்ணர் தமது திருமடத்திற்குச் சென்ருர். மோளிகை மாறையர் முன்போலவே விறகு விற்பனை செய்து வாழ்ந்து வந்தார்.

## 32. கன்னப் பிரமையர் கதை

கல்யாணபுரியில், கன்னப் பிரமையர் என்ற சிவபக்தர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் நினைத்தற்கரிய சிறந்த ஜங்கம மூர்த்திகளுக்கு அமுது அளிக்கும் பொருட்டு, எந்த வேலையைச் செய்தாலும் அதை இழிவில்லை என்று கருதி வந்தார். அவர் தமது செல்வமும் உடலும் உயிரும் ஜங்கம மூர்த்திகளுடைய சொத்து

என்று எண்ணித் தத்தஞ் செய்திருப்பவர். அஞ்சாத வீரசைவர். தெளிந்ததும் மகத்துவம் பொருந்தியதுமாகிய தொழிலையுடையவர்.

காண்பவருக்குத் தமது முகம் தெரியாமல் இருப்பதற்காக, நெற்றியில் மைப்பொட்டும், தம்மைக் காப்பதற்கு முட்செறிந்த குல்லாயும் கத்தரிக்கோலும், வேட்டை நாய்களின் வாய்களைக் கட்டுவதற்கும் கண்களைக் கட்டுதற்கும் தெளித்தற்குரிய மணலும் வீட்டிலிருப்பவர்களின் நாக்களைக் கட்டும் பொருட்டும் கண்களைக் கட்டும் பொருட்டும் உபயோகிப்பதற்குரிய சொக்குப் பொடியும், உடலில் நுழையும்படிச் செலுத்துதற்கு உரிய அம்புகளும் எறிவதற்குரிய கற்களும் பிடுங்குவதற்குரிய வண்டுகளும் கறுப்பு நூல் உருண்டையும் கரித் தோண்டியும், கறுப்புத் துணியும் துறட்டுத்தடியும் கிடைத்ததற் கரியதாகிய நிதியை, அது எங்கு இருந்தாலும் காண்பதற்கான கண்மையும் உடலில் தடவும் எண்ணெயும் உருவியகத்தியும் ஆகிய இவற்றை எடுத்துக் கொண்டு பாதரட்சை யணிந்து பொருத்தமான கன்னக்கோலையும் எடுத்துக்கொண்டு செல்வார், அப்படிச் செல்லும்போது வெற்றியடைதற்குரிய சுப சகுனங்களைப் பார்த்துச் செல்வார்.

ஆபரணங்களும் நிறையப் பொருள்களுடைய சீமான்களின் வீடுகளிலுள்ள முடுக்கான ஒதுக்குப் புறமான இடங்களைத் தெரிந்து கொண்டு, மையிருட்டில் சென்று பூமியில் கன்னமிடுவார். அல்லது சுவரில் கன்னமிடுவார். அசைத்தவுடன் பூட்டுகளைத் திறக்கச் செய்வார். இதுபோன்ற வழிகளால், உள்ளே நுழைவார். அங்கு சிவபக்தர்களைக்கண்டால், வணங்கித் துதித்துத் திருடாமல் திரும்பி விடுவார்.

வீரசைவர்களல்லாத வீடுகளுக்குச் சென்றால், செல்வம் எல்லாவற்றையும் வாரிக் கொள்ளை யடித்துச் சென்று, சிவபக்தர்களுக்கு அன்னமிட்டுப் பொருள் கொடுத்து வணங்குவார்.

ஒருசமயம் அவர் இருட்டில் கன்னம் வைப்பதைவிட பகலிலேயே கன்னம் வைக்கவேண்டும் என்று எண்ணினார். அதுபோலவே, சாதாரணச் சீமான்கள் வீட்டில் கன்னம் வைப்பதைவிட, விஜ்ஜல மன்னரின் அரண்மனையிலுள்ள பொக்கிஷச் சாலையிலேயே கன்னம் வைப்போம் என்று நிச்சயித்தார். எனவே, அதே எண்ணத்துடன் தெருவழியாக நடந்து கொண்டிருந்தார். அவரை பசவண்ணர் கண்டார். கண்டதும் சாஷ்டாங்கமாக வணங்கிக் கும்பிட்டார். அப்போது கன்னப் பிரமையர், பசவண்ணரை உற்று நோக்கி, "பசவண்ணனே! இன்று என் வழக்கத்

திற்கு மாருக, பகல் பொழுதிலேயே கன்னம் வைக்க வேண்டும். ஆகையால், நீயே எனது கன்னக்கோலை பிடித்துக்கொள்! நீ என்னுடன் வந்து, விஜ்ஜல ராஜனுடைய பொக்கிஷச் சாலையைக் காண்பி ''என்று கேட்டார். அதற்குப் பசவண்ணர், 'தமது ஒழுக்கமாவது ஜங்கம மூர்த்திகளுடைய திருவாக்கைக் கடவாமையாம். ஆகையால். இந்தக் கன்னம் வைக்கும் தொழில் விதிமார்க்கமோ அல்லது விலக்கு மார்க்கமோ!' என்று எண்ணி, பதில் எதுவும் சொல்லாமல், கன்னப் பிரமையரை விஜ்ஜல ராஜனுடைய அரண்மனைக்கு அழைத்துச் சென்று, அங்கு பெருஞ் செல்வம் நிரம்பிய பொக்கிஷச்சாலை இதுதான் என்று காண்பித்து கன்னக்கோலைக் கன்னப் பிரமையரிடம் கொடுத்து விட்டுப் போய் விட்டார். பிறகு அவர் விஜ்ஜல ராஜனிடம் சென்றுர்.

கன்னப்பிரமையர் வெளிப்படையாகக் கன்னம் வைத்தால் என்ன பொல்லாங்கு நேருமோ என்று சற்றும் யோசியாமல் நம்மைக் காப்பாற்றி ஆண்டருள்கிற ஜங்கமமூர்த்திகள் பசியால் தவிப்பார்களே என்று சிந்தித்து, அங்கு ஓரிடத்தல் பதுங்கியிருந்து, கன்னக்கோல் வைத்துத் தம் வேலையை முடிப்பதில் கவனமாக இருந்தார்.

அவர் இவ்விதமாகப் பூமியில் கன்னம் வைக்கும் போது, பொற்குவியலாக நிரம்பியது. கன்னப் பிரம்மையர், கன்னம் வைத்த வழியாக உள்ளே சென்று, லக்ஷக்கணக்கான பொற்காசுகள் நிறைந்த பெட்டியைத் தூக்கிக்கொண்டு, கன்னம் வைத்த வழியாக அரண்மனை வாசலை யடைந்தார். அப்போது ஓர் அதிசயம் நிகழ்ந்தது. அது, பரிசுத்தமான காரியங்களையே செய்கிற பசவண்ணரின் வாக்கு சித்தியானது உலகில் விளங்கவோ அல்லது கன்னப் பிரமையரின் பெருமை விளங்கவோ, கன்னக்கோலினல் இழுத்த மண்ணெல்லாம் சிவானுக் கிரகத்தினல் பொன்னுயின தேவர்களுக்கும் தேடிப் பார்க்கமுடியாத திருமேனியான கன்னப்பிரமையர், அரண்மனை வாயிற்காப்போருக்கு எதிரே காணப்பட்டார்.

அவர்கள் விஜ்ஜல ராஜனிடம் நடந்தவற்றைத் தெரிவித்தார்கள். உடனே அரசனுக்குக் கோபம் பொங்கியது 'பசவண்ணன் நட்புக் கொண்டுள்ள அந்தக் கள்ளன் உங்களிடம் அகப்பட்டு விட்டானே? நல்லது'' என்று சொல்லி, மீசையை முறுக்கி, உதட்டைக் கடித்து, ''தன்னை நம்பி உத்தியோகத்தில் அமர்த்தி வைத்த நமக்கே துரோகமிழைக்க இந்த பசவண்ணன் நினைத்து விட்டானே! உலகத்தார் அறியும்படி, அந்தக் கள்ளனுக்கு உடன்பட்டு, பகற்பொழுதிலேயே கன்னக்கோல் வைக்கும்படிச் செய்து

விட்டானே? இந்தப் பொக்கிஷச்சாலையை நம் பசவண்ணனே காண்பித்திருக்கிறனே! தனது திரவியத்தைக் கள்ளனுக்குத் தந்ததுமல்லாமல், ராஜமாளிகையின் திரவியங்களையும் திருடும்படிக் காண்பித்ததற்கு காரணம் என்ன? இத்தகையவன் எனது உயிருக்கும் தீங்கு நினைப்பவனுவான்!" என்று பசவண்ணரை தூற்றி விட்டு, கன்னம் வைத்த இடத்தைக் காணக் காவலர்களுடன் சென்றான்.

அங்குக் கள்ளன் கன்னக்கோலினுல் தோண்டிய மண்ணும் கற்களும் எல்லாமே பொன்னும் ரத்தினங்களுமாகப் பிரகாசித்தன. அதைக் கண்ட விஜ்ஜல மன்னன் திகைத்து, கைவிரலை மூக்கின் மீது வைத்து, ஆச்சரியப்பட்டான், "இந்தப் பொருள் இங்கு வருவதற்குக் காரணம் என்ன? இந்தக் கள்ளன் யார்? நடந்த செய்தி என்ன?" என்று அங்கிருந்த பசவண்ணரையே கேட்டான்.

"அரசே! இந்தக் கன்னப்பிரமையரது பெருமையை நான் மட்டுமே சொல்ல முடியும். கிருபாமூர்த்தியான இவரது திருக் கண்கள் அல்லவோ காமதேனு பிறக்கும் ஸ்தலமாகவுள்ளது. இவரது திருக்கர ஸ்பரிசத்தாலல்லவோ ஸ்பரிசவேதிகள் வந்து சேரும்? இவரது மனமகிழப் பணிவிடை செய்யும் பெரியோருக்கு மோக்ஷானந்தம் எளிதில் கிடைத்துவிடும். இவர் கன்னம் வைத்ததனுலுண்டாகின்ற பொருளையன்றி வேறெந்தப் பொருளையும் ஏற்கமாட்டார். சிவானுக்கிரகமுடைய பக்தர்கள் யாது செய்யினும் அது சிவனுக்கு மகிழ்ச்சியேயாகும். இவருடைய செயல் பயனற்றதென்று எண்ண வேண்டாம். இவர் செய்தது குற்றமல்ல. சூதாட்டத்தால் பாண்டவர்கள் ராஜ்யத்தை இழந்தார்கள். சூதாட்டத்தால் சிவனடியரான மூர்க்க நாயனுர் மோட்சத்தையடைந்தார். வேட்டையாடுவதால் தசரத மன்னன் கெட்டான்; சிவனடியாரான கண்ணப்ப நாயனுர் ஸ்ரீமகா கைலாசத்தை அடைந்தார். பெண் மோகம் மிஞ்சியதால் அரசர்கள் பலர் அழிந்தார்கள். ஆனுல் சுந்தரமூர்த்தி சுவாமிகள் சிவ பெருமானுக்குந் தோழரானுர். கொலை செய்ததனுல் மாபெரும் முனிவரான மாண்டவ்ய முனிவர் கழுமரம் ஏறினுர். ஆனுல் சண்டேச நாயனுர் என்ற சிவபக்தர், மேலான சிவானுக்கிரகத்தை யடைந்தார். பொய் பேசிய தர்மராஜன் நரகத்தையடைந்தான். ஆனுல் சிறுத்தொண்ட நாயனுர் கைலாயத்தை அடைந்தார். திருட்டுத்தனத்தால் சூத்திர வீரன் என்போன் சூலத்தில் அகப் பட்டு மாண்டான், ஆகலவத்தி என்பவன் சிவபெருமானின் தொண்டனுனன். ஆகையால் இந்தக் கன்னப் பிரமையர் செயலும் தர்மநீதியாகும், சிவபெருமானின் பக்தரின் பொருட்டு செய்யும்

எந்தப் பாபச்செயலும் பரிசுத்தமான புண்ணிய காரியமாகும் என்று சிவாகமங்கள் கூறுகின்றன. இவர் பிரம்ம விஷ்ணுக் களுக்கும் மேம்பட்டவர். இவர் கன்னம் வைத்துக் கொணரும் பொருளைக்கொண்டு, தம் திருமடத்திற்கு வருகிற ஜங்கம மூர்த்தி களுக்கு அமுதளித்து, அவர்கள் விரும்பியவற்றையும் வழங்கி வருகிறார். தம்மிடமிருந்த பொருள் செலவழிந்த போதெல்லாம், சிவபக்தர்களுக்கு அமுது படைப்பதற்காகவே இவர் சிவபக்தரல் லாதாரின் வீடுகளில் இதுபோலச் செய்கிறார். இத்தகைய விரதத் தைக் கொண்டிருப்பதாலேயே இவருடைய திருவடிகள் பட்ட மண் முழுவதும் பொன்னாயிற்று. இவர், இவ்விடத்தில் உன்னை வாழச் செய்வதற்கே எழுந்தருளினார், இத்தகைய மேன்மையை யுடைய இவருக்கும் அறம், பொருள், இன்பம், வீடு என்ற சதுர் வித புருஷார்த்தங்களும் எளிதாகக் கைகூடும். அவருடைய கன்னக் கோலினால் உண்டான திரவியங்களை அவருக்குக் கொடுத்து, அவரது திருவடிகள் பட்டதனாலான பொன் எல்லா வற்றையும் நீ பெற்றுக் கொள்வாயாக!'' என்றார். விஜ்ஜல மன்னனும், பசவண்ணன் கூறியவாறே செய்தான். பிறகு கன்னப் பிரமையர் பசவண்ணரின் திருமடத்திற்குச் சென்றார். பசவண்ண ரும் அவரது மனைவியாரும் கன்னப் பிரமையரை நன்கு உப சரித்து, அறுசுவை விருந்தளித்து, அவருடைய உண்கலத்தி லிருந்த பிரசாதங்களை மிகவும் அன்புடன் மனமிசைந்து உண்டு. முன்போலவே மகிழ்ச்சியாக வாழ்ந்திருந்தார்கள்.

---

# 33. முசுண்டிச் சவுண்டையர் கதை

---

முசுண்டி என்ற ஊரில் சவுண்டையர் என்ற சிவபக்தர் ஒரு வர் வாழ்ந்து வந்தார். அவர் வித்வான் மதிக்கும் வியாகரண பண்டிதர். ஜங்கம மூர்த்திகள் விரும்பியவற்றை யெல்லாம் அன் புடன் கொடுப்பவர். எல்லோராலும் புகழப் பெற்றவர். அவர் பற்றற்றவர். நற்குண நற்செயல்களையுடையவர். பொய்யும் புரளி யும் பேசாதவர். பிரத்யக்ஷ பிரமாணத்தையும் அனுமான பிரமாணத் தையும் அறிந்தவர். சாதங்கொடுக்கவும் அனுக்கிரகம் செய்யவும் ஆற்றலுடையவர். எருதுகளும் ஜங்கமமூர்த்திகளும் வீரமஹேஸ் வரர்களும் சிவபதமடைவார்களாயின் அவர்களுக்கு சவுண்டையர் சமாதி செய்பவர். தாம் செல்லும் வழியில் நதியும் நெருப்பும் தடைசெய்யுமாயின் அவற்றைக் கடந்து செல்ல வல்லவர். தமக்கு மரணமே யுண்டானாலும் சிவபக்தியை இகழாதவர்.

அவர் பசவண்ணரின் கீர்த்தியைக் கேள்வியுற்று, அவரைத் தரிசனம் செய்யும் விருப்பத்தோடு, ஜங்கம மூர்த்திகள் சிலருடன் ஒரு காட்டு வழியாகச் சென்று கொண்டிருந்தார்.

அந்தக் காட்டில் எட்டிமரங்கள் நிமிர்ந்து வளர்ந்திருந்தன. அம்மரங்களில் செந்நிறமான பழங்கள் பழுத்துக்குலுங்கிக் கொண்டிருந்தன. அவற்றைப் பார்த்த சவுண்டையர் அவற்றைப் பறித்து, தம் 'இஷ்டலிங்க மூர்த்திக்கு இன்றையத்தினம் நிவேதித்து அந்தச் சிவப்பிரசாதத்தை நாம் உண்போம்' என்று நினைத்து கைப்பாகிய எட்டி மரத்தின் கீழே சென்று, தம் கை வேலைக் கொண்டு, அப்பழங்களைப் பறித்தார். பிறகு அவற்றை எடுத்துக்கொண்டு, "புனிதனே! சிவபெருமானே! இவையே இன்று உமக்குத் திருவமுதாகட்டும்" என்று நிவேதித்தார். பிறகு அவற்றில் மிகுதியானவற்றை ஜங்கம மூர்த்திகளிடம் கொடுத்து அவர்களையும் நிவேதிக்கச் செய்து, அவர்களுடன் சிவப்பிரசாதமான அப்பழங்களை அமுதம் போல உண்டார். சிவபெருமானைத் தியானித்து எட்டிப்பழத்தை உண்டதால் அது இனிய பழமாயிற்று. பிறகு அவர் ஜங்கமமூர்த்திகளுடன் கல்யாணபுரத்தை அடைந்து, பசவண்ணரின் திருமாளிகையில் வாயிலைத் தாண்டி உள்ளே சென்றார்.

சவுண்டையரின் மகிமையை அறிந்திருந்த பசவண்ணர் அவரை வரவேற்று, அவருக்கு அன்பு செய்து வணங்கி, தமது திருமடத்தில் எழுந்தருளச் செய்து, உபசரித்து வந்தார். சில காலம் சென்ற பிறகு சவுண்டையர், மற்றொரு திருமடத்திற்குச் சென்றார். அவர் வந்திருப்பதை யறிந்த வீரசைவன் ஒருவன், சவுண்டையரின் சந்நிதியில் விபூதியை வைத்து, "என் தந்தையே! எனது வீட்டில் ஒரு திருமணம் செய்யவிருக்கிறேன். அந்தத் திருமணம் மேன்மையடையவும், தம்பதிகள் உங்களது அனுக்கிரகத்தை யடையவும் அவ்விடத்திற்கு எழுந்தருளக் கடவீர்" என்று வேண்டிக் கேட்டுக் கொண்டான். சவுண்டையரும் அவனது வேண்டுகோளுக்கு இசைந்து தம்முடன் இருந்த ஜங்கம மூர்த்திகளோடு, திருமணம் நடைபெறும் வீட்டுக்குப் புறப்பட்டார். அளவில்லாத ஆடம்பரத்துடன் பொதுமக்களும் சிவபக்தர்களும் ஆரவாரிக்க அவர் கல்யாண வீட்டிற்குச் செல்லுகின்ற பாதையில், ஓர் ஆறு வெள்ளமாய் பிரவாக மெடுத்து ஓடிக் கொண்டிருந்தது. அதைக் கண்டதும், சவுண்டையர், அந்த ஆற்றின் கரையிலே நின்று "ஏ நதியே! உனது பதியாகிய கடலின் ஜலத்தையெல்லாம் அகத்தியன் என்ற தவ முனிவன் உண்டு வற்றச் செய்ததை நீ அறிந்திலையோ? சிவபக்தர்களல்லாத பரிஜனங்கள் செலுத்துகின்ற ஓடத்தில் ஏறுமல் வெள்ளமாய் ஓடிய ஆற்றுநீரைச் சங்கர தாசையர் வற்றச் செய்தது உனக்குத் தெரி

யாதோ? கஜேஸ்வரர் என்ற சிவபெருமானை உலகில், நினைத்தற்கரிய மசுணிதேவர் என்பவர், மனத்தில் கொண்டு, சன்மார்க்கமான தியானத்தைச் செய்து. சிவயோக சமாதியில் கூடியிருக்கும் போது, நீ அவர் மீது கோபித்து; அவர்மேல் வெள்ளமாக விரைந்து சென்று அழிந்தாய், அதை நினையாயோ? எப்போதும் உனது அகங்காரத்தை விட்டு விடு!" என்று சொல்லி தமது கைவாளை ஓங்கி, நதிநீரை இரண்டு துண்டாகப் பிளந்து ஆரவாரஞ் செய்தார். உடனே வெள்ளமாக ஓடிய அந்த நதியானது இரண்டு மேகங்களை போலவும், ஜலபர்வதங்களைப் போலவும் உருக் கொண்டு வெகு தூரம் வரையிலும் வழிவிட்டு நின்றது.

இவ்விதமாக வானளாவ அந்த நதியானது நின்ற கோலமானது, உண்மையான சிவபக்தர்களின் மகிமையை, கங்கையிடம் கேட்டறிய ஆகாயத்தில் எழும்பியது போலத் தோன்றியது. பிறகு அந்த நதி பாதாள லோகத்தில் பாய்ந்தது. அதை மற்ற ஜங்கம மூர்த்திகள் பார்த்தனர், உடனே அவர்கள், "ஜலத்தைக் கோபித்து அடித்தால் அது இரண்டு துண்டாகுமோ?" என்ற பழமொழியைச் சவுண்டையர் ஒழித்து விட்டார். என்று புகழ்ந்தார்கள். பிறகு சவுண்டையரும் அவருடன் இருந்தவர்களும் ஆற்றைக் கடந்து சென்றனர். எல்லோரும் சவுண்டையரைப் புகழ்ந்து ஆரவாரஞ் செய்து கொண்டே சென்றனர்.

பிறகு, அவர்கள் அனைவரும் திருமணம் நடைபெறும் வீட்டிற்குச் சென்றனர். கணக்கற்ற மங்கல வாத்தியங்கள் முழங்கத் திருமண வீட்டார், சவுண்டையரையும் மற்ற ஜங்கம மூர்த்திகளையும் வணங்கி, விருந்தினருக்குரிய மரியாதைகளைச் செய்து, அமுதிட்டு உபசரித்தனர். அமுதருந்தியதும் சவுண்டையர் அங்கிருந்து புறப்பட்டார். அப்போது கல்யாணபுரத்து மக்கள் அவரை எதிர்கொண்டு துதித்தனர், போற்றினர், ஆரவாரஞ் செய்து மகிழ்ந்தனர்.

இவ்விதமாக, முசுண்டிச் சவுண்டையர் ஒரு தெருவின் வழியாகச் செல்லும்போது, ஒருபெண் சவுண்டையரை வணங்கி, நின்றாள். சவுண்டையர் அவளை நோக்கி "பெண்ணே! புண்ணியவதி பாகிய உனக்குத் தீர்க்காயுசு உண்டாகக் கடவது!" என்று வாழ்த்தி விட்டுத் தமது திருமடத்துக்குச் சென்றார்.

திருமடத்துக்குச் சென்றதும், சிவபூஜை செய்யத் துவங்கினார். அஷ்டவிதார்ச்சனைகளையும் சிறந்த ஷோடச உபசாரங்களையும் குறைவின்றி அன்புடனும் பக்திபுடனும் செய்து, செவ்

வானம் போன்ற திருமுடியுடைய சிவபெருமானை வணங்கிச் சிவானந்தத்தில் நிலைத்திருந்தார்.

அப்போது, ஜங்கம ஸ்வரூபியாகிய சவுண்டையரது திருவாக்கு பொய்யாகாது என்கின்ற பெருமையைத் தேவர்களும் மனிதர்களும் நன்குக நம்பும் பொருட்டோ என்னவோ, ஒரு விபரீத நிகழ்ச்சி நிகழ்ந்தது. சவுண்டையர் ஆசீர்வதித்த அந்தப் பெண் மடிந்து விட்டாள். அதைக் கண்ட அவளது தாய்தந்தையர் அழுது புலம்பி, பூங்கொத்துகளைச் கூந்தலில் அணிந்து மடிந்து போன அந்தப் பெண்ணை எடுத்துக்கொண்டு. சவுண்டையர் தங்கியிருந்த மடத்திற்கு வந்து, சவுண்டையர் சந்நிதியில் அவளுடலைப் படுக்கவைத்து, "இந்தப் பெண் உமது திருவடிகளில் வணங்கி ஆசீர்வாதம் பெற்றவள். ஐயனே! உமது ஆசீர்வாதம் பொய்க்காது.!" என்று சொல்லி வணங்கினர்கள். சவுண்டையர் விசனப்படுவோரைப் பார்த்து, "பொய்யறியாத சத்யவான்களே, எழுந்திருங்கள்" என்று அவர்களை எழுந்திருக்கச் செய்தார்.

"தர்மமான வயது நூறும் பெற்றுச் சுகமாக வாழ்ந்திரும்" என்று வாழ்த்தானது சொல்வதே யல்லாமல், உடலில் விளங்குகின்ற உயிருக்கும் வாழ்த்த இயலுமோ? என்ற பழமொழியைத் தவிர்த்து, சவுண்டையர் அந்தப் பெண்ணைக், கொஞ்சநேரம் தட்டினர். பிறகு தமது கைவாளை யசைத்து, எழும்பி உரத்த குரலில் "பெண்ணே வருவாய்!" என்று கூப்பிட்டார்.

'அந்தச் சப்தத்தைக் கேட்பதற்கு முன்னமே, சவுண்டையரது கிருபாகடாக்ஷத்தின் மேன்மையினால் தூங்கித் தெளிந்து எழுவதைப் போல அந்தப் பெண் கண்விழித்து எழுந்தாள். எழுந்தவள், சவுண்டையரின் திருவடிகளைச் சாஷ்டாங்கமாக வணங்கி, தன்னிரு கைகளையும் கூப்பிக் கொண்டு நின்றாள். அதைக் கண்டதும் அவளது பெற்றோர்கள் உடல்கள் மயிர்க்கூச்செறிய மார்போடு தழுவிக் கொண்டார்கள். அங்கு கூடியிருந்தோர் சவுண்டையரைப் போற்றித் துதித்தார். "வேண்டிய வரங்களை யெல்லாம் அருள் செய்யவல்ல தவராஜ சிங்கமாகிய சவுண்டையரே! நீங்கள் அனுக்கிரகம் செய்தருளிய பிராணோபகாரத்தின் பெருந்தன்மைக்கு ஈடாக நாங்கள் பிரயாசைப் பட்டுப் பண்ணுகின்ற பிரதியுபகாரம் வேறு ஒன்றும் இல்லை. மனமிசைந்து உமது தொண்டர்களாவதே எமது கடமை!" என்றனர்கள்.

உயிர் பெற்று எழுந்து நிற்கின்ற பெண்ணுக்கும், பிதாவுக்கும், தாய்க்கும் சிறந்த அன்புடன் பல பிறவிகளின் செய்த புண்ணியப் பெருமையினால் சித்தி யடைவதனாலுண்டாகிய சிவலிங்

கத்தை கிருபா கடாக்ஷத்துடன் தாரணஞ் செய்து, துஷ்ட பராசமய வழிகளைக் கொன்று வெற்றியடைவதற்குரிய திருவுளங் கொண்டவராகிய சவுண்டையர் தமது திருமடத்தில் சுகமாக வாழ்ந்திருந்தார்.

## 34. சுரிகைச் சவுண்டையர் கதை

கல்யாணப் பட்டினத்தில், துறவறத்தை மேற்கொண்ட சுரிகைச் சவுண்டையர் என்ற சிவனடியார் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் இஷ்டலிங்க மூர்த்திக்கு அஷ்டவித அர்ச்சனைகள் செய்வதை விரதமாகக் கொண்டவர். ஸத்குரு பக்தியும் ஜங்கம பக்தியும், சிவ தத்துவங்களை நிகமாகமங்களைக் கொண்டு விசாரித்துத் தெளிய உணர்கின்ற விரதமும் யோக நித்திரை செய்யும் வீர விரதமும் கொண்டிருந்தார்.

அவர், பலவித வீர விரதங்களினாலும் விரும்புதற்குரிய ஸ்ரீஸத்குரு கடாக்ஷத்தினால், ஜங்கம ஆராதனை செய்து, பஞ்சான்னத்தையும் அறுவகைப் பதார்த்தங்களையும் அளித்து பக்தியுடன் வணங்குவார்.

வீரமாஹேஸ்வரர்கள் அனைவரும் இஷ்ட லிங்கார்ச்சனை செய்ய எழுந்தருளியிருக்கின்ற காலத்தில், அவர் பக்தியுடன் தாமும் தமது கரதலத்தில் வீற்றிருக்கின்ற இஷ்டலிங்க மூர்த்தியைப் பூஜிக்க, ஆசனத்தில் உட்கார்ந்து, எதிரில் இருக்கும் சுத்த ஜலத்தை அபிஷேகம் செய்வதற்கும் முன்பே, மனத்தில் உண்டாகிய பேரானந்தக் கண்ணீராகிய சுத்த ஜலத்தை முற்றிலும் அபிஷேகம் செய்வார். பரிசுத்த மலர்களை அணிவிப்பதற்கும் முன்பே, மனமாகிய தாமரை மலரை அணிவித்து, நறுமணம் கமழ்கின்ற தூபார்த்தியை மகிழ்ச்சியுடன் கொடுப்பதற்கு முன்பே உள்ளே யிருக்கின்ற பஞ்சக் கரணங்களின் வாசனையாகிய தூபத்தை மகிழ்ச்சியாகக் கொடுப்பார். ஒளி வீசும் தீபார்த்தியைக் கொடுக்கும் முன்பே உள்ளேயுள்ள அறிவாகிய தீபார்த்தியை வழங்குவார். அறுசுவைப் பதார்த்தங்களையும் பஞ்சான்னத்தையும் ஆராதிக்கும் முன்பே, ஆன்மாவை ஆராதித்து, நெஞ்சம் கரைந்து, உடலிலுள்ள கருவிகரணங்களின் துஷ்ட காரியங்கள் அனைத்தும் ஒழிந்து, ஜோதிர் லிங்கத்தை தரிசித்துக் கொண்டு, தாமரை மலர் போன்ற முகம் மலர, மேன்மையான சிவானந்த

மாகிய அமுதத்தை அடிக்கடிப் புசித்து, பேரின்பக்கடலில் குளித்து, ஆத்மானந்தமானதும் ஏகாந்த மானதுமாகிய ஜ்யோதிர் லிங்கத்தை ஞானஸ்வரூபமாகிய பிராணலிங்கத்தினது அழகிய கைத்தலத்தில் வீற்றிருக்கச் செய்து, அங்கேயே பூஜித்து, தூய்மையான அன்னத்தை திருவமுது செய்ய வைப்பார்.

அதற்கு அவர் உடைவாளை உறையினின்றும் உருவி, வலது பக்கத்தில் வைத்துக் கொண்டு, "இந்த அன்னத்தை உண்ணாமற் போவாயாகில் நான் உயிரைவிடுவேன்" என்று சொல்லி, பரிசுத்தமான கறியமுதையும் அன்னத்தையும் அன்புடன் உருண்டையாக உருட்டி வைத்துக் கொண்டு, ஒவ்வொரு உருண்டையாக 'ஐயனே நீ உண்' என்று கொடுப்பார். அதை சிவபெருமான் வாங்கி வாங்கி மிகக் கொடிய பசி கொண்டவர் போல அன்புடன் உண்டருளினார்.

மேன்மையாகிய சிவப் பிரசாதமும் உண்மையாகிய ஜங்கமப் பிரசாதமுமாகிய எல்லாவற்றையும் அன்போடும் ஆனந்தத்தோடும் உண்டு வாழ்கிற தகுதியாகிய சிறப்பையுடைய சவுண்டையர் கீர்த்தியானது உலகம் எங்கும் பரவியது. அவரது புகழைப் போற்றுவோர் பின்வருவாறு பேசிக்கொள்வராயினர்.

"முன்பொரு காலத்தில், கரிகாற் சோழன் சிவபெருமான் திருவமுது செய்யும் பொருட்டு குற்றமில்லாத திருவமுதுக்காக உயர்ந்த வெள்ளிச் சம்பா அரிசி முந்நூற்றறுபது கலமும், கறியமுதுக்காக மிளகு மூன்று கலமும் அளந்து கொடுத்து, நறுமணம் கமழும், நெய்யையும் பாலையும் சீனிச் சர்க்கரையையும் நல்ல பரிமளமுள்ள பழங்களையும், செல்வங்களையும், பொற் கலங்களையும் கொடுத்தான். பிராமணர்கள் சிவமந்திரங்களை மனமகிழ்ச்சியுடன் ஜபிக்க, உயர்ந்த திரைச் சீலைக்கு அப்புறத்தில் சலனமற்ற அன்புடன் நிற்கின்ற கரிகாற் சோழனின் கண்களுக்குத் தெரியும்படி பரிமாறியிருக்கும் கறியமுதினையும் சிறந்த குடிநீர் முதலியவற்றையும் சிவபெருமான் தம் திருக்கரத்தினால் எடுத்துக் கடித்தும், உறிஞ்சியும் குடித்தும் திருவமுது செய்கின்ற சப்தத்தைக் கேட்ட செய்தியை உலகத்தார் கூறக் கேட்டிருக்கிறோம். வேறொரு சிவபக்தரான மாதிராச சென்னையர், பசிகொண்டிருந்து தாம் உண்கின்ற உணவு, சிவபெருமானுக்கு அர்ப்பிதமாகக் கடவது!" என்று சொன்னவுடன், அவருடைய அழகிய நாவே பொற்கலமாகவும், அமுது செய்கின்ற கூழே அமிர்தமாகவும் மாறி, 'அமுது செய்தோம்' என்று சிவபெருமான் திருவாக்கு முழங்கியது என்றும் உலகத்தார் சொல்வார்கள்.

"வீரசோளவ்வையார் என்கின்ற மங்கை நல்லார், தாக்ஷாராம் என்ற ஸ்தலத்தைக் கண்டு, முன்பொரு காலத்தில் பிட்டமுதுக்கு தக்க சிறந்த வாசனைத் திரவியங்களைக் கூட்டி, உட்கார்ந்து அதை உண்ணும்போது, அதன் சுவை மிகவும் நன்ருக இருந்ததை உணர்ந்து, "இது சிவபெருமானுக்கு அர்ப்பிதமாகக்கடவது!" என்று சொல்லி, அந்தப் பிட்டமுதை ஒரு மிகச் சிறந்த பட்டுத் துணியினுல் மூடி, தனது தாதியை அழைத்து,



'பெண்ணே' இதனை நீ, நமது பீமேஸ்வாருக்குப் படைத்து வருவாய்?" என்ருள். அவள் அந்தப் பிரட்டமுதை, பீமேஸ்வரரின் திருக்கோயிலுக்குச் சென்று, சிவ பெருமானின் சந்நிதி முன்பு வணங்கி, "சிவ பெருமானே! எனது தலைவி 'உமக்கு' இந்தப் பிட்டமுதை மகிழ்ச்சியுடன் படைத்து வரச் சொன்னுள். அதனுல் இதனை இங்கு கொண்டு வந்தேன்" என்று சொன்னுள். உடனே சிவபெருமான் தனது திருக்கரத்தால் அதனை அன்புடன் ஏற்று, நாவாரவும் வயிருரவும் திருவமுது செய்தார், என்றும் உலகத்தார் சொல்வார்கள்.

"இப்போது சுரிகைச் சவுண்டையர், மதுரமான அன்னத்தைக் கவளம் கவளமாக அன்புடன் கொடுக்கக் கொடுக்க, அதைச் சிவ பெருமான், பசியுடையவரைப் போலத் திருவமுது செய்வதைக் காண்கிருேம்" என்று ஜங்கமமூர்த்திகள் புகழ்ந்தனர்.

## 35. தெலுங்கச் சோமையர் கதை

சிவபெருமானது திருவடிகளைத் தவிர வேருென்றையும் சிந்தித்தறியாத சிவபக்தரான தெலுங்கச் சோமையர் என்ற ஒரு பெரியார் இருந்தார். அவர் குற்றமில்லாத வீரசைவர். அவர் உலகத்தாரைப் பரிசுத்தராக்க வல்ல புண்ணிய புருஷர். அவர் நாள் தோறும் சிவபூஜையையும் ஜங்கம ஆராதனையையும் செய்து வருவார்.

இந்நிலையில், ஸ்ரீ சைலத்தில் சிவானந்த முனிவர் என்ற தவ முனிவர் ஒருவர், வீரசைவ விரதத்தை அனுஷ்டித்து, சிவயோக சமாதியில் லயித்திருந்தார். அதனால் அவரது ஸ்ரீ பாதங்களி லுள்ள நகங்கள் வளர்ந்து வெண்மையான வெள்ளிக் கொடிகள் போலவும், விபூதித் தூளனஞ் செய்கின்ற அவரது திருமேனியை மூடிய ரோமங்கள் நிறைந்து வளர்ந்து வேரிறங்கி நிலத்திருந்தன. அதனால், அந்தச் சிவானந்த முனிவரின் மாணவர்கள் அவரை விட்டு நீங்காமல், கனிகளையும் கிழங்குகளையும் புசித்துக்கொண்டு, அவருக்குக் காவல் புரிந்து வந்தனர். அப்போது கந்தர்வர்கள் தத்தமது மனைவியருடன், அந்தக் காட்டிற்கு ஜலக்ரீடை செய்ய வந்தனர்.

அவர்கள், சிவானந்த முனிவர் சிவயோக சமாதியில் இருப் பதையறியாமல், அவர் இருக்குமிடத்தை வந்து பார்த்து, "இது என்ன வெள்ளிக் கொடிப் பதரோ, சிலையோ? அல்ல: மரமாகும். ஆயினும் இலைகளைக் காணவில்லை. இது தூங்குகின்ற பொல்லாத கிழக்கரடியே யாகும்!" என்று சொல்லிக் கொண்டார்கள்.

இவ்விதமாக வந்தவர்கள் சொன்ன வார்த்தைகளைக் கேட்ட சிவானந்த முனிவரின் மாணவர்கள், அவர்கள் மீது கோபங் கொண்டு, "கந்தர்வர்களே! சொல்லுதற்கரிய எங்களது சிவானந்த முனிவரின் திருமேனி உங்களுக்குத் தெரியவில்லையா? பிரம் மானந்த ஸ்வருபமுடைய எங்கள் குருநாதரின் திருமேனியை நீங்கள் இகழ்ந்து கரடி யென்று சொன்ன குற்றத்தால் நீங்கள் விண்ணுலக வாழ்வை இழந்து, மண்ணுலகை அடைந்த அதே கொடிய கரடிகளாய் அலைந்து திரிவீர்களாக!" என்று சாப மிட்டார்கள்.

அதைக் கேட்டதும், கந்தவர்கள், பயந்து நடுங்கி மாணவர் களின் திருவடிகளில் சாஷ்டாங்கமாக வணங்கி, "நாங்கள் செய்த துன்மார்க்கத்தினால் நீங்கள் கோபித்துக் கொடுத்த இந்தக் கொடிய சாபம் எப்போது எங்களுக்கு விமோசனமாகும்? என் பதைக் கிருபை செய்யவேண்டும் "என்று வேண்டினார்கள்.

"நீங்கள் கல்யாண புரியைச் சூழ்ந்துள்ள காட்டில் காட்டு மிருகங்களாகப் பிறப்பீர்கள். அங்கு சிலகாலம் கரடிகளாகச் சஞ் சரிப்பீர்கள். அப்போது அந்தக் காட்டிற்குப் புனிதரான சோமையர் வருவார். அவரது கரத்திலுள்ள பாணத்தால் நீங்கள் சாவீர்க ளாயின் இந்தச் சாபம் விமோசனமாகும். மேலும் நீங்கள் சிறந்த மோக்ஷத்தை யடைவீர்கள். இந்தச் சொல் உண்மையாகும்!" என்றார்கள் சீடர்கள்.

அவர்கள் சொன்னதைப் போலவே, கந்தர்வர்கள் கரடிக ளாகி, கல்யாணப் பட்டினத்தை யடுத்த காட்டை யடைந்து சஞ் சரித்துக் கொண்டிருந்தார்கள். அப்போது ஒருநாள், சோமையர் சிவபூஜைக்குரிய மலர்களைப் பறிப்பதற்காக அந்தக் காட்டுக்கு வந்தார்.

அவர் மலர்களைப் பறிக்கும் போது, அந்தக் கரடிக் கூட்டங் கள் அவரைப் பார்த்தன. இவரே சோமையராகும் என்று நிச்சயித் தன. அக்கரடிகளில் ஒன்று, சோமையரை நெருங்கிச் சென்று "ஐயா! எங்கள் தேகங்கள் அழிந்து போனுல் எங்களுக்கு நேரிட் டிருக்கின்ற இந்தச் சாபம் விமோசனமாகும்!'' என்று சொல்லித் தங்களுக்குச் சாபம் நேரிட்டவரலாற்றையும் தங்களது பூர்வ ஜன்மத்தைப் பற்றியும் கூறி அவரை வணங்கி, "பரம சாந்த மூர்த்தியே! அநேக நாட்களாக வேட்டையை விரும்பி, எங்களைக் கொல்வீராளுல், நாங்கள் மோட்சத்தை அடைவோம். அதுவும் பொன்னுற் செய்த இரத்தினங்களினுல் இழைக்கப்பட்ட விமானத் தில் ஏறி, நீரும் உலகத்தாரும் காணும்படி ஸ்ரீமகா கைலாசத்தை அடைவோம். இந்தச் செய்தியை, எங்களுக்குச் சாபமிட்ட முனிவர்களே கூறியிருக்கிருர்கள். ஆகையால், நீங்கள் எங்க ளுக்கு மோஷத்தை அனுக்கிரகம் செய்யவேண்டும்!'' என்று கூறியது.

அந்தக் கரடியின் வார்த்தைகளில் சோமையருக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. சந்தேகமாக இருந்ததால், தமது ஞான திருஷ்டி யில் பார்த்து, உண்மை என்று அறிந்து, அந்தக் கரடிக்குத் தக்க பதிலைச் சொல்லிவிட்டு, சிவபூஜைக்கான மலர்களுடன் தமது திருமடத்துக்குச் சென்று விட்டார்.

மறுநாள், கரடி வேட்டைக்குத் தயாரானுர். அழகிய பச்சை நிறமுடைய சட்டையை அணிந்து அதே போன்ற பச்சை நிற ஆடையை தலையில் கட்டிக் கொண்டார். வில்லையும் பாணங் களையும் எடுத்துக் கொண்டார். பிறகு அந்தக் காட்டுக்குச் சென்று வேட்டையாடத் துவங்கினுர். அப்போது கரடிக் கூட் டங்கள் அவரைச் சூழ்ந்தன.

அவர், தமது வில்லை வளைத்து, நாணினை வலித்துக் கொல்லு தற்குரிய பெரிய அம்புகளைத் தொடுத்து, ஒவ்வொரு கரடியாக அம் பெய்து கொன்ருர். கரடிகள் ஒவ்வொன்ருகச் செத்து விழுந்து கந்தர்வ ரூபங்களையடைந்து, ஜங்கமமூர்த்திகளாகிய சோமையரை வணங்கி நின்றன. அப்போது வானத்திலிருந்து பொன்மயமான விமானம் ஒன்று வந்து இறங்கியது. அதில் கந்தர்வர்கள் ஏறிக் கொண்டு மகாகைலாசம் போய்ச் சேர்ந்தார்கள். இந்த நிகழ்ச்சி

களைச் சோமையரும் வேடர்களும் மகிழ்ச்சியுடன் பார்த்தார்கள், காட்டு நாய்களுங்கூட மகாகைலாசத்தைச் சேர்ந்தன. அப்போது அந்தக் காட்டிலுள்ள வேடர்கள் "நாம் செலுத்தும் அம்புகளுக்குச் சிக்காமல் தெலுங்குச் சோமையரின் பாணங்களுக்கு அடைப மீரு மல் செத்து விழுந்ததற்குக் காரணம் என்ன? அப்படி செத்ததும், கந்தர்வர்களாகத் தங்கமயமான விமானத்தில் ஏறி மகாகைலாசம் செல்வதற்குக் காரணம் என்ன? இக்கரடிகளின் வரலாறு என்ன?' என்று அதிசயித்து, இந்த நிகழ்ச்சிகளை, விஜ்ஜல மன்னரிடம் சென்று அறிவித்தார்கள்.

அதனால் விஜ்ஜலராஜனும், வசவண்ணரும், கல்யாணபுரியி லுள்ள ஜனங்களும் நடந்தவற்றின் உண்மையைத் தெரிந்து கொள்ளும் பொருட்டு, காட்டுக்குத் திரண்டு வந்தார்கள். அப் போது சில கரடிகள் சோமையரின் அம்புகளால் இறந்து கந்தர்வர் களாகி, தங்க விமானத்தில் ஏறி மகாகைலாசம் செல்வதை, மன்ன னும் பார்த்தான், மக்களும் பார்த்தனர். யாவரும் வியப்படைந்து, தெலுங்குச் சோமையரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார்கள். வசவண்ணரும் வணங்கி, சோமையரை நோக்கி, "குரு பூஜை என்கிற அழகியதும் சிறந்ததுமான உடைவாளினால் அகப்பட்டுக் கொண்டுள்ள மனைவாழ்க்கையின் பற்றாகிய ∴ மரையைச் சாகச் செய்தும், ஜீவ ஈஸ்வர ஐக்கியம் என்ற கனமானதும் கொடியது மாகிய கைவேலினால் ப்ராகிருத கர்மங்களாகிய யானைகளை அழித் தும் சிவாக்ஞை என்ற கோடரியினால் பூர்வாஸ்ரய ஸம்ஸ்காரங் கள் என்று சொல்லப்பட்ட புலிக் கூட்டங்களைச் சாகடித்தும், ஒளி மிகுந்த ஸுஞ்ஞானமாகிய வாளினால் மோஹமாகிய காட் டெருமையைச் சாகச் செய்தும், உண்மையாகிய வீரபக்தி என்ற மேன்மையான கட்டாரியினால், மிகவும் கொடிய காமம் முதலிய கர டியைக் கொன்றும், ஒப்பற்ற தர்மமாகிய பெரிய தண்டாயுதத்தை விட்டு நீங்காமல், உலகத்திலுள்ள ஏடனைகளாகிய சர்ப்பக் கூட் டங்களைக் கொன்றும். சிவபக்தியை விருத்தியடையச் செய்வதற் குரிய வீரசைவ சமயாசாரமாகிய நீண்ட இரும்புலக்கையினால் பாவமாகிய பொல்லாத ஓநாய்களைக் கொன்றும், சிவானுக்கிரகம் சிவபக்தி என்கின்ற வில்லினாலும் அம்பினாலும், விரைந்து பறக் கின்ற பஞ்சேந்திரியங்களாகிய பறவைகளைக் கொன்றும், சிறந்த சிவஞானமாகிய வேலினால் பரசமயவாதிகளாகிய சிங்கங்களைக் கொன்றும், இவ்விதமாக மாயா ரூபமாகிய உலகப் பற்றுக்கள் அனைத்தையும் வென்ற தைரியசாலியாகிய சோமையருக்கு இந்தக் கரடிகளை கந்தர்வர்களாக்கியதோ ஒரு பெரிய காரியம்?" என்று புகழ்ந்து வணங்கினர். பிறகு அனைவரும் கல்யாணப்பட்டினத் திற்குச் சென்று வாழ்ந்திருந்தார்கள்.

---

∴ மரைகள்—ஒருவகை மான்கள்

## 36. ஏகாந்த ராமையர்

அப்பாலூர் என்னும் ஸ்தலத்தில் ஏகாந்த ராமையர் என்ற சிவபக்தர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவரை எல்லோரும் பூலோகருத்திரர் என்று அழைத்து வந்தனர். அவர் வீரபத்திரரைப் போன்ற பராக்கிரமமுடையவர். அவர் சிவ பூஜையின் முடிவில் ஸ்ரீமகா கைலாயத்தில் வீற்றிருக்கும் சிவபெருமானது திருவோலக்கத்தை அன்புடன் தரிசித்து. சிவானுபவ சுகத்திலுண்டாகிய பரம மகிழ்ச்சியினுலும் அன்பினுலும் ஏகாந்த ஸ்தானத்தில் சிவயோக சமாஜ நிஷ்டையில் வீற்றிருந்து பேரின்பத்தை அனுபவிப்பார்.

ஜங்கம மூர்த்திகளின் தாமரை மலர் போன்ற திருவடிகளில் வசவண்ணர் அன்பு செய்கின்ற புகழை அவர் கேள்விப்பட்டு, வசவண்ணரைத் தரிசிக்கச் சென்று, கல்யாணபுரத்திலேயே தங்கியிருந்தார். அவரைப் போலவே வாச்சையர், சிவநாகமையர் என்ற சிவனடியார்கள் இருவரும் பசவண்ணரின் புகழைப்பற்றிக் கேள்விப்பட்டு, அவரைச் சந்தித்து அவரது திருமடத்திலேயே தங்கியிருப்பராயினர்.

## 37. சங்கமப் பிராணியான கதை

வசவண்ணர் ஒருநாள் சிறந்த ஜங்கம மூர்த்திகளைப் பூஜை செய்ய விரும்பினர். அதன்படி பூஜை செய்த பிறகு இஷ்டலிங்க மூர்த்தியை மனமுருகி பூஜை செய்யலானர். சிவபெருமானை இடைவிடாமல் ஞானதிருஷ்டியினல் தரிசித்து மனத்திருப்தியடைதற்குரிய சிவானந்தமாகிய தேவாமிர்தத்தை உண்டு, அன்புடன் தியானித்து தொழுது வணங்கி, நெருப்பிற்பட்ட மெழுகு போல மனமுருக, பக்தியோடு பேரின்பத்தை விரும்பி, கண்களில் ஆனந்தக் கண்ணீர் மல்க பக்திப் பாடல்களைப் பாடிப் பரவசமுற்றிருந்தார்.

அப்போது எந்தக் காலத்திலும் வந்திராத ஒரு புதிய ஜங்கம மூர்த்திகள் வந்தருளி வசவண்ணர் சிவபூஜை செய்கின்ருர் என்பதை வாயிற் காப்பவர்களால் அறிந்து சென்றுவிட்டார், உடனே,

அந்த ஜங்கமமூர்த்திகளோடு வசவண்ணருடைய உயிரும் போய்ச் சேர்ந்தது, அதனால் அவரது உடலானது தறிபோல அசையா திருந்தது. சிவயோக நித்திரையிலுள்ள வசவண்ணர் பேரானந்த லயிப்போடு ஜியோதிர்லிங்க நிஷ்டையில் நிலைத்திருந்தார்.

•

புதிதாக வந்தருளிய உண்மையான வீர விரதமுடைய ஜங்கமமூர்த்திகளிடம் சென்ற வசவண்ணரின் உயிர் வெளிப் படாமையினால், ஜங்கம ஆராதனை செய்கிற பக்தியும் ஜங்கமமூர்த் திகளின் திருவடிகளை வழக்கமாக விதிப்படித் தமது கைகளினால் செய்யும் செயலும், தோத்திரஞ் செய்யும் துதியும் யாவும் ஒழிந்து, பரஞ்சோதியில் கலந்து தொங்கும் ஊஞ்சற் கயிறு தெரித்து போகும் போது அது அசைவற்றுப் போவதுபோல, பசவண்ணரின் ஐம்புலன் களின் செயல்களும் அந்தக்கரணங்களின் செயல்களும் ஒழிந்தன. சூரியன் அஸ்தமிக்கும்போது கிரணங்களும் அவனுடனே சென்று விடுவதைப்போல ஜங்கம மூர்த்திகளுடைய ஸ்ரீபாதங்களில் பதிந்த மனமும் அறிவும் முற்றிலும் ஒழிந்து உள்ளும் புறமும் ஒரு செயலு மின்றி விகசித்த அஷ்டதளங்களையுடைய ஹ்ருதய கமலமே அந்த ஜங்கம மூர்த்திகளுடைய ஸ்ரீபாத கமலமாகப் பதிந்தது. வச வண்ணர் சிவானந்தத்தில் ' ஆழ்ந்திருந்தார். இதை அவரது தமக்கை மகனாகிய சென்ன பசவண்ணர் ஞானதிருஷ்டியினால் உணர்ந்தார். உடனே அவர் பசவண்ணரைத் துதிக்கலானார்.

"ஜலத்தை முகந்து மூழ்கிப்போன குடமானது கொஞ்சமே னும் காணமுடியாதவாறு ஆழ்ந்து விடுவதைப்போல, ஜோதிலிங் கத்தில் கலந்து, வெளிநாட்டமில்லாத சிவானந்தமோ?

மாயா சம்பந்தமுடைய உடலின் குற்றமாகிய தூக்கத்தினின் றும் விழித்துப் பேரானந்தமாகிய சிவயோக நித்திரையையுடைய எனது ஞானாசிரியராகிய பசவண்ணர், அலையிற் ஆழ்கடல் போல வும், காற்றிலலைபடாத தீபத்தை போலவும், ஆசையானது அதி கரிக்கின்ற இந்திரியங்கள் முற்றும் ஒழிந்து, மேகக் கூட்டங்கள் இல்லாத ஆகாயம் போலவும் பேரானந்தமுடைய சிவைக்கியத்தி னால் உண்டாகிய பரிபூரண ஆனந்தத்தில் பரவசமானாரோ? தமது தாமரை மலர்போன்ற கைத்தலமான சிவபெருமானது திருமேனி மீது படுமாயின் வருத்துமென்று நினைத்து தமது இதய கமலத் தையே சுகாசனமாகச் செய்து, அதில் அவரை எழுந்தருளச் செய்து, காற்றும் வெய்யிலும் பட்ட ஜலத்தை அபிஷேகம் செய் வோமாயின் சிவபெருமானின் திருமேனி கன்றிப் போகுமே என்று நினைத்து சத்தியமாகிய ஜலத்தை அபிஷேகம் செய்து பூமியில் முளைக்கும் மலர்கள் மூடானவை என்று நினைத்து சிதாகாசத்தில் விளங்கும் கமலதளங்களை அர்ச்சிக்கின்றாரோ? நெருப்பிலிட்ட தூபப் புகையினால் சிவபெருமானின் திருமேனி கறுத்துப் போகும்

என்று நினைத்து மெய்ஞ்ஞானமாகிய குற்றமில்லாத நெருப்பில் உபசாந்தம் என்ற தீபத்தை இட்டுக்கொடுத்து, திருவமுதை சக்கை என்று நினைத்து சுவையும் மேன்மையும் உடைய பக்தியைத் திருவமுதாகப் படைக்கிறாரோ? 'தம் கண்களால் அன்புடன் பார்த்தாலும் கூடச் சிவபெருமானின் திருமேனிக்குத் தோஷம் என்று நினைத்து பழகிய தியானத்தால் நோக்குகின்றாரோ? உடலானது மயிர்க்கூச் செறித்தால் வியர்வை உண்டாகுமே என்று மனத்தாலேயே மகிழ்கின்றாரோ?''—இவ்வாறு சென்ன வசவண்ணர் தமது ஞானாசாரியராகிய வசவண்ணரது சந்நிதானத்தில் வணங்கித் துதித்து உடலும் மனமும் இளக பக்தி ஸ்வரூபியாய் கண்களில் கண்ணீர் மல்க, மயிர்க்கூச்செறிய என்றுமடையாத பூரிப்புடன் மெய்மறந்து, சந்தேக மனத்துடன் இங்குமங்கும் உலாவிக் கொண்டிருந்தார்.

இந்தச் செய்தியைக் கல்யாணபுரத்திலிருந்த பக்தர்களும் ஜங்கம மூர்த்திகளும் கேள்விப்பட்டுப் பசவண்ணர் சிவபூஜை செய்யும் காலத்திலுண்டாகிய சிவயோக சமாதி நிலையின் பெருமையைக் கண்டு, ஆச்சரியமடைய, அவர் அத்தகைய நிலையை அடை காரணம் என்னவென்று ஆராயலானார்கள். ஜங்கமமூர்த்திகள் முதலில் வாயிற்காப்பவர்களை அழைத்து, ''பசவண்ணர் சிவபூஜை செய்யும்போது நடந்த செய்தி என்ன?'' என்று கேட்டார்கள்.

காவலர்களில் ஒருவன், ''ஐயா! அவர்கள் பூஜையில் இருக்கும்போது, ஜங்கமமூர்த்தி ஒருவர் எங்களிடம் வந்து, ''வசவண்ணர் என்ன காரியம் செய்கிறார்?'' என்று கேட்டார். நாங்கள், ''ஜங்கம மூர்த்திகளே, அவர் அழிவில்லாத சிவயோகத்தில் நிலைத்து பேரின்பமடைந்து, தம்மை மெய்மறந்து உள்ளே இருக்கிறார்" என்று சொன்னோம். அதைக் கேட்டதும் அவர் ஒன்றும் பேசாது போய்விட்டார். இதுதான் நடந்த செய்தி'' என்றனர்.

இதைக் கேட்டதும், ஜங்கமமூர்த்திகள், வசவண்ணர் சிவபூஜை செய்யும் அறைக் கதவைச் சிறிது திறந்து காட்டும்படி வேண்டினர். அப்போது சென்ன பசவண்ணர் அவர்களை நோக்கி, ''மேன்மையாகிய லிங்கத்திற்கு உயிர், குருவேயாகும். லிங்கமானது ஆசாபாசத்தை ஒழிக்கற்குரிய பக்தர்கள் தாங்கியுள்ள உயிரேயாகும். எனக்கு ஞானோபதேசஞ் செய்கிற பசவண்ணருக்கு எப்போதும் உயிரானது ஜங்கமமூர்த்திகளேயாவர். இதற்கு கூடலி சங்கமேஸ்வரனே சாக்ஷியாவான். தூய்மையாகிய உங்களது பாதத்தீர்த்தத்திலும் உங்களுடைய பரிசுத்த சேஷப் பிரசாதத்திலும் விருப்பமுடைய ஞானியரது சிவயோகத்தின் பெருமையை நீங்களே அறிய வல்லவர்கள்'' என்றார்.

உடனே அவர்கள் காவற்காப்போரை, நோக்கி "நீங்கள் வச வண்ணர் சிவபூஜையை விரும்பி யோகத்திலிருந்த காலத்தில் இங்கு வந்து திரும்பிச் சென்றுவிட்ட பரிசுத்தராகிய அந்த ஜங்கம மூர்த்தி களைத் தேடி அன்புடன் தொழுது அழைத்து வாருங்கள்" என்றார். அதைக் கேட்டதும் காவலாளிகள் சிவபெருமானது திருக்கோயில் கள், திருமடங்கள் ஆகிய இடங்களில் எல்லாம் ஓடிச்சென்று தேடிப்பார்த்தார்கள். பிறகு, சிவபெருமானைப் போன்ற அந்த ஜங்கமமூர்த்திகளை அழைத்துவந்து, மேன்மைபொருந்திய ஜங்கம மூர்த்திகள் சேர்ந்திருக்கின்ற திருக்கூட்டத்தில் அழைத்துக் கொண்டு வந்தார்கள், அதுவரை உயிரற்று அசையாதிருந்த வசவண்ணர் கண்விழித்து எழுந்து தொழுது நின்றார். எல்லோ ரும் அந்தப் புதிய ஜங்கமமூர்த்திகள் அனுஷ்டிக்கின்ற வீரவிரதம் யாதோ என்று வியந்தனர். பிறகு, அனைவரும் அவரவரது திரு மடத்தை அடைந்தனர்.

---

# 38. கின்னரையர் கதை

---

வசவண்ணர் பெருமையும் புகழும் பெற்றிருக்கிற காலத்தில் அவருடைய அன்புத் தோழரான கின்னரப் பிரம்மையர் தேக வியோகமடைந்தார். வசவண்ணர் துக்கசாகரத்தில் ஆழ்ந்தார். அவர் கின்னரப் பிரம்மையரை நினைத்து புலம்பினார்.

"சிவபக்தனே! இவ்வுலகில் நான் மனம் நொந்து என்பு உருகியிருக்க, நீ என்னை நீங்கிச் சென்று தேவர்களின் தலைவ னாகிய சிவபெருமானை அடைவதற்குக் காரணம் என்ன? சற்குண சம்பன்னனே! சிவஞான அமிர்தமே!" என்று அலறி கண்களில் கண்ணீர் மழைத்தாரைபோலச் சொரிய பலம் குன்றியிருந்தார். இதனால் அவரது திருமேனி ஒடுங்கியது; மனம் கலங்கியது. இவ்வாறு வசவண்ணர் மனந்தடுமாறி இருப்பதை அறிந்த ஜங்கமமூர்த்திகள், அவரது திருமடத்தில் வந்து கூடினார்கள். அவர்கள் சிறந்த வீரசைவராகிய மடிவாலமாச்சையர் அங்கு வராததைக் கண்டனர். உடனே அவர்கள் படியாரிப்பச்சையர் என்பவரை அழைத்து, "ஐயா, நீங்கள் மடிவாலமாச்சையரிடத்தில் இந்தச் செய்தியை அறிவித்து. அவரை உடனடியாக இங்கே அழைத்து வாருங்கள்!" என்றனர்.

அவரும் விரைவாகச் சென்று, மடிவாலமாச்சையரைக் கண்டு அவரை வணங்கி, நடந்தவற்றை அறிவித்தனர். அதற்கு மடிவாலமாச்சையர், அவர்களை நோக்கி, "இப்போது வசண்வ

ணர் என்ன செய்கிறார்? அவரது திருமடத்திற்கு வந்திருப்பவர்கள் யார்?" என்று கேட்டார். அதற்கு படியாரிப்பச்சையர், "ஐயா! சகனேச மாதிராசையர் முதலிய ஐங்கமமூர்த்திகள் பலர் மடத்திற்கு எழுந்தருளியுள்ளார்கள். அந்தக் கூட்டத்தில் வசவண்ணர், கின்னரப் பிரம்மையரது திருமேனியைவிட்டு நீங்காமல், அழுதுகொண்டே இருக்கிறார்!" என்றார்.

அவ்விதம் படியாரிப்பச்சையர் கூறியதும், மடிவாலமாச்சையர், "மேன்மையுடைய ஐங்கமமூர்த்திகளுக்கும் முன்பு பசவண்ணர் இப்படி அழுவதற்குக் காரணம் யாது? ஜீவஸ்வருபிகளாகிய ஐங்கமமூர்த்திகள் தமக்கு உயிர் என்று சொன்ன சொல்லானது இம்மாத்திரம்தானோ? அவர் ஏன் தமது வீரவிரதத்தை நெகிழவிட்டு, உடலை விரும்பி, இறுகப் பிடித்துக் கொண்டாரோ? தெளிந்த பக்தியே திருமேனியாகக் கொண்ட அவர், இப்போது தாம் சொன்ன சொல்லை நீக்கிவிட்டு உயிரை விரும்பினாரோ? உறுதியான பக்தி இருக்குமானால் அவர் ஒப்பாரி வைத்தா அழுவார்? கின்னரப் பிரம்மையர் சிவபெருமானிடத்திலே ஐக்கியப்பட்டார் என்பதை உணர்ந்து மகிழ்ந்து, பூரிப்பதைவிட்டு, அழுவதற்கு காரணம் என்ன? பாபத்தினின்று நீங்கிய சிவபக்தர்களும் ஐங்கம மூர்த்திகளும் காணச்சிறந்த சிவபக்தரான பசவண்ணர் இப்படி அழலாகுமா? இதனால் உண்டாகும் பயன்தான் யாது? வீரவிரதத்தை மறந்துவிட்டவரை நாம் பார்க்கமாட்டோம். ஆகையால் நீங்கள் சென்று கின்னரப் பிரம்மையருக்குச் செய்யவேண்டிய ஈமக்கிரியைகளைச் செய்யச் சொல்லுங்கள்!" என்றார்.

படியாரப்பச்சையர், பசவண்ணரின் திருமடத்திற்குச் சென்று மடிவாலமாச்சையர் கூறியவற்றைச் சொன்னார். அவர் சொன்னவற்றைக் கேட்டதும், பசவண்ணர் தமது வீரவிரதத்தைப்பற்றி யோசித்தார். உடனே, பசவண்ணரது உயிர் கின்னரப் பிரம்மையரிடத்திற் சேர்ந்தது. அங்கிருந்த ஐங்கமமூர்த்திகள் பசவண்ணரின் உயிர் நீங்கிய திருமேனியைப் பார்த்து முகம் வாடினர். "இது என்ன அற்புதம்?" என்று திகைத்தனர். மன திடமும் வீரவிரதமுங்கொண்ட மடிவாலமாச்சையரின் சொல்லானது தமது காதிற்பட்ட மாத்திரத்தில் தமது உயிரை விட்டதைக் கண்டு, அவர்கள் சோகமடைந்தனர். பிறகு அவர்கள் படியாரிபிச்சையரைக் கூப்பிட்டு மடிவாலமாச்சையரிடம் நடந்தவற்றைச் சொல்லிவிட்டு வருமாறு அனுப்பிவைத்தார்கள்.

நிகழ்ந்தவற்றை மடிவாலமாச்சையர் கேட்டதும், மனமகிழ்ந்து, "பாபத்தினின்றும் நீங்கிய ஐங்கமமூர்த்திகளே எனது உயிர் என்று சொன்ன சொல்லை, நிலைநிறுத்தவல்ல மனோதிடத்தை

யுடையவனே! பசவண்ணனே! சலனமற்ற ரத்தின தீபமே!" என்று துதித்துவிட்டு. வீரபத்திரக் கடவுளைப்போல, பசவண்ணரின் திருமடத்திற்குச் சென்றார். அங்கிருந்த ஜங்கமமூர்த்திகளின் திருக்கூட்டத்தில் விழுந்து வணங்கினார்! பிறகு, கின்னரப் பிரம்மையாின் சடலத்துக்கு அருகே சென்று, "சிவபக்தர்களுக்கு உயிர் போன்றவரே! தத்தவப் பொருளே! பக்திரத்தினமாகிய பசவண்ணனையும் உன்னுடன் அழைத்துக் கொண்டு சிவபெருமானிடம் சேரலாமோ? இந்தப் பூமியில் சைவத்தைப் பரவச் செய்துகாண்பிக்காமலேயே நீங்கள் இருவரும் ஒருமித்து சென்றுவிட்டால், அந்தக்காரியம் முடிவுபெறுமோ? பசவண்ணர், இந்த உலகத்தை விட்டுப்போவாராயின் பூமியில் சிவபக்தி என்ற பெயரே இல்லாமற் போய்விடுமே! ஆகையால் கின்னரப் பிரமையரே, பசவண்ணர் மனம் மகிழ வாழ்கின்ற காலம் முழுவதும் நீங்களும் அவருடன் கூடவே வாழுங்கள்!" என்றார்.

உடனே, கின்னரப் பிரம்மையரின் திருமேனி பையப்பைய அசைவுற்றது. நித்திரையில் கனவு தெளிந்து எழுந்திருப்பவரைப்போலக் கின்னரப் பிரமையர் எழுந்தார். உடனே மடிவாலமாச்சையரின் திருவடிகளை வணங்கினார். மற்றும் அங்கிருந்த ஜங்கமமூர்த்திகள் அனைவரையும் வணங்கினார். அதேசமயத்தில் வசவண்ணரும் உயிர்ப்பெற்று எழுந்து, வடிவாலமாச்சையரையும் மற்றைய ஜங்கமமூர்த்திகளையும் வணங்கினார். பசவண்ணர் மடிவாலமாச்சயரை நோக்கி, "கிருபா மூர்த்தியே! உறுதிச் சொற்களைச் சொல்வோமாயினும் கோபியாதவரே! திருவுளம் மகிழ்ந்த இடங்களில் உயிரை அனுக்கிரகிக்கவல்ல ஸ்வயாதிபதியே! வீரசைவாசாரத்தைக் காப்பாற்ற வல்லவரே! அழியாத சித்தியை யுடையவரே! என்று துதித்தார், மற்ற ஜங்கம மூர்த்திகளும் மடிவாலமாச்சையரை கைகூப்பி வணங்கினார்கள். அப்போது மடிவாலமாச்சையர், அவர்களை நோக்கி, "அறிவில்லாதவனாகிய அடியேனை ஒருபொருட்படுத்தி மதப்பதற்குக் காரணம் யாது? தயவுசெய்து அடியேனை உயர்த்திச்சொல்லாதிருங்கள்" என்று அவர்களை வணங்கினார்.

அப்போது ஜங்கம மூர்த்திகள் மடிவாலமாச்சையரை நோக்கி, "ஐயா! செல்வத்தைத் தரலாம்; ஆனால் உடம்பைத் தரமுடியாது. செயலைச் செய்யலாம், உள்ளத்தைப் பிரித்துத் தரமுடியாது. அன்பினால் உடலைத் தழுவலாம்,ஆனால் உயிரையே கொடுத்துவிட முடியாது. வைராக்கியமிருந்தால் அதுவும் கூடும். அருமையான உயிரானது ஜங்கமமூர்த்திகளுடனே, அவர் உயிர் சென்றால் கூடவே செல்லுவதும் அவர் உயிர் வந்தால் கூடவே வருவதும் இந்தப் பசவண்ணர் ஒருவருக்கே இயலும்!" என்று புகழ்த்தனர்.

“இந்தப் புகழ்ச்சிக்கு அடியேன் ஒப்பமாட்டேன்!” என்றார் வசவண்ணர்.

ஜங்கமமூர்ந்திகள் அவரையும் கின்னரப் பிரம்மை யரையும் வணங்கித் தங்கள் திருமடங்களுக்குச் சென்றார்கள். மடிவாலமாச்சையர் பசவண்ணரைத்தமது திருமாளிகைக்குச் செல்லும் படி விடை கொடுத்து விட்டு, தாமும் தமது திருமடத்திற்கு திரும் பினார். கின்னரப் பிரம்மையர் மகிழ்ச்சியுடன் மடிவாலமாச்சை யரின் பெருமையைப் புகழ்ந்து வியந்தார்.

# 39. மேதாகேதையர் கதை

மூவகைப்பட்ட பக்தியுடைய பசவண்ணர் சிறந்த உயர் கிருபா மூர்த்தியாகிய ஜங்கம மூர்த்திகளே!” என்று சொன்ன சொல்லைத் திரிகாலங்களிலும் உலகத்தார் அறிந்து கொள்ளும் பொருட்டு, மேதாகேதையர் என்ற சிவசரணரின் உயிரைச் சிவபெருமான் கவர்ந்து சென்றார். உடனே அவரது திருமேனியை விட்டு உயிரானது சிவபதமடைந்தது. அதைக் கண்ட கல்யாண புரத்துச் சிவபக்தர்களும் பசவண்ணரும், மேதாகேதையரின் திரு மடத்திற்குச் சென்று கூடினர். அங்கு மடிவால மாச்சையர் வர வில்லை. எனவே, ஜங்கம மூர்த்திகள் அனைவரும் அவரை அழைத்து வரும்படிப் படியாரிப் பாச்சையரை அனுப்பி வைத் தனர். அவர், மடிவால மாச்சையரிடம் சென்று, அவரை வணங்கி, “ஐயனே! மேதாகேதையர் நமது சிவபெருமானின் திருவடி நீழலைச் சேர்ந்தார்” என்று சொன்னார்.

உடனே, மடிவால மாச்சையர், “அங்கு ஜங்கம மூர்த்திகளில் யார் யார் வந்திருக்கின்றனர்?” என்று கேட்டார். அதற்குப் படி யாரிப் பாச்சையர், அல்லையர், மதுவையர், அல்லமையர், ஜகதே வத் தண்டநாதர், சகனேச மாதிராயர், தொரையர், இப்பையர், கின்னரப் பிரமையர், தெலுங்குச் சோமையர், கேசிராசையர், பிப்ப பாச்சையர், தாசிமையர், காசிநாதய்யர், கல்லையர், முசுண்டிச் சவுண்டையர், சங்கரையர், மாயிதேவர், கணதாசி பீமையர், சுரி கைச்சவுண்டையர், மொறட வேமையர், கன்னபிரமையர், கலைக் கேத்த பிரமையர், வஞ்சகமில்லா சிவநாகமையர், கொக்கிதேவர், கக்கையர், ஏகாந்தராமையர், விளாசித்தேவர், சென்னபசவண்ணர்

முதலிய பக்த மாஹேஸ்வரர்களும் ஜங்கம மூர்த்திகளும் பசவண்ணரும் வந்திருக்கிறார்கள்'' என்று படியாரிப்பாச்சையர் கூறினர்.

அதைக் கேட்டதும் மடிவால மாச்சையர் சிரித்து, "பசவண்ணர் தமது வீர விரதத்தை நெகிழ விட்டு, மேதாகேதையரின் உயிர் போனதும், தம் உயிர் போகாமல் ஜீவித்திருக்கின்ற காரணம் என்ன? அவனோ, தனக்கு ஜங்கம மூர்த்திகளே உயிர் என்று சொல்வானே! அத்தகைய சொல்லை மறந்துவிட்ட அந்த விரத பங்கனை, பழியினையுடைய அவனுடம்பை நான் காணக் கூடாது. தீண்டவும் கூடாது. சிவபெருமான் மேதாகேதையரின் உயிரைக் கவர்ந்து அழைத்துச் சென்றருளியதும் அவருடன் கூடத் தானும் போகாத அந்த விரதப்பிரஷ்டன் இருக்கிற சபைக்கு நான் வருவதற்கில்லை. அவனையும் அவனுடன் இருப்பவரையும் பார்ப்பது பாவமாகும்! அவனை நான் நினைக்கவும் மாட்டேன். கணக்கற்ற பக்த மாஹேஸ்வரர்களும் ஜங்கம மூர்த்திகளும் நிறைந்திருக்க நான் அங்கு போய்ச் செய்கின்ற காரியம் என்ன? எனக்கு அதைவிடக் காரியங்கள் நிறைய இங்குள்ளன. நீ போகலாம்!'' என்றார்.

அதைக் கேட்டதும் பாச்சையர் மனம் பதறி, உடல் நடுங்க ஓட்டமாய்ச் சென்று, அங்கு, நிறைந்திருந்த ஜங்கம மூர்த்திகளின் திருவடிகளில் வீழ்ந்து, வணங்கி, பயபக்தியுடன் எழுந்து நின்றார். அவர்கள் அவரை நோக்கி, "மடிவால மாச்சையர் ஏன் வரவில்லை?'' என்று கேட்டனர்.

அதற்கு படியாரிப் பாச்சையர் அவர்களைப் பார்த்து, "நான் அங்கு நடந்ததை பசவண்ணர் முன்பு சொல்லப்பயப்படுகிறேன்! சொல்லவும் மாட்டேன்!'' என்றார்.

"பயமில்லாமல் சொல்லுங்கள்'' என்று ஜங்கம மூர்த்திகள் கூறியதும், மடிவால மாச்சையர் சொன்னவற்றை படியாரிப் பாச்சையர் கூறினார். உடனே, பசவண்ணருக்குத் தமது வீர விரதம் நினைவிற்கு வந்தது. அந்தக் கணத்திலேயே பசவண்ணரின் உயிர் சிவலோகத்தை அடைந்தது. பசவண்ணர் தேக வியோக மடைந்தாரே என்று ஜங்கம மூர்த்திகளும் பக்த மாஹேஸ்வரர்களும் துக்க மடைந்து, "மேதாகேதையரோடு பசவண்ணருடைய மேன்மையான உயிரையும் சிவபெருமான் அழைத்துச் சென்று விட்டார். இனி சிறந்த சிவபக்தி என்பதே தொலைந்து விட்டது. ஹர ஹரா!'' என்று அழுது, படியாரிப் பாச்சையரைப் பார்த்து, "நீ போய் மடிவால மாச்சையரிடம் சென்று இந்தச் செய்தியைச் சொல்லி விட்டு வா'' என்றனர்.

"அவர் அன்புடன் ஓட்டமும்நடையுமாக மடிவால மாச்சை யரிடம் சென்று வணங்கி, பசவண்ணரின் செய்கையை சொன்னார்.

உடனே மடிவால மாச்சையர் மகிழ்ச்சி யடைந்து, "பசவண் ணனே! வீரவிரதத்தைப் பங்கமாகாதபடி ஸ்தாபித்தவனே! பிறப் பின் வேரைப் பறித்தவனே! மின்னல் போலவும், நீர்க்குமிழி போல வும் காற்றைப் போலவும் மறந்து போன வீரவிரதத்தை நினைப் பூட்டியதுமே உன் உயிர் மேதா கேதையரிடம் சேர்ந்து, சிவ பெருமானை அடைந்ததால் சொல்லுந் தரந்தான் யாது? "என்று சொல்லி, ஜங்கம மூர்த்திகளை வணங்கினார். அப்போது ஜங்கம மூர்த்திகளும் பக்த மாஹேஸ்வரர்களும், பசவண்ணரின் உடலை நோக்கி, "தண்ட நாயகனே! ஜங்கம மூர்த்திகளுக்குத் துணைவ னாகிய கற்பக விருட்சமே! வசவண்ணனே! ஜங்கம பூஜைக்கு ஆதாரம் யார்? நீ சென்றமையால் சிவபக்தியானது சூரியனில் லாத பகலும், சந்திரனில்லாத இரவும், வெட்கமில்லாத பெண் ணும், ஒளி பொருந்திய தீபமில்லாத வீடும், ஈகையில்லாதவனு டைய செல்வமும், நால்வகைச் சேனையில்லாத அரசனும் போலாகிவிட்டது. இறைவனே! நீ அனுப்பியதால், பூவுலகில் அவதரித்த கிருபையுடைய பசவண்ணரை விரும்பி, இந்த அகா லத்தில் இதுபோல அழைத்துச் செல்வாயானால் உலகில் உனது தர்மம் மேன்மை குன்றுமல்லவா? நெற்றிக் கண் நீலகண்டனே! இந்தவுலகத்தில் மறுபடியும் அவனை வரும்படி நீயே விடை கொடுத்து அனுப்பிவைத்தருளல் வேண்டும்!" என்று பக்த மாஹேஸ்வரர்கள் முறையிட்டனர். மேலும் அவர்கள், "இப்போது லக்ஷத்து எண்பதாயிரம் ஜங்கம மூர்த்திகளிடம் அன்புள்ளவர்க ளாக இருப்பவர் யார்? இப்போது எங்களுக்கு உனது பக்தியின் மேன்மையை அறிவிக்க வல்லவர் யார்? ஸ்ரீ பஞ்சாக்ஷர மஹா மந்திரத்தைக் காப்பாற்ற வல்லவர் யார்?" என்று துக்கித் தனர்.

அப்பொழுது மாச்சையர் அவர்களை நோக்கி, "பயப்படா தீர்கள்! பலவிதமாகிய தக்க வார்த்தைகளைச் சொல்லி, துக்கப் பட்டு அழுவது உங்களைப்போன்ற வீரசைவர்களுக்கு அடுக்காது. பரிசுத்தராகிய ஜங்கம மூர்த்திகளுக்கு சிவானுக்கிரகமுடைய வச வண்ணனே உயிராக இருப்பவன் என்ற பெருமையை அறி விக்கவே அன்பள்ள மேதாகேதையரது பரிசுத்தமான உயிரை சிவபெருமான் அகற்றித், தன்னிடம் சேர்த்துக் கொண்டார். பரிசுத் தனான பசவண்ணனும் தன் உயிரைவிட்டு தனது வீரவிரதத்தைத் காத்துக் கொண்டான். பக்தியை மூலமாகக் கொண்டு உலகத் தில் அவதரிப்பாய்; வீரசைவ தர்மத்தைச் சிறப்பிக்கச் செய்வாய்

என்று கட்டளையிட்டனுப்பிய சிவபெருமான், அவ்வாறு அவன் செய்யும் முன்னரே அழைத்துக்கொண்டு, உண்மையான ஜங்கம ஆராதனைக்கு இடையூறு செய்துவிட்டார். ஜீவகணங்கள், உமாதேவியார், நாயன்மார்கள் ஆகியோர் அறியாமல் இரண்டு சிவசாரணர்களையும் சிவபெருமான் உள்ளத்துக் கிருபை என்பதே யில்லாமல் தன்னிடம் அழைத்துக்கொண்டு விட்டார்.

''சிவபெருமானே! ஜங்கம மூர்த்திகளுக்கு நிதியாயும், ஞானி களுக்கு கற்பக விருட்சமாயும் இருந்த வசவண்ணனை இங்கு தங்க வொட்டாமல், அங்கு தங்கும்படி சம்மதித்திருப்பா யாயினும் நீ இரண்டகமுள்ள தெய்வமாக இருப்பாயாயினும் நீ கிருபா கடாட்ச முடையவனே! அடியேன் இனி மிகவும் கொடியனாவேன்'' என்று மாச்சையர் கூறினர்.

அவர் சொன்னவை கைலாயத்திலிருந்த சிவபெருமானின் திருச்செவிகளில் விழுந்தன. அவர் தன்முன்பிருந்த சிவகணங் களை நோக்கி, புன்னகை செய்து, ''நம்மீது அன்புள்ளவன் மடி வாலமாச்சையன்! இதோ நிற்கிற இந்த மேதாமேதையனை நாம் அழைத்துக்கொண்டதும் இங்கு வந்தான். இவனுடன் கூடவே பசவண்ணனும் வந்ததால், பூவுலகில் நம்மீதுள்ள தூய்மையான பக்தியானது போயிற்று என்று மாச்சையன் நம்மீதே கோபிக் கின்றான். இதற்கு நாம் என்ன செய்யலாம்?'' என்று கேட்டார்.

அதற்கு வீரபத்திரர் முதலிய சிவகணங்கள், சிவபெருமானை வணங்கி, ''சர்ப்பாபரணனே! உமது திருவடிகளில் பக்தி செய் கின்ற அன்பு மிகுதியினாலும், ஜங்கமாராதனை செய்கின்ற பணி விடையினாலும், வசவண்ணரை நிகர்த்தவர் எவருமேயில்லை. உமது பதவிக்கு உகந்த சத்புத்திரனை, உம்மைப் போன்றே துக்கமில்லாதவனை ஜங்கம மூர்த்திகளுக்கு நிதியாக இருப்பவனை நீர் விடை கொடுத்து அனுப்பிவைத்தால், சீவபத்தர்கள் உல கத்தில் விருத்தியடைவார்கள், பக்தன் மடிவாலமாச்சையனும் மகிழ்வான்!'' என்றார்கள்.

உடனே, சிவபெருமான் வசவண்ணரையும் மேதாகேதை யரையும் அழைத்து, ''நீங்கள் இப்பொழுது கல்யாணபுரத்திற்குப் போய்ச் சேருங்கள்!'' என்று கட்டளையிட்டார். அவர்கள் சிவ பெருமானை வணங்கி, ''நாங்கள் உம்மிடமிருந்து விலகிச் செல்லமாட்டோம்!'' என்றார்கள்.

சிவபெருமான், அவர்களை நோக்கி, ''நமது ஜங்கம மூர்த்தி களுக்குச் செய்யும் பூஜையே நமக்குச் செய்யும் பூஜையாகும், நீங்கள் உலகத்திற்குப் போங்கள்'' என்று கட்டளையிட்டுத்

தழுவிக்கொண்டு, மகிழ்ச்சியுடன் விடை கொடுத்தருளினவுடன், இரண்டு சிவசரணர்களும் சிவபெருமானின் திருவடிகளை அன்புடன் சாஷ்டாங்கமாக வணங்கி, அவரிடம் விடைபெற்று சிவகணத்தாரையும் வணங்கி, அங்கிருந்து அகன்று கல்யாணபுரத்தில் கூட்டமாக இருக்கும் ஜங்கம மூர்த்திகளின் முன்பு கிடக்கிற தங்கள் திருக்கூட்டத்தை அடைந்து, பூமியிலிருந்து எழுந்து, ஜங்கம கூட்டத்தினரை வணங்கி, மடிவாலமாச்சையரையும் வணங்கினார்கள். உடனே மடிவாலமாச்சையர் அங்கிருந்த ஜங்கம மூர்த்திகளை நோக்கி, "உங்களுடைய சிவசரணர்கள் வந்துவிட்டார்கள். இனி உங்களுக்கு ஆகவேண்டிய பணிவிடைகளைப் பெறுங்கள்" என்று சொன்னார்கள்.

பசவண்ணன், ஜங்கமப் பிராணியாகிய சிறப்பையும் மடிவால மாச்சையரது புகழையும் அங்கிருந்த ஜங்கம மூர்த்திகள் துதித்துப் புகழ்த்தனர். இரண்டு சிவகரணர்களும் அவர்களை வணங்கி தங்கள் திருமடத்துக்கு எழுந்தருளுங்கள் என்று வேண்டினர். எல்லோரும் மடிவாலமாச்யைரின் மகிமையைப் போற்றி. சுகமாக வாழ்ந்திருந்தார்கள்.

## 40. சிவநாகமையரின் வாது

சிவயோகிகளும் பக்த மாஹேஸ்வரர்களும் ஜங்கம மூர்ந்திகளும் அன்பில் நிகரற்ற பசவண்ணரின் திருக்கூட்டத்தவராகி, ஸ்ரீ பஞ்சாக்ஷர மஹாமந்திரத்தையே, வாளாயுதமாகக் கொண்டு, பரசமயவாதிகளின் துர்வாதமாகிய கொடுமையை முற்றிலும் கண்டித்து ஒழித்தனர். அந்தத் திருவாதத்தையும் அப்படி வாதம் செய்யும்பொழுது உவமைகளாகச் சொல்லப்பட்ட உண்மைக் கதைகளையும் இனிச்சொல்வோம்.

பசவண்ணரிடத்தில் சிவநாகமையர் என்ற சிவபக்தர் ஒருவர் இருந்தார். அவர் திருக்குலத்தைச் சேர்ந்தவர். தத்துவ ஆராய்ச்சியில் வல்லவர், நற்குணமுடையவர், தவராஜ யோகியர், மனத்தூய்மையுடையவர், ஜீவகாருண்ய முடையவர், நிகமாகம நூல்களைக் கற்றுணர்ந்த பிரம்ம ஞானியாகத் திகழ்ந்தார். அவர் பசவண்ணரிடம் வாழ்ந்துவரும் காலத்தில், பிராமணர்கள் நீசக்குலத்தவர் என்று நினைத்த சிவநாகமையர் பசவண்ணராகிய அந்தணரிடம் வாழ்கிற செயலைக் கண்டு மனம் பொருதவர்களானார்கள்.

அவர்கள் தங்களுக்குள்ளே அந்தரங்கமான ரகசிய வார்த்தைகளைக் கண்டும் காணமலும் சொல்லிக் கொண்டிருந்தார்கள். அவற்றல் வசவண்ணர் சிவநாகமையரை வெறுக்கவில்லை. இதனுல் பிராமணர்கள் விஜ்ஜல ராஜனிடம் சென்று, "அரசே, இந்தப் பசவண்ணன் பிராமணன். இருந்தும் அவன் செய்யும் செயல்களால் உயர்வான பிராமண ஜாதி அழிந்து போய்விடும். திருக்குலத்தாரே மேன்மையுடையவர் என்று அவன் அக்குலத்தருக்கே விசேஷமாகப் பாதங்களில் விழுந்து பணிந்து, பண்ணத்தகாத பணிவிடைகளை யெல்லாம் செய்கிறுன். அவரது பாதங்களைக் கழுவிய பாதோதகத்தை உண்டு, அவர் சாப்பிட்டு மீதியாயிருக்கின்ற எச்சிலை உண்கிறுன். உயர்ந்த ஜாதியும் ஆசாரியரும் அவரே என்று சொல்கிறுன். ஏதாவது கேட்டால் ருத்திரமூர்த்திபோல உக்கிரமாகப் பார்க்கிறுன். இவனுல் எங்களுடைய யாகம் முதலிய கர்மானுஷ்டானங்கள் எல்லாம் ஒழிந்து, குலாசார தர்மங்களெல்லாம் ஒழித்து, இந்தக் கல்யாணப்பட்டினத்திலுள்ள தெருக்களில் நாங்கள் நடப்பதற்கும் அஞ்சுகிறேம். லிங்கதாரணமும் ருத்திராக்ஷதாரணமும் விபூதிதாரணமும் உள்ளவர்கள் மேல் ஜாதியாராகிவிட, இந்தக் கல்யாணபுரியே பறைச்சேரியாகிவிட்டது. இந்தக் கொடுமையை என்னவென்று சொல்வது? உலகத்தார் செய்கிற பாவங்களெல்லாம் உலகத்தையாள்கின்ற அரசரைச் சாரும்! அரசர்கள் பரிபாலனஞ் செய்துவரும்



தரும்மானது புரோகிதர்களை அடையும். நாங்களே இந்தப் பாவங்களை உன்னிடம் சொல்வதால், அவை உம்மைச் சுற்றிக் கொள்ளுமேயல்லாமல் எங்களைச் சுற்றிக் கொள்ளாது, இது உண்மை. இனி உம் இஷ்டம்! உம்மை நீரே காப்பாற்றிக் கொள்ளும்!" என்றார்கள்.

அதைக் கேட்டதும், விஜ்ஜல ராஜனுக்குக் கோபம் பொங்கியது. அவன் வசவண்ணரை அரசசபைக்கு அழைத்து வரும்படிக் கட்டளையிட்டான். தூதர்கள் வசவண்ணரிடம் சென்று மன்னனின் கட்டளையை அறிவித்தனர். உடனே வசவண்ணர் பறையரான சிவநாகமையரை, கிடைத்தற்கரியதும் மேன்மையானதுமாகிய ஒரு பொற்பல்லக்கில் வீற்றிருக்கச் செய்து, கைகொடுத்து, தாம் பாதசாரியாக அரச சபை நோக்கிப் புறப்பட்டார்.

தொலைவில் வரும்போதே, வசவண்ணரைப் பார்த்த பிராம்மணர்கள் அரசனிடம் குறை சொல்லலானார்கள். "அரசே! நீயே பார்! இத்தகைய நீசச் செயலை யார்தான் செய்வார்கள்? இங்கு பச்சையாகச் சண்டாளத்துவத்தைக் கலப்பதற்காகவே அந்தச் சிவநாகனை பொற்சிவிகையில் ஏற்றி, ராஜ சமூகத்திற்குக் கொஞ்சமும் பயப்படாமல் கைகொடுத்து, பாதசாரியாக அவன் வருகிறான், அவனுக்குச் சிறிதேனும் வெட்கமில்லையே! அரசரையும் மதிக்காமல், இத்தகைய கொடிய செயலைச் செய்கிற அந்த வசவண்ணன், இதர ஜனங்களுக்கு எங்கே பயப்படப் போகிறான்?" என்றார்கள்.

அதைக் கேட்டதும் விஜ்ஜல ராஜனின் கண்களில் தீப்பொறி பறந்தன. விரைவாக எழுந்து, அரசசபையைக் கூட்டித் தர்பாரில் அவன் தயாராக இருந்தான்.

வசவண்ணன் ராஜசபைக்கு சபைக்கு வந்ததும் பூமியின்மீது தாம் மேலே போர்த்தியிருந்த உத்தரீயத்தை விரித்து, அதன் மீது சிவநாகமையரை எழுந்தருளச் செய்துவிட்டு விஜ்ஜல மன்னனை நோக்கி, "அரசே! என்னை இங்கு அழைத்துவரச் செய்ததற்கு காரணம் என்ன என்பதை முதலில் சொல்லுங்கள்!" என்று கேட்டார்.

உடனே, விஜ்ஜலராஜன், கோபத்தோடு வசவண்ணரை நோக்கி, "பசவண்ணனே! உன் செயல் மிக நன்றாக இருக்கிறது! உன்னால் நல்ல ஜாதியரோடு நீச ஜாதியார்கள் கலந்துவிட்டனர். உன்னால் இந்த நாட்டில் உயர்ந்த ஜாதியர், தாழ்ந்த ஜாதியர் என்ற வித்தியாசமே இல்லாமற் போய்விட்டது. உன்னிடத்

தில் சிவபக்தி உண்டான பிறகு குலாசாரங்கள் கெட்டுப்போய் விட்டன. நீ வாழும் பூமியில் மழையே பெய்யாது. செழிப்பான விளைச்சலிராது. ஆகையால் நான் நாட்டைவிட்டுப் போகிறேன்! நீயே இந்நாட்டில் சுகமாக வாழ்வாயாக!'' என்று சொன்னான்.

அரசரே! நான் சொல்வதைச் சற்று கவனமாகக் கேளும். முன்பு ஒரு காலத்தில் பிராம்மணர்கள் ஒன்றுகச் சேர்ந்து, ஒரு நீச ஸ்திரீயைச் சுகவாழ்வுக்குரிய ராஜஸ்திரியாக்குவோம் "என்று சொல்லி, தங்கத்தாலேயே ஒரு பசுவைச் செய்வித்து அதன் வயிற்றில் அந்த ஸ்திரியை நுழையச் செய்து, மேற்சொல்லிய அந்தப் பசுவின்மீது பொற்காசுகளைக் கொட்டச் செய்தனர். அப்படிச் செய்ததால், அந்த நீச ஜாதியானது. ஒழிந்து அவள் ராஜஸ்திரியானுள் என்று ஏமாற்றக் கருதி ஆசையுடன் அந்த மங்கையை விரும்பினர். அவள் உண்டு மீந்த எச்சிற் பாலை வெட்கமில்லாமல் உண்டனர். மேலும் பொருளாசையினுல் நீசமாகிய பசுவின் அவயவங்கள் அனைத்தையும் அறுத்துக் கூறுகளாக்கி, நெற்றிப் பகுதி சோமபாஜுகளுக்குரிய தென்றும், வலப்பக்கம் வேதாந்திகளுக்கு உரியதென்றும் மிச்சமானவற்றில் இடப்பகுதி பண்டிதர்களுக்கு உரியதென்றும், நடுப்பக்கம் உபாத்தியாயர்களுக்கு உரியதென்றும், முகம் தீக்ஷிதர்களுக்கு உரியதென்றும், முன் தொடை சதுர்வேதியர்க்குரிய தென்றும், இடது தொடை யாகப் பிராமணர்களுக்கு உரியதென்றும், வலது தொடை மான்தோலையணிந்துள்ள பிராமணருக்குரியது என்றும், நடுப்பாகம் வேத பாராயணம் செய்பவருக்குரியது என்றும், வயிறு முழுவதும் வேத பிராமணர்களுக்கும், முதுகெலும்புத்தண்டு மாந்திரீகருக்கும் உரியது என்றும், மற்றைய உறுப்புகள் பரதேசிகளின் பங்கென்றும் பங்குபோட்டுக் கொண்ட நீச வேடதாரிகளாவர்.

"நான்கு வேதங்கள் ஆதியில் சொல்லிய ஜாதிகளின் நிர்மாணத்தைச் சொல்கிறேன் கேளும்! வேதங்கள் உண்டாகி பூலோகத்தில் வழங்கிவரும் ஜாதிகள் இரண்டேயாகும். அவை பரிசுத்தராகிய பிரவிருத்தி மார்க்கத்தை உடையவர் என்றும் நிவ்ருத்தி மார்க்கத்தை உடையவர் என்றும் பிரிக்கப்பட்ட அந்த இருவகைச் சாதியரின் பிறவி மார்க்கத்திற்குரிய கர்ம ஸம்ஸ்காரங்களை யடைந்தவன் பிரவிருத்தி மார்க்கத்தை யுடையவனுகும். ஞான மார்க்கத்திற்குரிய சிவதிக்ஷையை அடைந்து நிவ்ருத்தி மார்க்கத்தை யுடையவனுகும் என்று வேதங்கள் சொன்ன விதிமுறையை நெகிழவிட்டு, நடுவிலுண்டாகிய ஜாதிக்கட்டு என்ன பயனையடையும் பொருட்டு உண்டாகியது? தந்தமது ராஜ்யத்தில் அந்தந்த அரசன் வகைப்படுத்திய இந்தச் சாதிக் கொடுமை எங்களுக்கில்லை. துர்க்குணம் மிகுதியாயுள்ள பாவிகளுக்கு தமது

வீட்டிலுள்ள பொன் ஓடுபோலவே தோன்றும். லிங்கதாரணம் செய்வோருடைய உடலும் உலகிலுள்ள பாமர ஜனங்களின் கண்களில் உலகத்தாராகவே காணப்படும்.

•

"தாவிப்பாயும் சிங்கத்திற்கு நாய்கள் ஒப்பாகுமோ? பன்றிகள் யானைகளுக்குச் சமமாகுமோ? சமுத்திரத்திற்கு நீர்நிலைகள் ஒப்பாகுமோ? மேரு மலைக்கு மற்றைய மலைகள் ஒப்பாகுமோ? கங்கைக்கு மற்ற நதிகள் ஈடாகுமோ? தேவலோகத்திலுள்ள காமதேனுக்கு பசுக்கள் ஒப்பாகுமோ? சிவபெருமானுக்கு மற்ற தேவர்கள் ஒப்பாவார்களோ? சிவதூஷகர்களாகிய இந்த பிராமணர்கள் சிவானுக்கிரகம் பெற்ற இந்த சிவநாகமையருக்கு ஒப்பாகமாட்டார்கள். எமது பொன்போன்ற ஸ்ரீபதி பண்டிதர் என்று வழங்கப்படும் ஒப்பற்ற சிவனடியாருக்கு இவ்வுலகிலுள்ள ஒருகோடி பிராமணர்கள் சமானமாவார்கள் என்று சொன்னவரின் நாவை அறுத்து விடுவேன்!" என்று சபதஞ் செய்தார். பிறகு அவர் தொடர்ந்து, "அரசே! உம்மைப் போன்ற அரசர் ஒருவரது அரசபையில் பயங்கரமான அக்நியை ஒரு வஸ்திரத்தில் முடிந்து அதை ஒரு பெரிய மரத்தில் கட்டித் தொங்கவிட்டவுடன் அந்த ஊர் அக்கிரகாரத்திலுள்ள வீடுகளில் எங்குமே நெருப்பு என்பதே இல்லாமல் ஒழிந்துபோன செய்தியை உலகத்தார் அறிவார்களே. பாம்பிளுதாளம் என்ற திருத்தலம் ஒன்றையடைந்த ஜங்கம மூர்த்திகளை ஒரு பாம்பு வீணாகக் கடித்து, நாள்தோறும் யாரையாவது ஒருவரைக் கடித்துவந்தது. இதையறிந்த கல்லையர் என்ற ஜங்கம மூர்த்திகள் அந்தச் சிவாலயத்திற்குச் சென்று அங்கு தங்கிச் சிவயோகத்தில் இருந்தார். அப்போது ஒரு ஜங்கமரை பாம்பு கடித்து, அவர் இறந்துபோனதை ஞானதிருஷ்டியால் உணர்ந்து ஜீவகாருண்யத்தினால் சிவத்தியானஞ் செய்து, இறந்தவரை உயிர்பெற்று எழும்படி செய்வித்து இந்த ஊரிலேயே வாழ்ந்துவந்தார். அப்போது அவருடைய திருமடத்திலிருந்த தாதி ஒருத்தி தண்ணீர் எடுத்து வருவதற்குக் குடம் ஒன்றை எடுத்துத் தெருவழியே சென்றுகொண்டிருந்தாள். அப்போது வேதத்தியானத்தில் சிறந்த பண்டிதர்களால் போற்றத்தக்க பிராமணன் ஒருவனது கை அந்தக் குடத்தின்மீது பட்டுவிட்டது. அதைக் கண்ட அந்தத் தாதியானவள் உடனே அந்தக் குடத்தை "சங்கரா!" என்று சொல்லித் தரையில் அடித்து உடைத்துவிட்டு, மடத்திற்கு சென்று குளித்துச் விபூதியைத் தரித்து வேறொரு புதிய குடத்தை எடுத்துக் கொண்டு மீண்டும் தண்ணீர் முகந்துவரச் சென்றாள். அப்படி அவள் போகும்போது, பிராமணர்கள் அவளை அடித்து "இந்த தாதி நமது கைபட்டதால் குடம் தீட்டாகி விட்டதென்று குடத்தைத் தரையில் அடித்து உடைத்து விட்டாள். சூத்திரர்கள் தீண்டினால் பிராமணர்கள் தீட்டுப் போகக் குளிப்பது வழக்கம். அப்படியிருக்க பிராமணர்கள் தீண்டின சூத்திரருக்குத் தீட்டு உண்டென்று



சிவாகமங்கள் சொல்லுமோ? இது அற்புதமாக இருக்கிறதே! இவ‍ ஐப்பிடித்து, கல்லையரிடம் இழுத்துச் சென்று, மாம்சம் சிதறும்படி மரத்தில் கட்டி அடிப்போம்!" என்று சொல்லி, கும்பலாகக்கூடி, அந்தக் கல்லையரிடம் சென்று, "கல்லையரே! உமக்கு ஈடானவர் ஒருவருமே இல்லை என்று உலகத்தார் சொல்வார்கள். கடித்துச் செத்துப்போன பாம்பை உயிர்ப்பித்த உம்மை நாங்கள் அறிவோம்! உத்தமரே! உம்மை எல்லோரும் நல்லவர் என்று துதிப்பார்கள். பரிசுத்தராகிய உமது மடத்திலுள்ள தாதி ஒருத்தி, ஜலம் எடுத்துவர ஒரு குடத்தை எடுத்துக் கொண்டு போனாள். அப்போது சதுர்வேதங்களில் வல்லவனும், ஆறுவகை



வேதங்களிலும் தர்க்க சாஸ்திரத்திலும் வல்லவனான பிராமணன் ஒருவனது கைபட்டது என்று, அந்தக் குடத்தை அந்தத் தாதி உடைத்து விட்டாள். அப்படியென்றால் பிராமணர்கள் தாழ்ந்தவர்களோ? சூத்திரர்கள் தொட்டு விட்டால் பிராமணர்கள் ஜலத்தில் விழுந்து குளிப்பார்கள். அதுவே நியமம், அப்படியிருக்க பிராமணர்கள் தொடுவார்களாயின் சூத்திரர்களுக்கு தீட்டு உண்டு என்று சிவாகமங்கள் சொல்லுமோ? இதற்கு நியாயப் பிரமாணம் யாது? இதை நீங்கள் ருசுப்படுத்த சாஸ்திரங்கள் என்ன இருக்கின்றன? ஈனமாகிய இந்தக் குற்றத்தை நீங்கள் எப்படி மன்னிக்கலாம்? உத்தமராகிய நீர் அநீதி செலுத்துகின்

நீர்? சமய வாதம் உண்டாயின் உங்களால் கண்டிக்க முடியுமா?" என்று கேட்டார்கள்.

கல்லையர் "அவர்களை நாம் கண்டித்து ஒரு பதில் சொல்லியனுப்ப வேண்டும்" என்று யோசித்தார். பிராமணர்கள் கூடியிருந்த அந்தக் கூட்டத்தை நோக்கி, "சிவத்தியானஞ் செய்கின்ற ஜங்கமர்களுடைய மடத்தைக் காவல் செய்யும் நாய் கூட உங்களைத் தீண்டக் கூடாதே! அப்படியிருக்க அவர்களிடம் பணிவிடை செய்கிற தாதிகளை நீங்கள் தொடலாமா? மேலும் ஒரு கேள்வியை நானே கேட்கிறேன். கோபிக்காமல் பதில் சொல்லுங்கள். உங்களை நீங்களே புகழ்ந்து பேசிக் கொள்கிறீர்களே அப்படிப்பட்ட நீங்கள் பிராமணர்கள் என்று சொல்வது எவ்வாறு? பிரம்மஞானம் உள்ளவனே பிராமணன் என்று சொல்லப்படுவான். பிரமஹீனன் பிரம்மஞானமில்லாதவன் பிராமணனுவானே? வேதங்கள், பரப்ரஹ்மம், பரம், பரமசிவன், பரமேஸ்வரன் என்று சொல்கின்ற பெயர்கள் யாவுமே ஆத்மாக்களுடைய பாசத்தை அறிப்பவனும் மஹேஸ்வரனுகிய சிவபெருமான் ஒருவனையே குறிப்பனவல்லவா? அவை ஜீவாத்மாக்களான விஷ்ணு, பிரம்மா ஆகியவருக்குப் பரம் என்ற வார்த்தையைக் கற்பித்து, மேன்மையடையும்படி உழன்று திரிகின்ற பதிதர்களே! மஹேஸ்வரனிடத்தில் ஐக்யப்பட்ட மனத்தையுடைய வீரமாஹேஸ்வரர்களுக்கு நீங்கள் சமானமாவீர்களோ? ஆகையால் உங்களைச் சிவனடியார்கள் அடுத்து மனத்திலும் நினைக்கக்கூடாது. இதற்கு நீங்கள் பதில் சொல்லுங்கள்!" என்று கல்லையர் கேட்டார்.

"நல்ல காரியம்! நாயையும் உன் மடத்திலுள்ள தாதியையும் விட எங்களைத் தாழ்ந்தவர்கள் என்று சொல்கின்ற நீயே, உன் ஜாதியாகியமரத்தை வெட்டும் கோடாரியாகி விட்டாயே! முளைப்பிடுங்கி ஒரு முளையைச் செருகுவது போலாகி விட்டதே உன் பேச்சு! அதிருக்கட்டும். உன் நாயை எங்களுக்கு எதிரே வேதபாராயணம் செய்யச் சொல்லமுடியுமா?" என்று பிராமணர்கள் கேட்டார்கள்.

உடனே கல்லையர், தமது கைவிரல்களால் சிட்டிகை போட்டுத் தமது நாயை அழைத்தார். அந்த நாய் எஜமானன் அழைத்ததால், பணிவுடன் வந்து, வணங்குவதற்குரிய சகல லக்ஷணங்களுடன் வணங்கி, அவர் அருகே உட்கார்ந்தது. கல்லையர் அந்த நாயை தடவிக்கொடுத்து "உன் மனத்தில் பதிந்துபாடமாய் இருக்கும் சதுர் வேதங்களில் ஒரு சாகையை விரைவாகச் சொல்!" என்று கட்டளையிட்டார்.

உடனே அந்த நாய் வேத பண்டிதர்களால் சொல்லப்பட்ட சர்வ ஸ்வர லக்ஷணங்கள் பொருந்த வேத பாராணஞ் செய்தது,



அதைப் பார்த்த பிராமணர்கள் வெட்கமடைந்து, அச்சத்தோடு கல்லையரை வணங்கினார்கள். கல்லையர் அவர்களை நோக்கி, "பிராமணர்களே! மூல காரணனாகிய சிவ பெருமானுக்குத் தொண்டு செய்கிற பக்தர்களுக்கு உள்ள மகிமையை நீங்கள் உணராமற் போய் விட்டீர்களே?" என்று சொல்லிவிட்டு" தம் அருகே இருந்த நாயை நோக்கி, "ஞானத்தைப் போதிக்கின்ற வேதங்களையே ஓதுகின்ற பிரம்மதேவனே! இப்போது வேத பாராயணத்தைப் பூர்த்தி செய்!" என்றார். பாராயணம் செய்யப்பட்ட வேதம் நின்றது.

இதுபோலவே முன்பு ஒருகாலத்தில் மஹா காளிதேவர் என்பவர் சம்பூர் என்ற நகரத்தில் பிராமணர்கள் கோபித்து தர்க்கஞ் செய்யவந்த சமய வாதத்தில் தம் நாயைக் கொண்டு வேதபாராயணஞ் செய்வித்தார். மேலும், சிவபக்தராகிய சிவசித்தையர் என்பவர் பரசமய வழிகளைத் திகைக்க வைத்து, சிவபக்தர்களை சூத்திரர் என்று சொல்லும் துஷ்டப் பிராமணர்கள், சிவபக்தராகிய திருக்குலத்தாருக்கு (பறையருக்குச்) சமமாகமாட்டார்கள்" என்று சொன்னார். உடனே' பிராமணர்கள் அவரை நோக்கி' "எங்கள் கால்களில் இருக்கிற செருப்புக்கும் சமானமாகாத திருக்குலத்தாரை எங்களைவிட உயர்ந்தவர்கள் என்று சொல்லுவதற்குக்

காரணம் என்ன? என்று குமுறினார்கள். அதற்கு வீர விரத முடைய சிவசித்தையர், "சிவஸ்துதி செய்யாத பிராமணர்கள் அந்தத் திருக்குலத்தார் அணியும் செருப்புக்கும் சமானமாகமாட்டார்கள்! இது உண்மை! உண்மை!" என்று சொன்னார்.



உடனே பிராமணர்கள் அனைவரும் கோபித்து கொதித்து எழுந்து அவரை மல்லுக்கட்டி வாதம் செய்தும் அதற்குப் பதில் கொடுக்க மறுந்ததால் அவர் சொன்னதற்கு ஒரு திருஷ்டாந்தம் காண்பிப்பாய் என்று கேட்டார்கள், அவர் ஒரு சிவபக்தரின் செருப்பை ஒரு தராசின் ஒருபக்கத்து தட்டிலும், மேல் ஜாதியார் என்று சொன்லிய பிராமணர்களில் ஒருவனை மற்றொரு பக்கத்துத் தட்டிலும் இருத்தி எடை போட்டார். பிராமணர்கள் தோல்வியுற்றனர். எனவே, சிவபக்தர்கள் பிராமணரிலும் மேலானவர்கள்!

இன்னும் ஒன்று சொல்கிறேன். கொப்பூர் என்ற ஊரில் பிப்பாச்சையர் என்ற பிராமணர் ஒருவர் இருந்தார். அவர் மேன்மையாகிய குருலிங்க, ஜங்கம பிரசாதங்களையே ஸ்வீகரித்து உடல் பூரிக்கும் நற்குணமுடையவர். அவர் ஒரு நிகரற்ற வீரசைவர்; தமது பிர்மண குலாசார பெருமையை ஒருத்த சன் மார்க்க சீலர்.

அவர் சிவபெருமானுக்கு அன்பு செய்யும் சிவசரணராகிய ஜங்கம மூர்த்திகளின் அழகான செருப்புத் துண்டுகளையே, மேன்மையுடைய தமது சிரத்திலும் கண்டத்திலும் கைகளிலும் பூஷணமாக அணிந்து, அவர்களது பாததூளிகளையே விபூதியாக விருப்பத்தோடு உத்தூளனஞ் செய்து கொள்வார். அவர் வாழ்ந்த கொப்பூருக்கு ஆறுகாத தூரவழியிலுள்ள ஊரின் சிவபக்தர்கள் சிவபோமானைக் கருதி வீரவிரதத்தை அனுஷ்டிக்கும் ஜங்கம மூர்த்திகளது ஆராதனை செய்கின்ற செய்தியைக் கேள்விப்பட்டாலே அங்கு புறப்படுவார்.



திரிசூல முத்திரை போட்ட வண்டியில் நந்தி துவஜத்தையுடைய தோரணங்களையும் சாமரங்களையும் அழகாகக் கட்டிக் கொள்வர். வாயு வேகமாய் ஓடக்கூடிய பலமுள்ள எருதின் கழுத்தைச் சுற்றிலும் பெரிய மணிகளையும் ருத்திராக்ஷ மாலைகளையும் கட்டி, கொம்புகளில் பொன்னாபரணங்களைச் சூட்டி, அழகான கால்களுக்குச் சலங்கைகளைப் பூட்டி, அழகாக அது வண்டியை இழுத்துச் செல்ல அவர் முன்னே நடந்து, மகிழ்ச்சியுடன் ஓட்டமாகச் செல்! பலே! "என்று அந்த எருதை அதட்டி ஆரவாரஞ் செய்து செல்வார். ஜங்கம ஆராதனை நடக்கும் ஊர் வந்து சேர்வார். வந்து சேர்ந்ததும் ஜங்கம ஆராதனை நடக்கும் இடத்தில் நடக்கும் கூடியுள்ள ஜங்கமர்களுடைய பாதங்களில் சாஷ்டாங்கமாக பணிந்து, அவர்கள் உண்டு மிச்சமா யிருக்கிற பிரசாதங்களை யெல்லாம் உயிராக மதித்து சேர்த்து, தமது வண்டியில் சுமத்தி, 'மென்மையும் தூய்மையுமான மோக்ஷபதவி இதுவே' என்று நினைத்து, தமது

திருமடத்திற்கு ஓட்டிச் செல்வார். அங்கு வந்த பிறகு அந்தப் பிரசாதத்தை மிகவும் அன்புடன் உண்டு மகிழ்வார்.

இப்படியாக நிகழ்ந்து வருங்காலத்தில் அவரது செய்கையைக் கண்ட பிராமணர்கள் "இதென்ன அதூசையான செயல்!" என்று ரகசியமாகப் பேசிக் கொள்வீர்கள். இப்படிப்பட்ட சமயத்தில் அந்த ஊரில் திருக்குலத்தாராகிய (பறையரான) ஒரு சிவசரணரது வீட்டில் ஜங்கம ஆராதனை நடப்பதாக இருந்தது. அந்தச் செய்தி பிப்ப பாச்சையருக்கு எட்டியது. அவர் உடனே தம் வண்டியை ஓட்டிச் சென்று, ஜங்கமர்கள் உண்டு மிச்சப்பட்ட சேஷப் பிரசாதங்களையெல்லாம் சேர்த்து வண்டியில் கொட்டி, பட்டு வஸ்திரத்தால் மூடிக் கொண்டு, வேத கோஷம் முழங்கிக் கொண்டிருந்த அந்தணர்களின் அக்ராஹாரத் தெருவழியாகத் தமது வண்டியை ஓட்டிச் சென்றார்.

பிப்பபாச்சையர் ஜங்கம பிரசாதம் ஏற்றிய வண்டியை ஓட்டிச் செல்வதைக் கண்டதும் கோபங்கொண்டு கொதித்து அவரை நோக்கி, "இந்தவண்டியில் ஏற்றிக் கொண்டு போகிற பண்டம் யாது? இதென்ன ஊர்மக்களுக்கு விரோதமான காரியத்தைச்செய்கிறாய்? இந்தச்செயல், இப்போதே உன்னை ஸ்ரீ மஹா கைலாசத்தில் சேர்த்து விடப்போகும் பெருமையை யுடையதோ? இழிவான செயலல்லவா இது? குலஹீனரும் சண்டாளருமாகிய இவர்களுடைய எச்சில் சோற்றை எங்களது ராஜபாட்டையில் ஏற்றிப் போவதற்குக் காரணம் என்ன? இந்த எச்சில் சோற்றை, ஏதோ வொரு ஒப்பற்ற பாக்கியமாக நினைத்து பட்டுத் துணியால் மூடி, பெரிய நந்திக் கொடியையும் உயர்த்திக் கட்டி, எங்கள் அக்கிரகாரத்திலே பரம பவித்திரரைப் போலச் செல்கிற உன்னை நாங்கள் திட்டிப் பேசவும் அஞ்சுகிறோம், நீ இந்த அக்ரஹாரத்தை விட்டு தூரமாகவுள்ள வேறு எங்காவது போய், இந்த காரியங்களைச் செய்! இந்த அடாத செயல் எங்களுக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை. முதலில் விலகிச் செல்! உன் பெருந்தன்மைக்கு வேறு ஒன்றையும் செய்யக்கூடாது என்று மன்னித்து விட்டோம்! ஆயினும் அநாசாரத்தை இங்கு கொண்டுவந்து, இவ்வாறு கலந்து விடலாமோ? ஆகையால் எங்கள் அக்ரஹாரத்தை விட்டு முதலில் போய்விடு!" என்றார்கள்.

இவ்விதம் அவர்கள் கூறியதும் பிப்ப பாச்சையருக்குக் கோபம் பொங்கியது. அவர் உலைக்கள நெருப்புப் போன்ற கோபத்துடன் அவர்களை நோக்கி, "அழிவற்றவராகிய சிவபெருமானின் பக்தர்களது சேஷப் பிரசாதத்தை நீங்கள் எச்சிற்சோறு என்று கேவலமாகப் பேசுகிறீர்களே! சண்டாளர்களே! இப்படிப் பேசுவதால் மஹா கோரமாகிய நரகில் அவதிப்படுவீர்களே! உங்க

ளுக்கு முடிவுகாலம் கிட்டியதால்தான் சிவநித்தை செய்யத் துணிந்து விட்டீர்கள். இந்த ஜங்கமப் பிரசாதமானது எச்சிற் சோறு அல்ல! அன்புள்ளவருக்கு அமிர்தம்! தூஷித்தவர்களைச் சாகச் செய்யும் வல்லமையுடையது!'' என்று சொன்னார். உடனே. "கொதித்தெழுகின்ற விஷமோ, சிங்கமோ, கொடிய யமனோ, புலியோ?'' என்று அவர்கள் பிப்ப பாச்சையரைப் பரிக சித்தார்கள். அதைக் கேட்கப் பொருத வீரசைவப் பிராமணராகிய பிப்ப பாச்சையர் அந்த ஜங்கமப் பிரசாதத்தை மூடி யிருக்கிற பட்டு வஸ்திரத்தை விலக்கி, அந்தப் பிரசாதத்தை இரண்டு கைகளாலும் அள்ளி, அந்தப் பிராமணர்களின் வீடுகளின் மேல் விசி எறிந்தார்.

அப்படி விசியவுடனே அவை பலவகையாக விழுகிற நெருப் பிடிகளோ மின்னற் கூட்டங்களோ, வடவாக்கினியோ என்று சொல்லக்கூடாத வளவுக்குத் தீங்கிழைக்கலாயின, வீடுகள் எல்லாம் நொடீல் படீல் என்று நெருப்புப்பற்றி யெரியும் சப்தத்துடன் கொழுந்துவிட்டு எரிந்தன. சிவபெருமானது நெற் றிக்கண் நெருப்பே பாய்ந்ததுபோல, பிராம்மணர்களின் கொப்பூர் அக்ரஹார வீதிகளில் இருந்த வீடுகள் எல்லாம் எரிந்து, தூளாகி வெந்தன.



துஷ்டராகிய ஸ்ரீராமபட்டருடைய வீடும், தாமோதரப்பட்ட ரின் மாடிவீடும், அச்சுதபட்டரின் அழகிய வீடும் முற்றிலும் வெந்துபோயின. நரசிம்மபட்டரின் வீடும், வேதப் பிராமணரும் அப்பண்ணபட்டருமாகிய பலரது வீடுகள் நெருப்பில் எரிந்து கொண்டிருந்தன. புராணிகர் சாமவேதியர், சன்னியாசிரியர் ஆகியவரது வீடுகளும் எரிந்து தணிந்தன.

வீடுகள் எரிந்தபோது ஓடிப் போகிறவர்களும் ஒளிந்து கொள்கிறவர்களும் மனம் நடுங்கி வாய் குழறியவர்களும், அசைகிற குடுமியும் எரிகின்றதே என்ற அதை அங்கையினுல் அவிப்போரும், சிவாலயங்களினுள்ளே நுழைவோரும், மீசையும் தாடியும் எரிந்து போயிற்றே என்று வேதனையோடு அழுகிறவர்களும், ஜலம் நிறைந்த கிணறுகளைத் தேடிப் போகிறவர்களும் அணிந்துள்ள ஆடைகள் எரிகின்றதே என்று விரைந்து சென்று உதவுகிறவர்களும், சிவபக்தர்களை அபயம் என்று வணங்குவோர்களும் திருமண்ணை அழித்து விபூதி தாரணஞ் செய்து கொள்வோரும் "சிவபக்தருக்கு அடியார்கள்!" என்று சொல்வோரும், அஞ்சலி செய்யும் கையுடன், "ஸர்வாங்கமும் எரிகிறதே;" என்று புலம்புவோர்களும், நெருப்பினின்றும் தப்பிய வீட்டுக்காரரான தாமோதரப்பட்டரும் சதுர்வேதியரும் தக்ஷணரும், நரசிம்மப்பட்டரும், புரோஹிதர்களும் பிப்பபாச்சையர்க்கெதிரே ஓடிவந்து சாஷ்டாங்கமாக வணங்கி, "நாங்கள் செய்த குற்றத்தை மன்னித்துவிடு பெரியோனே!" என்று சொல்லி, "அந்த நாளில் ஜனமேஜய மஹாராசன் மனமிசைந்து மானியம் கொடுத்த இந்தக் கொப்பூர் அக்கிரஹாரத்தை இந்தநாளில் நீயே சுட்டெரிந்து விட்டாயே!" என்ருர்கள்.

பிராமணர்கள் அனைவருமே அவரை வணங்கி, மன்னிப்புக் கேட்டதுமே பிப்பபாச்சையரின் திருவுளம் இரங்கியது. அவர் உடனே தம்மிரு திருக்கரங்களையும் ஏந்தி, "ஏ. சிவப்பிரசாதமே! அடியேனது கைகளில் எழுந்தருள்வாய்'! என்று பிரார்த்தித்தார். அந்த ஜங்கமப் பிரசாதமானது வேகமாகச் சென்று, அவரது அழகான திருக்கரங்களில் எழுந்தருளியது. பிறகு பிராமணர்களது வீடுகள் எல்லாம் முன்னிருந்தவை போலாகி நெருப்பு அவிந்து போய்விட்டது, இந்தச் செய்தியை எல்லோரும் அறிவார்களே! சிவபெருமான் மாதி சென்னையருடன் திருவமுது செய்து அருளிய கூழே எச்சிற் சோறென்று அறிந்தீர்களில்லை. இந்தச் செய்தியைப் பலர் சொல்லக் கேட்டும் தெரிந்தும் பிராமணர்கள் சிவசாரணர்களுக்கு ஜாதியைக் கற்பித்துச் சொல்வார்களாளுல் வெந்தெரியும் ஜ்வலிக்கின்ற மஹாகோரமான நரகலோகத்தையடைந்து வருந்துவார்கள்.

விஜ்ஜலமன்னனே! இன்னமும் ஒரு சிவபக்தர் இருந்தார். அவர் பெயர் மாதாத்துடையர். அவர் சிவபக்தர்களுக்கு விருப்பமுள்ளவர், பரிசுத்தமானவர். அவர் குளிக்கிற ஜலம் வெளிப்பட்டு தங்கியிருக்கிற மிகுந்த சேறுள்ள குழி ஒன்று இருந்தது. ஒரு பிராமணன் குஷ்டரோகத்தினுல் பிடிக்கப்பட்டவனுய் காணுமற்போன ஒரு பசுவைத் தேடிப் பின்சென்று, அந்தச் சேற்றுக்

குழியில் தொடையளவு முழுகும்படி விழுந்து, எழுந்து ஓட்டமாக ஓடிப்போய், நள்ளிரவில் வீட்டுக்கு வந்தான். உடலைக் கழுவிக் கொண்டு அன்றிரவு நன்றாகத் தூங்கினான். பொழுது விடிந்ததும் எழுந்தான். என்ன விந்தை, அவனுடைய சரீரம் திவ்ய சரீரமாகி விட்டது. அதைக் கண்டதும் அந்தப் பிராமணன் மிகவும் ஆச்சரியமடைந்து வேகம் வேகமாக மாதாத்துடையாரின் திருவடியில் சாஷ்டாங்கமாக வணங்கினான், சிவானுக்கிரகம் பெற்ற அந்தப் பிராமணனைக் குஷ்டரோகிகள் பலர்வந்து பார்த்து "இத்தகைய திவ்விய சரீரம் உனக்கு எப்படி மாறியது?" என்று கேட்டனர். அதற்கு பிராமணன் நடந்தவற்றைக் கூறினான். உடனே அவர்களும் வேகமாக ஓடிச்சென்று, அதே சேற்றுக் குழியில் முழுகி எழுந்தனர். அவர்களது குஷ்டரோகம் நீங்கியது. அவர்களும் திவ்விய சரீரமடைந்தனர். இவ்விதமாக திவ்விய சரீரமடைந்தவர்கள் எழுநூறு பிராமணர்களாவார்கள்.

இன்னமும் ஒரு சிவவேதியர் ஒருவர் கதை உண்டு. அவர் பெயர் உத்படதேவர். அவர் வேத, வேதாந்த சாஸ்திரங்களில் சமர்த்தர். வியாகரண பண்டிதர், சிறந்த சிவபக்தர். அவர் போஜராஜனுக்கு உபதேசஞ் செய்யும் ஞானசிரியராக விளங்கி வந்தார். அந்தக் காலத்தில் சோமவரை என்ற சிறந்த பாட்டுக்காரி ஒருத்தி இருந்தாள். அவள் மிகவும் சிறந்த அழகி. அரசவையில் அரசனும் அவையோரும் மகிழ்ச்சியடைய இனிய இனிய பாடல்களை இசையோடு பாடுவாள். அவளை எல்லோருமே விரும்பினர். யௌவனமாக இருந்த அவள் அழகாகவும் இருந்தாள். அவளும் ஒரு சிறந்த சிவபக்தை. சிவபக்தரான உத்படதேவர், அவளது இசைத் திறனை மெச்சி, அவள்மீது இச்சை கொண்டு அவளோடு கலந்துவிட்டார். இந்தச் செய்தியை துஷடராகிய பிராமணர்கள் சிலர், போஜ மன்னனிடம் சொல்லி, அவனுடைய கோபத்தைக் கிளறிவிட்டனர். ஆயினும் அரசன் அவர் மீது கோபங் கொள்ளவில்லை. அவரை இகழ்ந்து தூற்றவும் இல்லை. வழக்கம்போல அவரை அன்புடன் வணங்கி, அவருக்குரிய மரியாதைகளையும் மதிப்பையும் வழங்கிவந்தான். சில நாட்கள் சென்ற பிறகு, சத்குண சம்பன்னராகிய உத்படதேவரின் மகிமையை உலகத்தார் பார்க்கும்படி அறிவிப்பதற்காக சிவபெருமான் உத்படதேவரது உயிரை அழைத்துக் கொண்டார்.

---

எழுநூறு பேய்களின் கதை: முன்பு ஒருகாலத்தில் ஸ்ரீமஹா கைலாச மலைச்சாரலில் மந்தரோதம் என்ற ஒரு திருக்குளம் இருந்தது. அதன் கரையில் மார்க்கண்ட முனிவர் தவஞ்செய்து கொண்டிருந்தார். சிவபெருமானது திருக்கைலாயக் காட்சியைக் காணவந்த கந்தர்வர்கள். அந்தக் குளக்கரையில் தங்கள்

ஆவிபிரிந்த அன்றைய தினமில்லாமல் மறுதினமிரவில், தழைகள் அடர்ந்திருக்கிற ஓர் ஆலமரத்தின்மீது பொல்லாத பேய் ஒன்று சேர்ந்து புலம்பிக் கொண்டிருந்தது.

அந்தப் புலம்பல் ஓசையில் பூமி நடுங்கியது. அதைக் கேட்ட மக்கள் "இந்த ஆலமரத்தில் உண்டாகும் இரைச்சலுக்குக் காரணம் என்ன?" என்று தெரியாமல் அரசன் போஜனிடம் சென்று முறையிட்டார்கள். அதைக் கேட்டதும் அரசனும் அதிசயித்து ஊர் மக்களும் தானுமாகச் சென்று, அந்த ஆலமரத்தின் அருகே சென்று, "நீ யார்? நீ ஏன் அழுகிருய்?" என்று அந்தப் பேயைக் கேட்டான். அதற்கு அந்தப்பேய், "அரசனே! கேள். பன்னிரண்டு ஆண்டுகளாகிய வீரசைவ பிராமணராகிய உத்படதேவரது முடிவுகாலத்தையே சிந்தித்துக் கொண்டிருந்தவர்களும் ஒப்பற்றவர்களுமாகிய நாங்கள் எழுநூறு பேய்களாவோம். நேற்றையத் தினம் இரவில், எனக்கிருந்த கொடிய பசியினுல் எல்லாவிடங்களுக்கும் சென்று அலைந்தேன். இன்று திரும்பி வந்து தனியளுகி விட்டேன். என்னுடனிருந்த பேய்கள் எல்லாம் சிவபக்தராகிய உத்படதேவருடைய திவ்ய சரீரத்தைத் தகனம் செய்ததனுல் உண்டாகிய புகை அவர்களின்மீது பட்டமையால் சிவமஹா கைலாயத்திற்குத் தங்கள் பேய்ப்பிறவித் துன்பம் நீங்கிச் சென்றன, நான்மட்டுமே தனியனுனேன். ஆகையால் நீ அந்தத் தூய்மையான அவருடைய எலும்புகளை யெல்லாம் அவ்விடத்திலேயே சுட்டுப் போடுவாயாயின், அவற்றின் புகையிற்பட்டு, நானும் சிவமஹா கைலாசத்திற்குப் போய்ச் சேர்வேன்" என்று அந்தப் பேய் சொல்லியது. உடனே போஜமன்னன்

---

ஆடையாபரணங்களை அவிழ்ந்து வைத்துவிட்டு, குளத்து நீரில் நீராடி, குளத்திலிருந்த தாமரை மலர்களை யெல்லாம் கொய்து விளையாடிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் நிர்வாணமாக குளிப்பதையும், பூஜைக்குரிய மலர்களைக் கொய்வதையும் கண்ட மார்க்கண்டேய முனிவர் கோபங்கொண்டு, அந்த எழுநூறு கந்தர்வர்களையும் நோக்கி, "ஓ கந்தவர்களே, சிவபெருமானது திருமஞ்சனத்துக்குரிய தடாகத்துத் தண்ணீரைச் சேருக்கி, சிவபூஜைக்குரிய மலர்களைப் பறித்து விளையாடும் நீங்கள் பேய்களாகப் பிறந்து பூமியில் உழல்வீர்கள்! என்று சபித்து விட்டார், கந்தர்வர்கள் அவரது சாபத்திற்கு அஞ்சி, அவரது திருவடிகளை வணங்கி, சுவாமி நாங்கள் அறியாமையால் செய்த குற்றத்தால் நீங்கள் சபித்தீர்கள். இந்தச் சாபம் எங்களுக்கு எப்போது விமோசனமாகும்.?" என்று கேட்டார்கள்; அதற்கு அவர், "பூவுலகில் அவதரிக்கிற உத்படதேவர் தேகவியோக மடைந்து, அவருடலைத் தகனம் செய்யும்போது உண்டாகும் புகை, உங்களது உடலிற் பட்டவுடன் அந்தப் பேயுருவம் நீங்கும்" என்று அனுக்கிரகித்தார்.

அந்தப்பேயை நோக்கி, "உத்பட தேவரின் எலும்புகளைப் பொசுக்கி, அதனால் ஏற்படும் புகையினால் நீ மகாகைலாசம் செல்வதாக நீ சொல்வதை நான் நம்புவதற்கில்லை. அத்தகைய விசேஷச் செய்கைக்கு 'ஓர் அத்தாட்சி வேண்டும். அந்த அத்தாட்சியை உன்னால் எங்களுக்குக் காட்டமுடியுமா?'' என்று கேட்டான். அதற்கு அந்தப் பேய், அரசனை நோக்கி, ''அரசே! நான் பேயாக இருந்தாலும் பொய் சொல்லும் பழக்கம் எனக்கில்லை. அத்தாட்சிக்காக வேண்டுமானால் நான் போகும் போது, இந்த ஆலமரத்தையே வேரோடு பறித்து எடுத்துக்கொண்டு போவேன்'' என்று சொல்லியது. அப்படிச் சொல்லியவுடன் அரசனும், அவனது சுற்றத்தாரும், மனோ திடத்தோடு அந்த ஆல மரத்தில் ஏறி உட்கார்ந்து கொண்டு ஏவலாள் சிலரை அனுப்பிச் சிவ பக்தரான உத்பட தேவரின் எலும்புகளை எரிக்கும்படி கட்டளையிட்டனர். அவர்கள் அரசனின் கட்டளையை நிறைவேற்றினார்கள். அதனால் புகை எழும்பியது. அந்தப்புகை ஆலமரம் நோக்கிப் பரவிப் படர்ந்தது. அந்தப் புகைபட்ட, பேயும், ஆலமரத்தோடு ஆகாய மார்க்கமாக ஸ்ரீ மஹாகைலாயத்தை அடைந்தது. ஆலமரக்கிளைகளில் ஏறியிருந்த அரசன் போஜனும், அவனது உறவினரும் ஸ்ரீ மஹாகைலாயத்தை அடைந்தார்கள்.

## கக்கையர் கதை

இன்னும் ஒரு நிகழ்ச்சியைச் சொல்கிறேன்! கேளும். விஜ்ஜல மன்னனே! இந்த ஊரில் முற்காலத்தில் கக்கையர் என்று ஒரு சிவபக்தர் இருந்தார். இதே ஊரில் ஒரு பௌராணிகர் புராணங்களைப் பிரசங்கம் செய்து கொண்டிருந்தார். ஒருநாள் அவர் தமது கதா காலக்ஷேபத்தில் சிவபெருமானின் திருக்கைகளினால் பிளந்தெறியப்பட்டதால் உண்டாகிய அவமானத்தைச் சொல்லாமல், அந்த ஸ்ரீ விஷ்ணு மூர்த்தியையே புகழ்கிற புராணத்தை பிரசங்க மாரியாகப் பொழிந்து கொண்டிருந்தார். எதிர்பாராத வகையில் கக்கையர் அந்தப் புராணப் பிரசங்கத்தைக் கேட்க நேரிட்டது. "பௌராணிகர் சொல்வது பொய் என்று தெரிந்திருந்தும் இந்தப் பொய்யனைக் கொல்லாமற் போவோமாயின் நாம் சிவ பெருமானின் திருவடிகளுக்கு நெடுந் தொலைவில் விலகிவிடுவோம்" என்று நினைத்த கக்கையர், அந்தப் புராணிகரின் தலையைத் தனது வாளாயுதத்தால் வெட்டினார். அந்தப் பௌராணிகரின் உடலிலிருந்து பிறவித் துன்பங்களுக்கு ஏதுவாகிய சூண்டு வெடித்து, சீழும் புழுக் கூட்டங்களும் எங்கும் நிறைந்தன. இந்த நிகழ்ச்சியும், செய்தியும் உன் ஆளுகையிலுள்ள ஊரில் தான் நிகழ்ந்தது. இதை ஊரார் அறிவார்கள். இது நிற்க, இன்னும் ஒரு சிவ பக்தரின் சரிதத்தைச் சொல்கிறேன். கேளும்!

## போகையர் கதை

கெம்பாவி என்னும் திருத்தலத்தில் போகையர் என்ற சிவ பக்தர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் சிவபெருமானின், திரு வருளை மிகுதியாகப் பெற்றவர். பிராமண குலத்தில் பிறந்தவர். இவரது பக்தியை தேவர்களுக்கு அறிவிப்பதற்காக சிவ பெருமான் சிவச் சின்னங்களோடு புலையராக வேடம் பூண்டு, செத்துப் போன கன்றுக் குட்டி ஒன்றைத் தோளின் மேல் சுமந்து, அவர் வசித்து வந்த தெரு வழியாகச் சென்றார்.

சிவவேடத்திலிருந்த அவரைக் கண்டதும் போகையர், அவ ரைச் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கி, அவர் தோள்மீது இருந்த அந்த செத்த கன்றுக்குட்டியை இறக்கி, வீட்டுக்கு அழைத்துச் சென்றார். சென்றதும் அவரது திருவடிகளைக் கழுவி, ஒப்பற்ற ஆசனத்தில் எழுந்தருளச் செய்து, அன்புடன் துதித்துப் பய பக்தியுடன் அவரருகே நின்றார். அப்பொழுது சிவபெருமான் புன்னகையுடன் அவரை நோக்கி, "நமக்கு இந்த செத்த கன்றுக் குட்டியின் இறைச்சியை உண்பதற்கு விருப்பம். நாம் புண்ணிய ஸ்வரூபியான சேஷதாசையனிடம் சென்று, இதைச் சமையல் செய்து தரச் சொல்லி வேண்டினோம். அதற்கு அவர் மனைவிய ராகிய துக்களா தேவியார் சமையல் செய்யத் தாமதித்தமையால், நாம் சிறிது நேரம் அங்கே தங்கி விட்டோம். இப்போது பசி அதிகமாகி விட்டது. நீயாவது இதை இப்போதே கூசாமல் சமையல் செய்து எனக்குப் பரிமாறு!" என்று கேட்டார். உடனே போகையர், அதை இறைச்சி என்றுகூட எண்ணாமல் அன்புடன் அறுத்து, வெவ்வேறாக கூறு செய்து, திவ்யமாகச் சிவ பெருமான் விரும்பிய வண்ணம் சமையல் செய்து அளித்தார். அப்பொழுது துஷ்டர்களாகிய பிராமணர் சிலர் ஒன்றுகூடி போகையர் வீடு நோக்கிக் கற்களையும், தடிகளையும் எடுத்துக்கொண்டு கோபமாகச் சென்று சூழ்ந்துகொண்டார்கள். கதவுகளை உடைத்தார்கள். பலசாலிகளான சிலர், உள்ளே நுழைந்து "இனி இந்த போகை யரைத் தீண்டாதீர்கள்! இந்தக் கொடிய சண்டாளனை அடித்து, அவன் தலையைத் தடியால் சிதறும்படிச் செய்யுங்கள்!" என்று கூச்சலிட்டார்கள். அப்போது சிவனடியார் வேடத்திலிருந்த சிவ பெருமானும் மறைந்து போய்விட்டார்! வீர சைவராகிய போகையர் பிராமணர்களை நோக்கி "சண்டாளர், சண்டாளர் என்று மட்டின் றிப் பொய் சொல்கிறீர்களே! சண்டாளர்கள் எப்படி என் மடத் தினுள்ளே நுழைவார்கள்? நமது தெருவிலேயே அவர்கள் நுழை யக் கூடாதே! மூடர்களே! சிவபெருமானின் பக்தரை நீங்கள் தூற்றலாகுமா? இதற்காகவே நீங்கள் நரகத்தில் தவிப்பீர்கள். நான் நமது சிவபெருமானுடனேயே செல்வேன். உங்களைப் பார்த்துக் கொண்டு இனி இந்த ஊரில் கூடத்தங்கியிருக்க மாட்டேன்!"

என்று போகையர் சொல்லி விட்டுப் பயணப்பட்டார். உடனே அந்த ஊர்த் தேவாலயங்களில் ஸ்தாபிக்கப்பட்டிருந்த ஸ்தாவன லிங்கங்களும், ஊர்மக்கள் தத்தமது வீடுகளில் ஆன்மார்த்தமாக பூஜித்த அவார்த்த லிங்கங்களும், வேறு லிங்கங்களும் நிலையான தம் பீடங்களை விட்டு அந்த ஊரிலிருந்தே கிளம்பிப் போகையரைப் பின் தொடர்ந்து பூசர மார்க்கத்திலும், கேசர மார்க்கத்திலும் கிளம்பிப் பயணப்பட்டன.

இவ்விதமாகச் சிவலிங்கங்கள் யாவும் பயணப்பட்டமையால் சிவபக்தியில்லாத சண்டாளர்களாகிய பிராமணர்கள் தேடி வைத்திருந்த பொன்பொருட்களும் ஏரிகளும், ஓடைகளும், நீர் நிலைகளும் வறண்டன. விளைந்த பயிர்கள் வதங்கின. பூமி நடுங்கியது. மரங்கள் பட்டுப்போயின. பசுக்களுக்கும் பால் வற்றின. நரிகள் தெருக்களில் ஊளையிட லாயின. எங்கும் இருள் கவிய லாயிற்று. துர்ச்சகுனங்கள் தோன்றின. இதைக் கண்ட பிராமணர்கள் அனைவரும் போகையரை வணங்கி, "நாங்கள் செய்த குற்றத்தை மன்னிப்பது உம்மைப் போன்ற பெரியோர்களின் கடமையாகும். எங்கள் ஊரையும், எங்களையும் உஜ்ஜீவிக்கச் செய்யும் பொருட்டு, நீங்கள் ஊருக்கு வந்தருள வேண்டும்" என்று வேண்டினார்கள்.

போகையர் அவர்களுடைய வேண்டுகோளுக்கு இணங்கி, ஊர் திரும்பினார். உடனே லிங்கங்களாகிய சிவபெருமானின் திருமேனிகள் எல்லாம் அவருடன் கூடவே முன்னும் பின்னுமாகப் பயணப்பட்டன. ஊரை அடைந்ததும், முதலில் எழுந்தருளி யிருந்த பீடங்களில் எழுந்தருளாமல், பெரிய லிங்கங்கள் சிறிய பீடங்கள் மீதும், உயர்ந்த பீடங்களின்மீது சிறிய லிங்கங்களும், நல்ல ஸ்படிக லிங்கங்கள் வாணலிங்க பீடங்கள் மீதும், ஸ்படிக லிங்கப் பீடங்களின் மீது வாணலிங்கங்களுமாக மாறிமாறி எழுந்தருளி இன்றும் அவ்வாறே அமைந்துள்ளன. அந்தத் திருக்கோலங்களை உலகத்தார் பூஜிக்கவும் நிலைத்துள்ளன. அரசனே இன்னும் ஒரு சிவபக்தை ஒருத்தியின் கதையைக் கூறுகிறேன். கேளும்.

## குட்டவ்வையின் கதை

குட்டவ்வை என்ற சிவபத்தை ஒருத்தி இருந்தாள். அவள் திருக்குலத்தார் ஜாதியிற் பிறந்தவள். குஷ்டரோகி எப்போதும் "சிவ சிவ சங்கரா!" என்று ஜபித்துக் கொண்டே இருப்பாள். அவள், ஒருநாள், பிராமணர்கள் வசித்து வந்த நாவதிகை என்ற ஊரின் அக்ரஹார வீதியின் வழியாகச் சென்றாள். உடனே அந்த

ஊர்ப்பிராமணர்கள் அந்த அம்மையைப் பார்த்து "குஷ்டரோக-முடைய சண்டாளி! எங்களுடைய பரிசுத்தமான தெருவில் நுழையாதே!" என்று தடுத்தார்கள்.

உடனே அவள், "அதிபாதகமான காரியங்களைச் செய்கிற பிராமணர்களுக்கு என் உடம்பிலுள்ள வெண்குஷ்டமே வாய்க்கட்டும்!" என்று சபித்தாள். பிறகு சௌராஷ்டிர சோமேஸ்வரர் என்ற சிவபெருமானின் திருக் கோவிலுக்குப் பயணப் பட்டாள். "என் உடம்பிலுள்ள ரோகத்தைப் போக்கிக் கொண்டால் ஒதிய இந்த ஊரிலுள்ள அக்ரஹாரத்தை மதித்து அதனுள் நுழையவே மாட்டேன்!" என்ற வீர விரதத்துடன் சோமேஸ்வரர்கோயிலுக்கு நடந்து சென்று கொண்டிருந்தாள் நடந்து சென்றதால் அவளது கால்கள் முறிந்து, முறிந்து விழுந்ததால், அவளால் சிறிது தூரமும் நடக்க முடியவில்லை. எனவே, அவள் முழங்கால்களாலும், கைகளினுலும் நகர்ந்து உடம்பினுல் உருண்டாள். அவள் மாமிசம் சிதறியது. இரத்தம் பெருக்கெடுத்தது, அப்படிப் பாதகப் பட்டும், அவள் புரண்டு கொண்டே சென்று கொண்டிருந்தாள். அவளது பரிதாப நிலையைக் கண்ட சிவபெருமான் ஜங்கமத் திருக் கோலம் கொண்டு, அவள் முன்பு காட்சியளித்து, அவளது குஷ்டரோகத்தைப் போக்கி, திவ்ய உடல், உண்டாகும்படி செய்தார்.

பிறகு குட்டவ்வை சிவபெருமானைச் சாஷ்டாங்கமாக வணங்கித் துதித்தாள். சிவபெருமான் அவளை நோக்கி, "அம்மையே! உன் பக்தியைக்கண்டு நாம் மகிழ்ந்தோம்! உனக்கு வேண்டிய வரங்களைக் கேள். அருள் செய்வோம்" என்ருர். அதற்கு அத்தக் குட்டவ்வை, "பெரிய நிதியானது எதிரிலே கிடைத்திருக்கிற மண்ணை யாசிப்பாளா? தந்தையே! அடியேன் உன்னைக் கண் குளிரத் தரிசித்த பாக்கியமே போதும். அடியாளின் குறைகள் ஒழிந்தன. வேறு எந்தப் பதவியும் வேண்டேன்!" என்ருள்.

"அப்படியானுல், நீ அந்த நாவதிகை அக்ரஹாரத்தில் வசிக்கும் பிராமணர்களும் உணரும் பொருட்டு நீ அங்கு சென்று மகிழ்ந்து, நம்மிடம் வந்து சேர்வாயாக!" என்று சிவபெருமான் கட்டளை யிட்டார். அவ்வாறே அவ்வூரை குட்டவ்வைப் போய்ச் சேர்ந்த போது, பிராமணர்களின் உடம்புகளில் எல்லாம் கொடிய வெண்குஷ்ட ரோக முண்டாகி துன்புற்றிருந்தார்கள். அரசே! இனியேனும் கோட் சொல்லும் பிரமாணரின் சொற்களை மதியாமல் இருப்பீராக! இனியும் ஒரு செய்தி சொல்கிறேன் கேளும்

சாமவேதியன் என்ற ஒரு பிராமணன், மந்திர சக்தியால் வானத்தின் வழியே சென்று கொண்டிருந்தான். அப்போது சிவ





பக்தரான ஸ்வபசையர் என்பவர் ஒரு காட்டில் சிவ பெருமானுக்கு நிவேதனஞ் செய்வதற்காக சமையல் செய்து கொண்டிருந்தார். வான் வழியே வருகிற அந்த பிராமணரைப் பார்த்து அவர் இவனுடைய கண்கள் சிவபெருமானுக்குரிய நிவேதன அன்னத்தைப பார்க்குமே என்று யோசித்து, அதை மூடுவதற்கு ஒரு பாத்திரமும் இல்லாததால், தன் செருப்பைக் கொண்டு, சிவபெருமானின் திருவடிகளைத் தியானித்து, மூடினுர். அப்போது ஆகாய வழியே செல்லும் பெருந்தவமுடைய பிராமணன் அவரது செய்கையைப் பார்த்துச் சிரித்து, "இந்தச் செயல் புதுமைச் செயல்! நீச ஜாதியாகிய நமது திருஷ்டி தோஷம் படும் என்று நினைத்தல்லவோ, இவன் துர்நாற்றம் வீசும், தோலாலான செருப்பைக் கொண்டு சோற்றை மூடுகிருன்?" என்று நினைத்தான். உடனே அவனது அகந்தையால், அவனுடைய மந்திர சக்தியானது, அப்போதே அழிந்தது, அவன் பூமியில் இறங்கினுன். ஸ்வபசையர் திருவடிகளை வணங்கி அவரிடம் ஞானேபதேசம் பெற்ருன். மோட்சப் பதவிக்குரிய வேஷப் பிரசாதத்தையும் அவன் வழங்கப் பெற்ருன். இதனுல் அவன் சிவ பெருமானது ஸ்ரீ மஹா கைலாசத்தை அடைந்தான் சிவபெருமான் மீது அன்பில்லாமல் வேதபாராயணஞ் செய்கிற பிராமணர்கள் நீசரே யாவார்." என்ருர் பசவண்ணர்.

விஜ்ஜல ராஜன் கோபத்தோடு "பழைய கதைகளைப் பேசிப் பயன் என்ன? சில மரங்களை நகத்தால் கிள்ளினுல் பால் சொரியும். மனிதரின் உடம்பைக் கிள்ளினுல் இரத்தமே சொரியும்!" என்ருன். அதைக் கேட்டதும் அவையிலிருந்தவர்கள் நகைத்தார்கள்.

பசவண்ணர் விஜ்ஜலராஜன் சொன்ன உபமானத்தை நிருபிக்க விரும்பினுர். தவமுனிவரும், சிவனடியாருமான சிவ நாகமை

யரின் கை விரல்களைப் பிடித்து அழுத்தினர். உடனே காமதேனு வின் முலைக்காம்புகளிலிருந்து பால் சொரிவது போல விரல்களி லிருந்து பால் சொரிந்தது. இதைக் கண்ட யாவரும் வியந்தனர். திகைத்தனர்.

விஜ்ஜல ராஜன் சிவ நாகமையாரை வணங்கி, "பிறப்பற்ற சிவபெருமான் இவரேயாவார்!" என்று அஞ்சினான்! புகார் செய்ய வந்த பிராமணர்கள் சிங்கத்தைக் கண்ட யானைகளைப் போல அடங்கி விட்டார்கள்.

பிறகு தெய்வீக சம்பத்தை உடைய சிவ நாகமையர் பொற் பல்லக்கிலேறிச் சென்றார். வசவண்ணர் பாதசாரியாகவே சென் றார். விரோதிகள் வெட்கித்தலை குனிந்தார்கள்.

# 41. வார்சையர் வாது

கல்யாணபுரியில் வாச்யைர் என்ற பெரியார் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் காமம் முதலிய ஆறு விகாரங்களின் மார்க்கங் களில் செல்லாதவர். ஞானமார்க்கத்திலே நடப்பவர். சாபங் கொடுப்பதிலும், அனுக்கிரகஞ் செய்வதிலும் வீரபத்திரக் கட வுளைப் போன்ற வல்லமை வாய்ந்தவர். வீரசைவ சமயத்திற் குறிய சாஸ்திரங்களில் மிகவும் தேர்ந்தவர்; பெரும் புகழ் பெற்ற வர். யமதர்மன் என்றாலும் பயந்து புறமுதுகு காட்டாத வீர நிமிர்ச்சியுள்ளவர்.

பௌத்தர்கள் முதலிய பரசமயவாதிகளாகிய போர் யானை களுக்குச் சிங்கத்தைப் போன்றவர் பிரம்மாதி தேவர்களுக்கு இடி யைப் போன்றவர். வீர சைவ சித்தாந்தத்திலும், வேதாந்தத்திலும் திறமை யுடையவர். கனவிலும் பாவஞ் செய்யாதவர். நிராசை யுள்ள வசவண்ணரின் பூரணஞானமும். பிருங்கிமா முனிவரின் ஏகலிங்க நிஷ்டையும் பிருகு, ததீசி, போன்ற முனிவர்களின் ஆசையற்ற வீர விரதத்தையும் அனுஷ்டித்ததால் உண்டாகிய பலத்தால் சாபங் கொடுக்க வல்ல சாமர்த்தியங்களும் யோகப் பயிற்சியில் வல்ல கௌதம முனிவரது தர்க்க சாஸ்திரத்தில் தேர்ச்சியும் பெற்றிருந்தார்.

வேதங்கள் போதிக்கும் விதிமார்க்கத்தாலும் சிவாகமங்கள் போதிக்கும் மார்க்கத்தாலும் ஸ்மிருதிகளின் வாக்யத்தாலும் புராண இதிகாசங்களின் வாக்யத்தாலும் தர்க்கத்தாலும், கற்ப வாதத்தாலும் தர்மசாஸ்திர நியாய சாஸ்திர வாக்யத்தாலும் வைசேஷிக சாஸ்திர வாக்யத்தாலும் சோதித்ததற்கு அருமை யாகிய அர்த்தாபத்தி அநுமானம் முதலிய பிரமாணங்களாலும், உலகங்கள் யாவற்றையும் படைத்து, காத்து அழிக்கின்ற தொழிலனைத்தும் சிவபெருமான் ஒருவனாலே யல்லாமல் பிரம்ம தேவன், முதலிய கீழ்ப்பட்ட தேவர்களால் செய்யக்கூடாதது என்று நிச்சயித்து. நந்திக் கொடி நாயகரின் மகிமையைச் சிறப் பாக நிலை நாட்டி கொடிய பரசமய வாதிகளான யானைகளை மடியக் கொல்லும் சிறந்த வஜ்ராயுதம் போன்று திகழ்ந்து வந்தார். அவர் ஆண்டுதோறும் மாசி மாதத்தில் வரும் மஹாசிவராத்திரி விர தத்தைச் சௌராஷ்டிர சோமேஸ்வரன் சந்நிதியில் விருப்பத்தோடு செய்ய வேண்டும் என்று எண்ணினர். எனவே அந்தப் புண்ணிய காலம் நெருங்கியதும் அங்கு பிரயாணப்பட நினைத்தார். இந்த விஷயத்தை மன்னன் விஜ்ஜலனிடம் சொன்னர். அரசன் அவரது வேண்டுகோளை மதிக்கவில்லை. அவன் அவரை நோக்கி, “வாச்சையரே! என்னுடைய சேனைகள் எல்லோருக்கும் சேர வேண்டிய நெல்லைப் படியால் அளந்து கொடுக்க வேண்டும். முதலில் அந்த வேலையைச் செய்யவே வேண்டியிருக்க, வேசியர் போல உம் மனதுக்கு இஷ்டமானவற்றை யெல்லாம் செய்யப் போவதோ? போக வேண்டாம். அரசனிடத்தில் ஊழியமும், சிவபக்தியில் விருப்பமும் கலந்து யாது பயன்? மேலும் இப்போதே சௌராஷ்டிர தேசத்துக்கு போவானேன்? அந்தத் தேசத்திலிருக்கும் சோமேஸ்வரன் இங்கும் இல்லாமற்போனனே? உமக்கு ஏன் சிவராத்திரிவிரதம்?” என்றான். மேலும் அவன், “இங்கு என் வேலை கெடக்கூடாது? உம் மஹா சிவராத்திரி விரதத்தை இங்கேயே செய்து முடியும், பயணத்தை நிறுத்திவிடும், வேறு யாராவது சொன்னர் என்று போய் விடாதீர்” என்று தடுத்தான். வாச்சையரோ அரசன் தன்னை தடுத்ததை உணர்ந்துங்கடமையைக் கருதியிருந்தார். எப்படியும் சிவபெருமான் தமக்குச் சோமேஸ் வரனைக் காட்சியருள்வார் என்று நம்பினர்,

அதுபோலவே மஹா சிவராத்திரி புண்ணிய காலத்திற்கு முந்திய தினத்தில், இறைவனை சோமேஸ்வரன், நல்ல சிவ கணத்தலைவன்போல வேடம் கொண்டு திருமுகத்தைப் போன்ற ஓலைச்சுருள் ஒன்றை இடது கரத்திலும் நந்திக் கொடியை வலது கரத்திலும் ஏந்தி, நெற்களஞ்சியம் நோக்கி ஓடிவந்து, நெல்லைப் படியால் அளக்கும் வாச்சையரிடம் சென்று, “சௌராஷ்டிர சோமேஸ்வரன் பொழுது விடிவதற்கு முன்பு, நாளையத்தினம் எழுந்தருள்வான். ஆகையால் இந்த நெற்களஞ்சியத்திலுள்ள

நெல்லையெல்லாம் அப்புறப்படுத்தி, சுத்தமாக வைத்திரும்!'' என்று சொல்லித் திருமுகத்தை அவர் கையில் கொடுத்து மறைந்தார். அவர் மறைந்ததும், வாச்சையர் கண்களில் நீர்மல்க, "பரஞ்சுடராகிய சோமேஸ்வரன் அடியேனிடம் மகிழ்ச்சியுடன் எழுந்தருள விருப்பதை• அறிவிக்கவே வந்துபோனுன்! அரக்கர் தலைவனை வாணசுரனுடைய வீட்டு வாயிலையும் காவல் செய்தருளினுன். குட்டவ்வையின் முன்பும் காட்சி தந்தருளினுன். யாதையர் என்பவரின் பக்திக்காகவே புலிக்கறை என்ற ஸ்தலத்தில் சோமேஸ்வரனுக காட்சிதந்து வீற்றிருப்பதால் சிவபக்தர்களிடம் எழுந்தருள்வது என்பதே அவனது சுபாவ குணம்!'' என்று சொல்லிச் சிவபெருமானது திருவருளை உணர்ந்து, திருமுகத்தைச் சிரசின்மீது தரித்து, செய்யும் செயலையறியாமல், கண்களில் கண்ணீர் மல்கப் பரவசமடைந்து, "அடியேனிடம் எழுந்தருளிய உன் திருமேனியை ஊகித்துத் தெரிந்து கொள்வதற்கு நல்வினை, தீவினை என்ற இருவினைச் சம்பந்தமுடைய அடியேனுக்கு எளிய காரியமல்ல!'' என்று சிவபெருமானை எண்ணி, அந்தத் திருமுகத்தைப் படித்தார். அதிலிருந்த விஷயத்தை மனதில் இருத்திக் கொண்டு, எப்படியும் ஸோமேஸ்வரன் எழுந்தருளுவார் என்று இரவு முழுவதும் வசவண்ணன் முதலிய சிவபக்தர்களுடன் சிவபெருமானைத் தியானித்துப் பெருங்கூட்டமாய் கூடி இருந்தார்.

மலர்மாரி பொழிந்து கொண்டிருக்க, பெருங்கடல்கள் முழங்குவதுபோல தேவதுந்துபிகள் முழங்க, சிவகணத் தலைவனும் தேவர்களும் கல்யாணபட்டின மக்களும் வணங்கிக் கண்ணுரத் தரிசித்து மகிழும்படியாக, சௌராஷ்டிர சோமேஸ்வரன் எழுந்தருளினுர்.

வசவண்ணரும் மற்ற சிவனடியார்களும் வணங்கித் துதித்தார்கள், விஜ்ஜல மன்னனும் வந்தான், வணங்கினுன்; வாச்சையரின் பக்தியை மெச்சினுன்.

பிறகு, அந்த நெற்களஞ்சியத்தின்மீது, ஒரு சிவன் கோவில் வெகு விரைவாகக் கட்டப்பட்டது. வாச்சையரும் பசவண்ணர் முதலிய சிவபக்தர்களும் தமது மஹாசிவராத்திரி விரதத்தை தீவிரமாய் செய்து மனமகிழ்ந்தார்கள், அதன் பிறகே சௌராஷ்டிரர் சோமேஸ்வரது பெயர் கொட்டார சோமேஸ்வர் என்று வழங்கப்படலாயிற்று. பரசமய வாதிகளான யானைகளுக்கு துன்பம் விளைவிக்கும் சிங்கமாக, கபடமில்லாத பக்தியோடு வாச்சையர் கல்யாணபுரியில் வாழ்ந்துவந்த காலத்தில் அவர் புகழ் பரவியது; அதைக்கண்டு மனஞ்சகியாத விஜ்ஜலமன்னன் அவருக்குப் பல

வகையிலும் இடையூறு இழைத்து வந்தான். அப்படிச் செய்தும் அவரது புகழ் மேன்மேலும் பரவிக்கொண்டே இருந்தது.

இந்நிலையில் விஜ்ஜலமன்னன் கல்யாணபுரியில் பிரதாப நாராயணன் கோயில் என்ற ஒரு விஷ்ணுவின் கோயிலைக் கட்டி, அதில் விஷ்ணு மூர்த்தியைப் பிரதிஷ்டை செய்ய விரும்பினான். அவன் தனக்கிஷ்டமான விஷ்ணு பக்தர்களுடன் தானும் சேர்ந்து, சுபதினம் ஒன்றை நிச்சயித்துக் கூட்டமாகக் கூடியிருந்தான். அப்போது, அவன் அங்கிருந்தோரை நோக்கி, "இங்கு அந்த வாச்சையன் வரவில்லை, இந்த விஷ்ணு என்ற சொல்லைக் காதினாற் கேட்கவும் மாட்டானோ? சிவாலயமல்லாது வேறு ஆலயத்திற்கு வரமாட்டானோ? இங்கு நிறைந்துள்ள மகாசபைக்கு அவன் மட்டும் வராதது ஏன்?" என்று கோபித்தான். அப்போது பசவண்ணர் அங்குவந்து, விஜ்ஜல மன்னனை நோக்கி, "அரசே! உம் சேவகத்திலிருந்து விலகிப் போனாலும் உம் திரவியத்தை அழித்தாலுமே நீர் அவர்மீது இதுபோலக் கடுங்கோபம் கொள்ளலாகும். வீணாக நீர் ஏன் அவரை கோபிக்கிறீர்? இவ்விதம் சினப்பது பெருந்தன்மையானதன்று. சிவபக்தர்கள் அன்னிய தெய்வங்களின் அருகிலுங்கூடப் போக மாட்டார்கள். அன்னிய தெய்வங்களை நினைக்கவும் மாட்டார்கள். இது ஏன்? சிவபெருமானிடம் வீற்றிருக்கும் உமா தேவியார் முதலான தெய்வங்களை யெல்லாரையுங்கூடப் பிருங்கி முனிவர் என்பவர் மனமொத்து மதிக்காமல் பரமசிவப் பொருள் ஒன்றையே கடவுள் என்று நிச்சயித்து வாழ்ந்திருந்தார். சிவபெருமானைத்தவிர மற்ற தெய்வங்களெல்லாம் சில்லரைத் தெய்வங்கள். எனவே சிவபக்தர்கள் பிற தெய்வங்களை மதிக்கவும் மாட்டார்கள், ஆகையால் அரசே! மற்றொரு சிவபக்தர் ஒருவர் சரிதத்தைச் சொல்கிறேன் கேளும்.

"அரியமாரையர் என்ற ஒரு பெரியார் மஹேந்திரபுரி என்ற ஸ்தலத்தில் வசித்து வந்தார். அவர் நிகரற்ற ஜீவகாருண்யமுடையவர். சிவபெருமானின் திருப்பெயரையன்றி அன்னிய தெய்வங்களின் பெயர்களைச் சொன்னவர்களை, நெருப்புபோலக் கோபித்துக் கொல்லும் வீரவிரதமே சத்கர்மம் என்ற பெருமை உடையவர்,

அவருடைய திருமடத்தில், ஒரு பிராமணன் பிக்ஷை கேட்க விரும்பி, ஸ்ரீருத்ரத்தைச் சொல்லிக்கொண்டு வந்தான். அதைக் கேட்டதும் அரியமாரையர் பரிசுத்தமான நல்ல பிக்ஷான்னத்தை எடுத்துக் கொண்டுவந்து கொடுத்தார். அப்போது ஒரு பருக்கை பூமியின்மேல் சிந்தியது. அதைப் பார்த்த அந்தப் பிராமணன் அன்னிய தெய்வத்தின் பெயரைச் சொன்னான், உடனே, அரியமாரையர் அந்தப் பிராமணனின் தலையே பிளந்து போகும்படி

தம் கையிலிருந்த அகப்பையினல் அடித்தார். அவன் இறந்தான். பிறகு அவனுடலை வெளியே இழுத்துக் கொண்டுவந்து போட்டார். இந்தக் கொலைச் செயலைக்கண்ட பிராமணர்கள் பலர் கூட்டமாகக் கூடினார்கள். கோபங்கொண்டு "இவன் பிரம்மஹத்தி செய்து விட்டான். ஐயோ! இஷ்டமில்லாத சொல்லை சொன்னான் என்றால் அவனுக்குப் பிக்ஷையைப் போடாமல் "இல்லை போ" என்று சொல்லி யனுப்பிவிடுவதே உலக வழக்கம். அதைவிட்டு பிக்ஷை எடுக்கவந்த பிராமணனை இவன் அகங்காரத்தினல் கொன்று விட்டானே! எல்லோரும் வாருங்கள், இதை நமது அரசனிடம் சென்று முறையிடுவோம் என்று ராஜனிடம் சென்று முறையிட்டார்கள்.

ராஜன் "நடந்த செய்தி என்ன?" என்று கேட்டான். அதற்கு அவர்கள், அரிமாரையன் இத்தகைய துன்மார்க்கச் செயலை எதற்காகச் செய்தான் என்பதை விவரமாகக் கூறினார்கள். அரசன் ஆட்களை அனுப்பி, குற்றவாளியை அழைத்துவரச் செய்தான். அரியமாரையர் வந்ததும் "குற்ற மில்லாத பிராமணனை நீர் கொல்லக் காரணம் என்ன? சிவபெருமானை வணங்கும் பக்தர்களின் வீரவிரதம் ஒப்பற்ற பிரம்மஹத்தியைச் செய்வது தானே? அவன் செய்த தவறு என்ன? அதை ஒளிக்காமற் சொல்லும்!" என்று கேட்டான். அதற்கு அவர், "அவன் செய்த தவறை நான் சொல்வதற்கில்லை. சிவபெருமானே அதைச் சொல்ல வல்லவன். காப்பவனும் அழிப்பவனும் சிவபெருமானே யாவான், ஒருவனை உன்னால் காப்பாற்றவும் உன் கோபத்தால் அழிக்கவும் முடியுமோ?" என்று அரியமாரையர் சொன்னார். அரசன் பதில் சொல்லாமல், தன் ஊழியர்களை அழைத்து "செத்தவனுக்கு எதிரே சிவபராக்கிரமத்தைப் பற்றிப் பேசும் மனத்திடமுள்ள இவனைக் கொல்லுங்கள்!" என்று கட்டளையிட்டான்.

கொலைஞர்கள் அரசன் கட்டளையிட்டபடியே, அரியமாரையரை அழைத்துச் சென்றார்கள். அவ்வாறு போகும் போது, அரியமாரையர் அக்கொடிய கொலைஞர்களை நோக்கி, "நீங்கள் என்

---

*படைத்தல், காத்தல, அழித்தல் ஆகிய தொழில்களுக்கு முறையே பிரமன், விஷ்ணு, ருத்திரன் நியமிக்கப்பட்டவர்கள். அவர்கள் பரமசிவனல் உண்டாக்கப்பட்டவர்கள்.*

*ஆதாரம் : ருக்வேதம்*
*ஸோம : பவதோ 'ஜநிதா மதிநாம் ஜநிதா !*
*திவோஜ நிதாவ்ரு திவ்யா ஜநிதா அக்னேர் ஜிதா!*
*ஸீர்யஸ்ய ஜநிதேந்த்ரஸ்ய ஜனிதா விஷ்ணோ !*

னுடன் வாருங்கள்'' என்று ஒரு சிவாலயத்தினுள்ளே அழைத்துச் சென்று அங்கிருந்த சிவபிரானை நோக்கி, ''ஐயனே! அடியேனை இக்கொலைஞர்கள் அழைத்துச் செல்வது உமக்குச் சம்மதமோ? மெய்யான அன்புடைய சிவனடியார்களின் நண்பரே!" என்று முறையிட்டார். அப்போது சிவபெருமான் ''உன் வீரவிரதத்தைக் கண்டு நாம் மகிழ்ந்தோம். இனி நீ நமது மார்பில் அமர்ந்திருப் பாய்!'' என்று அருள்செய்தார். அரியமாரையர், போய் சிவ லிங்காகாரத்தில் ஐக்கியமானார். அவரைப் பின் தொடர்ந்த கொலை ஞர்கள் திகைத்து. அரசனிடம் சென்று முறையிட்டார்கள். அந்தச் சிவலிங்கத்தில் ஐக்கியமான அரியமாரையர் தரித்திருந்த தலைப் பாகையைச் சிவ பெருமானின் மார்பின் மீது இருப்பதை, அரசனும் மற்றவர்களும் வந்து பார்த்தார்கள். அதிலிருந்து, சிவபக்தர்கள் கண்ணியமாகவுள்ள யாதொரு தெய்வத்தையும் நினைக்காத மனோ திடத்தினால் எந்தக் காரியம் செய்தாலும் அது சிவபுண்ணியமே யாகும்!'' என்பதை, அரசனும் குடிமக்களும் தெரிந்து கொண் டார்கள்.

## வீரசங்கரர் கதை

அரசே! இன்னும் ஒரு சிவபக்தரின் கதையைச் சொல்கிறேன். அவர் பெயர் வீரசங்கரர். அவரும் சிவபெருமானையன்றி இதர தெய்வங்களை எண்ணவும் மாட்டார், தீண்டவும் மாட்டார். கன விலுங்கூட அன்னிய தெய்வங்கள் எதையுமே அவர் பார்க்க விரும்புவதில்லை. இத்தகைய வீர விரதத்தை அனுஷ்டித்து வந்த அவர் ஒருநாள் இரவு ஒரு கனவு கண்டார். அந்தக்கனவில் ஆசாரமில்லாதவனும் நீசனுமான ஒரு புத்தசமயத்தானைத் தொடுவதாகக் கண்டார். உடனே, ''ஹர ஹரா!'' என்று சொல் லிக் கொண்டே தூக்கத்திலிருந்து கண்விழித்தார். ''உத்தமப் பிறவியை எடுக்காததும் கெட்டதுமாகிய ஒரு நாயைத் தொட்ட இந்த உடம்பை வேக வைத்தால் தான் இந்தத் திட்டுப்போகும்'' என்று நினைத்து, ஸ்ரீ சைலத்திற்குச் சென்றார். அங்குள்ள பாட கேஸ்வரர் சந்நிதியில் தீமூட்டினார். மனத்திலே சிவபெருமானையே தியானித்து அக்னிப் பிரவேசம் செய்தார். அவர்மேனி கரு கியது. அவர் உடல் நெருப்பில் எரியும்போது சிவபெருமான் அவர் எதிரிலே காட்சி கொடுத்து, தம் திருவுருவில் ஐக்கியப் படுத்திக் கொண்டார்.

இன்னும் ஒரு சிவபக்தரின் கதையைச் சொல்கிறேன் கேளும்;

## மஞ்சண்ணர் கதை

மஞ்சண்ண பண்டிதர் என்ற சிவபக்தர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் பயமில்லாதவர். பரசமயவாதிகளுக்கு இடியைப் போன்றவர். அவர் விழிநுதல் பெருமானுள் காசிவிஸ்வநாதரின் சன்னிதியில் நாள் தோறும் தம் பத்துவிரல்களையும் அறுத்து, மூக்காலங்களிலும் மலர்களை அரச்சனை செய்வது போல அருச்சித்து வந்தார். ஒவ்வொரு பூஜை நேரத்தில் அறந்த விரல்கள் பத்தும் தாமாகவே வளர்ந்துகொண்டிருந்தன. அதைக் கண்ட மக்கள் அவரைத் துதித்துப் போற்றிவந்தனர்.

அவர் 'சிவபெருமானே டவுள்' என்று நிச்சயித்து, பரசமயவாதிகளின் மூக்குகளை அறுத்தற்குரிய அரிவாள் இதுவென்றே என்று ஒரு வீரபத்திரத் த்வஜஸ்தம்பத்தை ஊர் நடுவில் நட்டுவைத்து, தம் கொள்கையை எதிர்ப்பவரை வாதுக்கு அழைத்து விளம்பரஞ் செய்தார்.

•

அந்த வீரபத்ர துவஜஸ்தம்பத்தைப் பார்த்த பரசமய வாதிகளான ஹரிதாசர்கள் பலர் ஒன்றுகத் திரண்டு ஒரு விஷ்ணு ஆலயத்தில் கூட்டமாகக்கூடி, "மஞ்சண்ண பண்டிதரை இங்கு அழைத்து வாருங்கள்" என்று அழைப்பு விடுத்தார்கள். அந்தச் செய்தியை கண்டதும் மஞ்சண்ணர் அவர்களுடைய சபைக்கு வந்தார். வந்தவருக்கும் அங்கிருந்த வைஷ்ணவர்களுக்கும் வாதப் பிரதிவாதம் நிகழ்ந்தது. அவர்கள் தம்மிடமிருந்த ஆகமப் பிரமாணர்களைக் கொண்டு தம் கட்சியை நிருபிக்க முடியாமல் தோற்ருர்கள். மஞ்சண்ண பண்டிதர் நிகமாக மங்களைக் கொண்டு நிருபித்துக் கண்டித்து வெற்றியடைந்த பிறகும், திருமாலின் சமயத்தைச் சேர்ந்தவர்கள் ஒப்புக்கொள்ளாமல் "நாங்கள் ஒத்துக்கொள்ளக்கூடிய ப்ரத்யக்ஷ பிரமாணம் இருந்தால்தான், நாங்கள் ஒப்புக்கொள்வோம்!' என்ருர்கள்.

இவ்வாறு வைஷ்ணவர்கள் சொன்னதும், மஞ்சண்ண பண்டிதர், "நல்லது: உங்கள் திருமாலையே உலகத்தார் வணங்குதற்குரிய விஸ்வேஸ்ரனை சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கும்படிச் செய்கிறேன். "நீங்கள் புறப்படுங்கள்!" என்று சொல்லி, அவர்களின் திருக்கோயிலில் இருந்த விஷ்ணு விக்கிரகத்தை நோக்கி, "நீ பூஜிக்கும் கடவுள் எங்கள் சிவபெருமானே யாவானுனல், நீ ஏந்தியிருக்கும் சக்கரம், சிவபெருமானுடையதே யானல், நீ செய்யுங் காத்தல் தொழிலுக்கு என் இதயத்திலிருக்கும் சிவபெருமானே தலைவனுவானுல் நீ பாசத்தை ஒழிப்பவனுகிய விஸ்வேஸ்வரனது

திருவாலயத்தின் சந்நிதியில் வணங்க வருவாயாக!'' என்று அழைத்தார்.

உடனே உலகத்தார் வியப்படையவும் சிவபக்தர்கள் அனை வரும் 'ஹர ஹர' என்று சொல்லி மகிழ்வும் வைணவர்கள் நடுங்கி நாணமடையவும், மஞ்சண்ணரின் திருவாக்கைத் திருமால் சிர மேல் வகித்து, தம் அழகான ஆலயத்தைவிட்டு ராஜவீதி வழியாக நடந்து சென்று, மஞ்சண்ணரும் மற்ற ஜங்கமமூர்த்திகளும் மகிழ்ச்சியுடன் முன்னே செல்லவும் கபடர்களான வைணவர்கள் அவர்களுக்குப் பின்னே செல்லவும் சென்று சிவாலயத்தில் நுழைந் தார். விஸ்வேஸ்வரனது திருவடிகளில் திருமால் அன்புடன் சாஷ் டாங்கமாக வணங்கி, இன்னும் உலகத்தார் காணும்படிப் படுத் திருப்பதை அந்த வைஷ்ணவர் இன்னமும் எழுந்திருக்க செய்ய மாட்டார்கள். ஆகையால் சிவபெருமானே மேன்மையான கடவுள். சிவபக்தர்களின் அருள் இருந்தால் தான் திருமால் ஜீவிப்பான். இல்லையெனில் சாவான் என்பதற்கு இதுவே சாட்சியாகும். இதற்கு முன்பும் ஒருமுறை திருமாலின் திருமேனியாகிய பஞ்ச லோகமும் வெந்து நீருஜ செய்தி வெறுஞ் சொற்பிரமாணம் அல்லவே. ஆகையால், வேந்தே, நீர் ஆள்கிற இந்தக் கல்யாண பட்டினத்தில் ஹரிதாஸர்களாகிய வைணவர்கள் துன்பம் அதி கரிக்க, அந்த பாழ்ங் கோயிலையும் பார்க்கிறாய். சிவபெருமானின் பக்தர்களின் பெருமையை நீ அறிந்திருக்கிறாய். நீ வாச்சையரின் மகிமையால், ஸோமேஸ்வரன் எழுந்தருளிய நெற்களஞ்சியத்தை யும் நீ அறிவாய். உன் சேனைகளுக்குக் கொடுக்கிற சம்பளக் கணக்கை எழுதும்போதும், அவர்களது பெயர்களைக் குறிக்காமல், அந்தக் கணக்குப் புத்தகத்தில் ஸ்ரீ பஞ்சாக்ஷர மஹாமந்தரத்தை எழுதி விவரமாகச் சொல்லும்படிச் கேட்பாயாயின் அந்த நினைத் தற்கரிய கணக்கைப் பிழையன்று சொல்லும் வாச்சையரின் திற மையை நீ அறிந்திருந்தும், இன்னும் அவர் பெருமையை உண ராததற்குக் காரணம் என்ன?'' இவ்வாறு பசவண்ணர் கேட்டு விட்டு, விஜ்ஜலராஜன் தர்க்கஞ் செய்த வாலாற்றினை யெல்லாம், வாச்சையரின் ஆட்கள் மூலம் சொல்லியனுப்பினர். அதைக் கேட் டதும் வாச்சையர் விரைந்து வந்தார். வந்ததும் விஜ்ஜல ராஜன் அவரை நோக்கி, ''மூன்று உலகங்களுக்குத் தலைவனையும் மஹா லக்ஷ்மிக்குத் தலைவனையும் இருக்கும் விஷ்ணு மூர்த்தியின் பிரதிஷ்டை திருவிழாவைத் தரிசிக்க நமது ராஜ்யத்திலுள்ள மகா பண்டிதர்களும் அனைவரும் இங்கு விஜயம் செய்திருக்கும்போது நீர் மட்டும் தரிசிக்க மாட்டேன் என்று இங்கு வராமலிருக்க முடிவு செய்த துணிவுக்குக் காரணம் "என்ன?'' என்று கேட்டான்.

வாச்சையர் கோபங்கொண்டு,விடை கொடுப்பாரானர்.''அரசனே தூனமானங்களில் தடுமாறி நடுங்கிப் பிருகு முனிவர் இட்ட பெருஞ்

சாபத்தால் துன்பமடைந்து இளைத்து உழல்கின்றவர் ஒரு கடவுளாவரோ? இந்திரனைவிட மேன்மையுடையரான சிருஷ்டித் தொழிலுக்குத் தலைவர் பிரம்மதேவர் அவரைவிட மேன்மையுடைய காத்தல் தொழிலுக்கு தலைவர் விஷ்ணு; அவரைவிட மேன்மையுடையவராகிய சம்காரத் தொழிலின் தலைவரான எங்கள் சிவ பெருமான் எங்கள் தலைவனாகிய ஒப்பற்ற கடவுளாவார். அவரல்லாத மற்றைத் தேவர்கள் கடவுளல்லர். அரசனே! நீ படைப்பாயாக, நீ காப்பாயாக என்று சிவபெருமான் கட்டளையிட்டருள அவ்வாறே பணிபுரிகிற பிரம்மதேவனும் விஷ்ணுவும் எங்கள் சிவ பெருமானுக்கு நிகரானவரல்லர். அந்தந்தத் தொழில்களில் நியமிக்கப்பெற்ற தேவர்கள் கடவுளாகிவிட முடியுமா?...

“தேவர்களின் தலைவன் இந்திரன். அந்த இந்திரனின் தலைவன் திருமாலாவான். அந்தத் திருமாலுக்குத்தலைவன் சிவபெருமானுவான் இந்திரன் அவன் அமைச்சன். சராசரம் எல்லாமாயும், பேரின்பப் பொருளாயும் இருக்கும் எங்கள் சிவபெருமானின் மேன்மைத் தலைவனுவான். திருமரல் தலைவனுனல் தான் பெற்ற மகனுகிய மன்மதனை எங்கள் சிவபெருமான் எரித்தபிறகு, அழிந்து போன அந்த மாறனின் உடலை உண்டாக்கிக் கொடுக்க முடியாதற்குக் காரணம் என்ன?

“படைப்புத் தொழிலுக்குரிய பிரம்மன் கடவுளாம் என்ருல் சிவபெருமான் அறுத்த தலையை மீண்டும் முளைத்துக் கொள்ளும் படிச் செய்யாமைக்குக் காரணம் என்ன? அந்தப்பிருமா தனக்கென ஒரு ஆலயத்தைக் கட்டுவித்து, மேன்மையான பூஜையைப் பெற்றுக் கொள்ளமுடியாமைக்குக் காரணம் என்ன? ஜீனனும் புத்தனும் மேலான கடவுளானுல் மனித தேகத்தை அவர்கள் அடைந்ததற்குக் காரணம் என்ன? பரத்வத்தன்மைவிட்டு, ஜீவத் தன்மையை அடையக் காரணம் என்ன?

“வேதமே கடவுள்ானுல் கொடிய சோமுகாசுரன் அதனைத் திருடிக் கொண்டு அலை கடலில் ஓடிப்போய் ஒளிந்துகொள்ள, அங்கு அது மூழ்கிப்போகுமோ? பூமியைக் கடவுள் என்று சொனுல் துர்நாற்றமுடைய மல மூத்திரங்களுக்கு கெட்ட ஸ்தானமாகிய அழுக்கோடு பொருந்தி யிருப்பானேன்?

அரசே! தண்ணீரே கடவுளானுல் நெருப்புக்கு வற்றிப் போகுமா? முற்றிலும் ஓசையடங்கி ஒருமுனிவனின் (அகத்தியரின்)

---

முனிவர்-அகஸ்திய முனிவர்

உள்ளங்கையில் ஒடுங்கிப் போகுமோ? நெருப்பே கடவுளானல் கைகள் அந்தரனுகிச் சுத்தாசுத்த பதார்த்தங்களை யெல்லாம் புசித்துக் கொண்டு அலையுமா?

"வீசுகின்றே காற்றே கடவுளானல் ஒரு மூலையில் தங்கியிருக்குமோ? ஆகாயம் கடவுள் என்றல் அது தன்னை அடைந்த அந்தப் பொருளின் உருவமாகுமோ? சூரியன் கடவுளானல் ஓய்வு ஒழிவின்றி அலைவானேன்? சந்திரன் கடவுளானல் ஒளி பொருந்திய அதன் கலைகள் குறைந்து போகுமோ?

"ஆன்மாவைக் கடவுள் என்றல், அது இன்ப துன்பங்களை அனுபவிக்குமோ? ஒன்றுக்கொன்று கூடியே, இந்தத் தேவர்களுக்கு ஒரு காரியம் ஆகவேண்டியிருப்பதால் இவர்கள் என்ன தேவர்கள்? பாவபுண்யங்கள் என்று சொல்லப்பட்ட கர்மங்களானவைக் கடவுளானல் ஒழியாத ஒரு ஜடபதார்த்தத்தை யறிந்து பயனைத் தர முடியுமோ?

'வினையானது தன்னையடுத்த அன்பர்களையே கொல்லுமோ? தன்னைத்தானே கொன்று கொள்ளுமோ? உடலில் நிரம்பியுள்ள உயிரானது இன்ப துன்பங்களை இத்தன்மைத்தென்று உணர்ந்து அடைந்து பயனை அனுபவிக்க மாட்டாது. இவ்விதம் இருப்பதால் சாரசரங்கள் எல்லாவற்றையும் திருவுளத்தில் உணர்ந்து எங்கள் சிவபெருமான் பயனை ஊட்ட வல்லவன். ஆகையால் அவனே ஒப்பில்லாத கடவுள் எனப்படுவான்.

எல்லாத் தேவர்களோடு புண்யமடைவதற்கு உரிய யாகத்தை செய்த தக்ஷனின் தலையானது எந்தக் காரணத்தால் ஆட்டுத் தலையாகமாறியது?" கோபத்தால் தன் பிதாவின் தலையை வெட்டுகின்ற பாபத்தை விமோசனஞ் செய்து, காட்டக் கோட்டையர் முன்பு சிவபெருமான் எழுந்தருளி, சிவகணமாதற்குரிய முதன்மையான பயனை அருள் செய்வானே?

"ஆகையால் சிவபெருமானே தலைவனுவான்! பிரம்ம விஷ்ணுக்கள் ஊரிலுள்ள சிவாலயங்களிலுள்ள பஞ்சமபிரகாரத்தில் பரிவார தேவதைகளாக இருப்பார்கள். இறப்பார்கள் இவர்களுடைய தொழில்களுக்கும் எல்லா ஜீவராசிகளுக்கும் கடவுளாகிய எங்கள் சிவபெருமானே தலைவனுவான். அரசனே! இன்னமும் கேள். பாற்கடலில் விஷம் உண்டானபோது பயப்பட்டு ஓடிய தேவர்கள் அனைவரும் அந்த விஷத்தை திருவமுது செய்த சிவபெருமானுக்கு நிகராவார்களோ? சிவபெருமானுக்குத் தீய மலங்களை மிகுதியாக உடையவர்களாகிய மற்ற

தேவர்கள் எல்லாம் நிகராவார்களோ? அரசே! சரரசரமான சகல லோகங்களும் ஒளியூட்டுவது சிவஸ்வருபமேயாகும், இந்தச் சிவலிங்கத்தின் நடுவே வாழ்கின்ற தேவர்கள் எல்லாம் நமது சிவ பெருமானுக்கு நிகராவார்களோ? பிருகு முனிவன் கோபத்தில் கொடுத்த சாபத்தினுல் பத்துப் பிறவிகளிலும் பிறந்தும் அச்சுதன் என்கிற பெயரைத் திருமால் அடைந்ததற்குக் காரணம் என்ன? அரசே! சிவலிங்கத்தின் மத்தியில் உலகம் அனைத்தும் உள்ளது. சிவலிங்கத்தின் புறம்பில் ஒன்றும் இல்லை. இதன் மத்தியில் ஜ்யோதிர் லிங்கமுள்ளது. அதனை யதியானவன் இடைவிடாமல் தியானஞ் செய்தல் வேண்டும். யதியினுடைய பஞ்சப்ராணத்தில் மனோலிங்கமிருப்பதாகச் சொல்கிருர்கள்.

"திருமால் பிரம்ம தேவனின் அதோ த்வாரத்தினின்று பிறந்ததனுல் அதோக்ஷஜன் என்ற பெயரையும் அதிதி அந்த நாளில் பெற்றதனால் உபேந்திரன் என்ற பெயரையும் துவாபர யுகத்தில் மகிழ்ச்சியுடன் போதாயனன் என்ற பெயரை யடைத்து பராசர முனிவரிடத்தில் வியாச முனிவராகப் பிறந்து அந்த யுகத்திலேயே கிருஷ்ணன் என்ற பெயரிலும் தோன்றினுன்.

"இவ்வாறு ஒவ்வோரிடத்தையும் அடைந்தடைந்து பிறந்த பிறகு, அந்தச் சரீரங்களில் எல்லாம் திருமாலுக்குரிய பெயர்களை எல்லாம் பெற்று, எங்கள் சிவபெருமானின் திருவடிகளையே பூஜித்து தான் செய்த பாவங்களை யெல்லாம் விமோசனம் செய்து கொள்ளும் ஸ்ரீ விஷ்ணு மூர்த்தியின் சிறுமைகளை யெல்லாம் இன்னமும் நான் சொல்கிறேன்" கேட்பாயாக.

திருமால். ததீசா முனிவரது பாதத்தால் மார்பிலே உதைக்கப் பெற்றன். யசோதையின் தாம்புக் கயிற்ருல் கட்டப்பட்டான். துன்மார்க்கனுகிய ஜலந்தராசுரனது நாகபாசத்தால் கட்டநபட்டான். உபமன்யு முனிவர் உண்ட பாற்கடலுடன் சென்று வாயிற்பட, அவர் விஷ்ணுவைச் சக்கை என்று நினைத்து வெளியே துப்பிவிட்ட சரிதத்தை எல்லா உலகத்தாரும் அறிவார்கள்.

'மேன்மையுடைய ஜராசந்தனைதன்னுடன் போர்செய்ய வந்தவுடன், அவன் தன்னைக் கொல்வான் என்று பயந்து, எண்பதாயிரம் மலைக்கோட்டைகளைக் கட்டுவித்துக் கொண்ட திருமாலுக்கு இத்துணை பெருமை எதற்கு? புண்கள் உண்டாகும்படி அரக்கர்கள் போர் செய்ய, பயந்துபோய் கதவின் மறைவில் அழுது கொண்டும் அதன் வடிவாக மறைந்து கொண்டும் அவன் தன்னுயிரைக் காப்பாற்றிக் கொண்டான்,

"சிவபெருமான் விஷத்தைத் தமது ஸ்ரீகண்டத்தில் ஆபரண மாக அணிந்தபொழுது, திருமால் மோஹினி ரூபங்கொண்டு நின்ற வனுயிற்றே? திருமால் கோபத்துடன் செலுத்திய சக்கராயுதத்தை, ததீசி முனிவர் விழுங்கித் துப்ப, அதைக் கைகளிலும் தலையிலும் பொருந்தும்படி இருத்திக் கொண்டு விரைவாகப்போய் பாற் கடலில் மறைந்தானல்லவா?

"சீதையை ராவணாசுரன் தூக்கிக் கொண்டுபோன அந்தக் கொடுந் தொழில் ஏன் நிகழ்ந்தது என்று திருமால் தனது ராமாவ தாரத்தில் உணரக் கூடாமல் போனதோடு அழவுஞ் செய்தார். மேலும் வேடன் எய்த பாணத்தால் திருமாலின் அவதாரமாகிய கிருஷ்ணன் செத்துப் போனதையும் அவன் செய்த துரோகத்தை யும மாகபாரதம் முழுக்க முழுக்கச் சொல்லும்,

"நந்தியெம்பெருமானின் மூச்சுக் காற்றில் திருமால் ஆகா யத்தில் பறந்து மீண்டும் பூமியில் வந்து விழுந்தான். மகனைப் பெறவேண்டும் என்ற ஆசையினால் அழமான மேகவடிவங் கொண்டு, திருமால் சிவபெருமானைத் தியானித்து, நெடுநாள் அனுஷ்டித்த அந்த விரதத்தைப்பற்றி நீ கேட்டதில்லையோ?

"திருமால், மச்சாவதாரமானபோது, எங்கள் சிவபெருமான் அதனுடைய விரிந்த கண்மணியைப் பிய்த்து, தம் திருமுடியில் தரித்ததை நீ அறிந்ததில்லையோ? கூர்மாவதாரத்தில், அந்த ஆமையின் ஓட்டை எங்கள் சிவபெருமான் தம் ஆபரணத்தின் நடுவில் பதக்கமாக அணிந்ததை நீ அறியாயோ?

திருமால் நரசிங்கவதாரம் செய்தபோது எங்கள் சிவபெருமான் சரபபட்சியாகத் தோன்றி அந்த நரசிங்கத்தை உரித்த தோலை வஸ்திரமாகத் தரித்தார். திருமால் வராஹ அவதாரஞ் செய்த போது, அந்தப் பன்றியின் கொம்பை அணிந்து நின்ற செய்தியை யும், திருமால் வாமனாவதாரமானபோது, அவரது விஸ்வரூபத்தின் முதுகெலும்புத் தண்டை சிவபெருமான் தம் திருக்கரத்தில் பிடித்த செய்தியையும் இங்கிருக்கும் பிராமணர்கள் எல்லோருமே அறி வார்கள்.

"திருமாலின் அவதாரமான விஸ்வசேனனைச் சிவபெருமான் தம் சூலாயுதத்தால் குத்திக் கொன்று உயிரை எடுத்த செய்தி உனக்குத் தெரியாதோ? பெரிய பெரிய தேவர்களெல்லாம் ஓட்டம் பிடிக்க, தக்ஷயக்ஞத்தில் சிவபெருமான் திருமாலின் தலையை வெட்டிய செய்தியை நீ கேட்டதில்லையோ?

"அரசனே! திருமால் முதலிய தேவர்களெல்லாம் அரக்கர்களை வென்று தம்மை மெச்சிக் கொள்ளும் காலத்திலே சிவபெருமான் ஒரு யக்ஷனாகத் தோன்றி "இந்தச் சிறிய துரும்பை எடுங்கள்" என்று ஒரு துரும்பைக் கிள்ளிப் போட்டார். அதைத் தூக்கவும் முடியவும் கையலமையற்ற தேவர்களோ எங்கள் சிவபெருமானுக்கு நிகராவார்கள்?

"பிரம்மதேவன் விற்புருவமுடைய தன் புதல்வியைப் பார்த்து, அவள்மீது மோகங் கொண்டு, மான்போல உருவெடுத்து, ஆசையுடன் அவளோடு சேரும்போது, சிவபெருமான் வேடனாக உருவமெடுத்து அந்தப் பிரம்ம தேவனின் தலையைக் கொய்த செய்தியை நான்கு வேதங்களும் சொல்லுமே?

"திருமால் சிவபெருமானின் சந்நிதியில் மனத்தில் அகங்காரம் கொண்டு வந்ததால் ஒட்டகத்தைப் போன்ற கோணலான உடம்பை அடைந்தான். வேதவியாச முனிவர், திருமாலே கடவுள் என்று சத்யஞ் செய்து சொல்லும்போது, நந்திகேஸ்வரர் அவர்மீது கோபங் கொண்டு, அவரது இரு தோள்களையும் வெட்டிய செய்தியை நீ அறியாயோ?

வியாசர் சத்யம் செய்த கதை: முன்பொரு காலத்தில் சௌனகாதி முனிவர்கள், வேதாகம புராணங்களைக் கற்றுணர்ந்து, அவற்றால் தெளிவடையாமல், வேதங்களை வகைப் படுத்திய வேத வியாச முனிவரிடம் சென்று, பிரமதேவர் முதலிய தேவர்களுக்கு பரத்வம் சொல்லப்பட்டிருப்பதாலும், அதன் உண்மையைப் பிரமாணப் பூர்வமாகச் சொல்லியருளல் வேண்டும் என்று கேட்டார்கள். அதற்கு அவர், கங்கைக் கரையிலுள்ள காசி க்ஷேத்திரத்தின் சந்நிதியில் சென்று இரு கைகளாலும் ஜலத்தையள்ளி, உயரத் தூககி கீழே விட்டுக் கொண்டே—

"ஸத்யம், ஸத்யம் புநஸ்ஸத்யம் நவைவம் கேஸவாத்பரம்" என்றார். இதனால் நந்தியெம்பெருமான் வெகுண்டு இரண்டு புஜங்களும் துண்டித்துப் போகும்படி வெட்டினார். முனிவர் மிகவும் வருந்தி விஷ்ணுவைத் தியானித்தார்.

விஷ்ணு உடனே அவர் முன்பு தோன்றி, "வியாசரே! நானே உலகத்துக்குத் தலைவன்! எனக்குத் தலைவன் மஹேஸ்வரன். அந்தத் தேவ தேவனாகிய தலைவனுக்குத் தலைவன் ஒருவருமில்லை. இதை நீ அறிவாயாக" என்று சொல்லிவிட்டு மறைந்தார்.

விஷ்ணு கூறியது :

அஹமேவ ஜகத்கர்த்த மமகர்த்தா மஹேஸ்வரா:
தஸ்ய தேவாதி தேவஸ்ய கர்த்தா கோபி நவித்யதே!!

சிவபெருமானே, ஸ்வேதனைக் கொல்லவந்த யமனைத் தம் வேலாயுதத்தால் குத்திக் கோத்துக் கொண்டார். தக்ஷனது தலையானது மாறிப் போகும்படி ஆட்டுத் தலையைப் பொருத்தி, உயிர்ப்பித்தார். இவையெல்லாம் சொற் பிரமாணமல்ல; பிரத்யக்ஷப் பிரமாணம் அல்லவா?'

"தக்ஷயக்ஞத்தில் திருமால் தன் தலையை இழந்தான். சிவபெருமானே மூவுலகையும் அழிக்கும் வேகத்தோடு பாய்ந்துவந்த ஆகாயகங்கையைத் தம் திருமுடியில் சூடிக் கொண்டார். பூமியைச் சுமக்க ஆதிசேடன் எங்கள் சிவபெருமானின் கைவிரலுக்கு மோதிரமானான். இத்தகைய அற்பமான தேவர்களை எல்லாம் அழிப்பதற்கு எங்கள் சிவபெருமான் வேண்டியதில்லை. அவருடைய கணங்களில் ஒருவரே போதும். மூன்று உலகங்களை ஆக்கவும் காக்கவும் அழிக்கவும் விரும்பினால் அதற்கு அவரது கணங்களில் ஒரு சிறியவரே போதும்!

"திருநடனம் செய்து அனுக்கிரகஞ் செய்யும் சிவபெருமானே என்றும் சாஸ்வதமானவர். மற்றையத் தேவர்களெல்லாம் நிலையற்றவர்கள் என்று சொல்வதற்கு திருமால், பிரம்மன் ஆகியோரது தலைகளையும் தலையோடுகளையும் எங்கள் சிவனார் வெவ்வேறு ஆரமாக அணிந்துள்ள மேன்மையே இதற்குச் சாட்சியாகும்!

"சக்கராயுதமுடைய திருமால் பயப்பட்ட ஜலந்தராசுரனைத் தம் ஒரு திருவடியின் விரலால் வரைந்த சக்கரத்தினாலேயே சிவபெருமான் கொன்றார். எங்கள் சிவபெருமானின் திருவடிகளையே வணங்கி, அவர் அருள் செய்யும் பாக்கியங்களைப் பெற்று மகிழும் நாங்கள் தம்மைத்தாமே கொண்டாடும் தெய்வங்களைப் பொருட்படுத்தமாட்டோம்.

"திருமால் உபமன்யு முனிவரின் திருவடிகளைத் தொழுது ஞானோபதேசம் பெற்றதோடு இந்திர நீல லிங்கத்தையும் பெற்று அதைத் தாமரை மலர்களால் பூஜித்ததோடு தன் கண்களையே பிய்த்து அர்ச்சனை செய்த கோரமாகிய விரதத்தாலேயே சிவபெருமான் திருமாலுக்குச் சக்கராயுதத்தை தந்தருளினார்.

"இத்தகைய திருமால் ஸ்ரீராமாவதாரத்தில் இருபது கைகளையுடைய ராவணனைக் கொன்று அந்தப் பிரம்மஹத்தி தோஷத்தைப் போக்கிக் கொள்ளச் சுயசக்தி யில்லாமையினால். சிவார்ச்சனை செய்தல்லவோ போக்கிக் கொண்டான்? மேலும் திருமால் பூஜித்த சிவாலயங்கள் பெருந் தொகையை யுடையன. சதுர்வேத அதிகாரியான பிரம்ம தேவனும் விஷ்ணுவும் தேவேந்திரனும்

தேவர்களும் மனிதர்களும் முனிவர்களும், அரக்கர்களும் ஆகிய இவர்கள் எல்லோரும் சிவபெருமானைப் பூஜித்துத்தான் தங்கள் பதவிகளை அடைந்தார்களே தவிர, அவர்களிடத்தில் சிவபெருமான் தம் பதவியை அடையவில்லை.

"அரசனே! சிவபெருமானுக்குச் சமானமாக ஒருவருமில்லை. உலகம் யாவும் சிவஸ்வரூபம். திருமாலும் சிவபெருமானும் ஒன்றேயாகும். பூமி முதலிய அஷ்ட மூர்த்தங்களும் சிவஸ்வரூபம். அவனுடைய பக்தர்கள் அனைவரும் சிவஸ்ரூபம் என்று கருத வேண்டும். அவர்களைச் சாமானியர்கள் என்றால், அந்த மூட மனிதர்கள் நரகவேதனையையே அடைவார்கள்.

"அரசனே! நான் இங்கு வரவேண்டும் என்று ஆள்விட்டு எம்மை அழைத்தற்குக் காரணம் என்ன? நான் செய்ய வேண்டியது என்ன? சொல்வாயாக!"

—இவ்வாறு வாச்சையர் கேட்டார். அரசன் முகம் சுருங்கியது. அவன் மனத்துயரமடைந்து பேய் பிடித்தவன் போலானான், பேச்சின்றி மௌனமானான். ஆதிசேஷனுக்கு எதிரே நாக்குப்பூச்சிப் போலவும், செல்வர்களின் எதிரே வறியவர் போலவும், குதர்க்க வாதஞ் செய்த வைணவர்களான பிராமணர்கள் அரசவையை விட்டு நழுவிப் போனார்கள். விஜ்ஜல ராஜனும் வெட்க மடைந்து, தன் அரண்மனையினுள்ளே போய்விட்டான்.

## 42. மடிவால மாச்சையர் கதை

ஒருநாள் மடிவாலமாச்சையர் வழக்கம்போல ஜங்கமமூர்த்திகளின் வெளுத்த மடிவேஷ்டி மூட்டையைப் பக்தியோடு தம் முதுகின்மீது சுமந்துகொண்டு வீரத்துடன் தம்கையில் வைத்திருந்த வீரகண்டாமணியை முழக்கியவண்ணம் "அலிங்கிகளே! எம்மீது படாதேயுங்கள்: படாதேயுங்கள்!" என்று எச்சரித்த வண்ணம் தெருவழியே சென்று கொண்டிருந்தார்.

இவ்விதமாகச் செல்லும் அந்த மாவீரருக்கு எதிரே ஒரு பாவியானவன், மிகவும் நெருக்கமான வீதியில் சற்றும் விலகாமல் வந்துகொண்டிருந்தான். அவன் அருகில் வந்ததும், மடிவாலமாச்சையர் அவனது தலையை தம் வாளால் வெட்டிக் கீழே விழாமல் ஏந்தி ஆகாயத்தில் மறைந்து போகும்படி வீசிவிட்டுச் சென்றார்.

உடனே அந்தத் தெருவிலிருந்தவர்கள் எல்லோரும் சேர்ந்து, விஜ்ஜல மன்னனிடம் சென்று, "அரசே குறையென்பதே இல்லாத உனது கல்யாண பட்டினத்தில். தாழ்ந்த தொழிலைச் செய்பவனுன ஒரு மடிவாலன், தன்னை நல்லதொரு சிவபக்தன் என்று மதித்து, தன் அருகே ஒருவரையும் நெருங்கச் செய்யவிடாமல் திரிகிருன். அவன் தானுகவும் விலகுவதில்லை. அவன் கையிலே ஒரு கொடிய வாளாயுதத்தை ஏந்தி, காய்ந்த மடிவேஷ்டியின் மூட்டையின் அருகேவருகிறவர்களையெல்லாம் கொல்வேன் என்று சொல்கிருன். மதங்கொண்ட யானையைப்போல் வீதியில் வருவோர் போவோரை அவன் மதிக்காமல் கொல்கிருன். மன்னர்பெருமானே! அவனுல் தெருக் கடைகள் எல்லாம் மூடப்பட்டன, முக்கிய வியாபாரங்கள் நின்றுவிட்டன. வண்டிக்காரர்கள் ஒருவரைக்கூட அவன் செல்ல விடுவதில்லை, யானைகள், எருதுகள், மூட்டை வண்டிகள், குதிரைகள் முதலானவை எதுவுமே தன்னை நெருங்கக்கூடாது என்று ஆர்ப்பாட்டஞ் செய்கிருன். செங்கோல் ஓச்சும் அரசனே! இன்றையத்தினம் ஊருக்கே புதிதாக வந்த மனிதன் ஒருவனை, அவன் தன் அருகே வந்தான் என்று நினைத்து, அவன் தலையை வெட்டி, அந்தத் தலை கீழே விழாமல் ஆகாயத்தில் மறையும்படி அந்த மடிவால மாச்சையன் வீசி எறிந்து விட்டான். ஆகாயமே அந்தத் தலையை விழுங்கிவிட்டதோ என்னவோ, நாங்கள் தலையைப் பார்க்கவில்லை?" என்று முறையிட்டார்கள்.

அதைக் கேட்டதும் விஜ்ஜல மன்னன் தன் அருகே இருந்த தண்ட நாயகரான வசவண்ணரை நோக்கி, "ஏதேது? கடுமையான உங்கள் துஷ்டத்தனத்தால் ஒருவரையும் தெருவில் நடக்கவிடமாட்டார்கள் போலிருக்கிறதே! துணிவெளுக்கும் ஒரு வண்ணனுக்கு இத்தகைய துணிவுடன் அக்கிரமச் செயலைச்செய்ய எத்துணை தைரியம் இருக்க வேண்டும்? இத்தகைய அதிசயத்தை நாங்கள் இது வரை கேட்டதும் இல்லை. அறிவில்லாத பரதேசத்தான் ஒருவன் நமது ராஜ வீதியில் வருவதும் அவனைச் செல்ல விடாமல் கொன்ற வனுகிய இந்த மடிவாலமாச்சையனுக்கு இத்தகைய பெருமையைத் தந்தவன் நீயல்லவா? தெருவில் தன்னைத் தொட்ட ஜனங்களை அவன் கொல்வதற்குக் காரணம் என்ன? அரசன் என்று நான் ஒருவன் ஆட்சி செய்கிறேன் என்பதையும் மதிக்காமல், என் பட்டினத்தில் ஒரு வண்ணுன் இப்படி அநியாயமாகக் கொல்கிறன் என்றுல் அதற்குக் காரணம் என்ன? அவன் ஆகாயத்தில் வீசிய தலை பூமியில் விழவில்லை. விழுவதற்கு முன்பே நேரே நின்று வாயைத் திறந்து விழுங்கி விட்டானே? இவன் என்ன அரக்கனு? ஒரு குற்றமும் செய்யாமல் அருகில் வந்ததற்காக ஒரு பரதேசியைத் தயவின்றிக் கொல்லலாகுமோ?" என்று கோபமாக கேட்டான், பிறகு அவன் தன் சேவகர்களை நோக்கி, "கொலைசெய்த

அந்த வண்ணானை சாகும்வரை வெட்டுங்கள். இறந்தவனுடைய தலையை அந்த வண்ணான் திரும்பத் துப்பிவிட்டால் இங்கு வந்து விடுங்கள். இந்தத் தண்டனைத்தான் எனது குடிமக்களுக்குத் திருப்தியை உண்டாக்கும்'' என்று கட்டளை யிட்டான். அப்போது வசவண்ணர் அரசனை நோக்கிக் கூறலானார்.

''நடந்தது என்னவோ நடந்தேறி விட்டது. இனிமேல் நடக்கப் போவது இத்தன்மையானது என்று சற்றும் உணராமல் இது போன்று கட்டளையிடுவதால் பயன் என்ன? இங்கு வந்து முறை யிட்ட துஷ்டர்களின் பேச்சைக் கேட்டு மடிவால மாச்சையரை வண்ணான் வண்ணான் என்று துச்சமாகச் சொல்வதற்குக் காரணம் என்ன? மேலான பிராமண ஜாதியில் பிறந்தவர்களைவிட அதீதமான வர் அவரல்லவோ? ஜாதியின் வேர் முழுதும் அடியோடு அற்றுப் போகும்படி கறித்து வீசவல்லவர் அவரல்லவோ? சிவபெருமானைப் போன்ற தூயவரல்லவோ அவர்? முற்காலத்தில் பிரம்ம தேவ னுடைய ஜடையையே பூணூலாக அணிந்து, அவனுடைய கபா லத்தையே சர்ப்பாபரண திருக்கரத்தில் தாங்கி பிக்ஷாடனஞ்செய்ய வல்ல பிராமணராகிய சிவபெருமானைப் போன்றவரல்லவோ அவர்? யானைமுதல் எறும்புவரையிலுள்ள ஜீவராசிகளாகிய பொருள்கள் எல்லாம் சேர்கின்ற பலவகைப்பட்ட இடங்களை நாதவிந்துவாகிய பலகையின்பேரில் ஆதிசக்தியாகிய சக்கரத்தையிட்டு, கலையாகிய தண்டத்தால் சுழற்றி வளைந்து கொடுக்கவல்ல சிவபெருமானைப் போன்றவர் அல்லவா அந்த மடிவால மாச்சையர்? எனவே, வீர விரதத்தை அனுஷ்டிப்பதில் சிறந்தவரான அவரது ஜாதியைப் பற்றி அரசனாகிய நீ பேசுவது சரியல்ல, தர்மமுமல்ல. வேந்தே! திருக்கருவை என்ற திருத்தலத்தில் சிவகாமியாண்டான் என்ற ஒரு சிவபக்தர் இருந்தார். அவர் அன்புடன் சிவபெருமானுக்கென்றே மலர்களைப் பறிப்பார்.

## புகழ்ச்சோழன் கதை

ஒருநாள் அவர், மலர்களைப் பறித்து, தமது பூக்குடலையில் சுமந்துகொண்டு, ராஜவீதி வழியாக சிவபெருமானின் திருக் கோயிலுக்குச் சென்று கொண்டிருந்தார். அப்போது அந்தச் சாலை வழியாக வந்த சோழ மன்னனின் பட்டத்து யானை, அவரது கையில் இருந்த மலர்களை யெல்லாம் தரையிலே சிந்தியது. அதைக்கண்ட எறிபத்த நாயனார், அந்த யானையைத் தம் மழுப் படையால் கொன்று விட்டார். ஜீவகாருண்யமுடைய எறிபத்த நாயனாரின் கையில் தன் உடைவாளைக் கொடுத்து, அடியேனை யும் கொல்லுங்கள்!' என்று அஞ்சாமல் வணங்கினன் அந்தச்

சோழமன்னன். உடனே செத்த யானையும் உயிர் பெற்று எழுந்தது. இதுமட்டுமோ? இன்னுமொரு நிகழ்ச்சியைச் சொல்கிறேன், கேளும்.

## பாலூர்ப் பொம்மையர்

பாலூர் பொம்மையர் என்ற சிவபக்தர் ஒருவர் இருந்தார். அவர் ஆசாரசீலர். அருமையான சிவபக்தர். கோபமில்லாதவர். தீரர். அவர் ஒரு நந்தவனத்தைத் தாமே உண்டாக்கி அதில் மலர்ந்த மலர்களை எல்லாம் ஜங்கம மூர்த்திகளின் திருமடங்களுக்கு நாள்தோறும் எடுத்துச் சென்று கொடுத்து வருவார். அவர்கள் கொடுக்கும் திரவியத்தைக் கொண்டு குருலிங்க ஜங்கம மூர்த்திகளைத் தினமும் பூஜித்து வருவார். ஒரு சமய வாதச் சண்டை நடந்த சமயத்தில், அவர் ஒரு கல்லாலான ரிஷபத்தை உயிர்ப்பித்து புல்லைத் தின்னும்படிச் செய்வித்தார். எல்லா மக்களும் பார்த்துக்கொண்டேயிருக்க சோளமணிகளை லிங்காகாரங்களாக்கியவர்.

இத்தகைய மகிமையையுடைய பொம்மையர், பாலூர் என்ற திருத்தலத்தில் வாழ்ந்துவரும் காலத்தில் அந்த நாட்டு அரசன் தன் எதிரியை போர்க்களத்தில் வென்றுவிட்டு திரும்பி வரும் போது, பாலூர் மார்க்கமாகப் படைகளுடன் வந்தான், வந்தவன் அந்த ஊரின் கிழக்குப் பக்கத்தில் பொம்மையர் பயிர் செய்து வைத்திருந்த சிறந்த பூந்தோட்டத்தின் அருகேயிருந்த நதிக்கரையில் படைகளுடன் தங்கியிருந்தான். அப்பொழுது அவனுடைய பட்டத்து யானை, மதங்கொண்டது. அது தன்னைக் கட்டியிருந்த விலங்குகளை அறுத்து எறிந்து தன் மாவுத்தர் களையும் வதைத்து, தன் நிழலைக் கண்டே கோபித்து. பிளிறியவண்ணம் தன் எதிரே வந்த ஜனங்களை யெல்லாம் கொன்ற வண்ணம், பொம்மையரின் பூந்தோட்டத்தினுள்ளே புகுந்தது. அந்தச் சமயத்தில் பொம்மையர் மலர்களைப் பறித்துக் கொண்டு வெளியே வந்துகொண்டிருந்தார். மதங்கொண்ட அந்த யானை அவர்மீது பாயச் சென்றது. அதைக்கண்ட அவர் அதை நோக்கி, "மதங்கொண்ட மிருகமே! வாய்த்துணையற்ற யானையே! நீ அலறியே சாகக் கடவாய்!" என்று அதட்டினார். உடனே அந்த யானை தன் துதிக்கையை தலைமீது தூக்கிக் கதறிக் கதறி அந்த ஆற்றங் கரையிலேயே செத்து விழுந்தது. இந்தச் செய்தி அரசனுக்கு எட்டியது, அரசன் அதைக் கேட்டு பயந்து பொம்மையரை வணங்கி, தன் யானை செய்த குற்றத்தைத் தன் குற்றமாகக் கருதாமல் அனுக்கிரகஞ் செய்ய வேண்டும்" என்று அவரது திருவடிகளில் வணங்கி வேண்டினான். உடனே, பொம்மையர், ஜிவகாருண்ய உணர்வுடன் இறந்து போன யானையை மீண்டும் உயிர் பெற்று எழச்செய்தார். உயிர்

பெற்ற யானை தன் மதம் நீங்கி பொம்மையரை வணங்கியது. அதைக் கண்ட அரசன், அமைச்சர்கள், பொது மக்கள், படைவீரர்கள் முதலான அனைவரும் பொம்மையரைப் புகழ்ந்து துதித்தார்கள் சிவசரணரது கிருபையால், அந்த அரசனும் புகழப்பட்டான்.

எந்த அரசாங்கமும் ஜங்கம மூர்த்திகளுக்கு தீங்கிழைக்கமாட்டாது. பெருமையையே கொடுக்கும். சாந்தமான திருமாலிடமும் தேவர்களிடமும் காசிபர் முதலான முனிவர்களால் அடைந்த சாபங்களைப் பெரியவர்கள் சொல்லக் கேட்டுத் தெரிந்திருந்தும் உலகத்தாரைப்போல மடிவாலமாச்சையரை நினைக்கலாகுமோ? மாச்சையர் சிவபக்தர்களுடைய ஆடைகளைத்தவிர பிறருடைய வஸ்திரங்களை வெளுப்பதில்லை. அவரிடம் ஆடைகள் கேட்கும் ஜங்கம மூர்த்திகளுக்கு அவர்கள் விரும்பியதை கொடுத்துவிட்டு, உரியவருக்கும் உரிமையானவற்றை மீண்டும் வழங்கவல்ல புண்யமூர்த்தி அவர்.''

—இவ்வாறு பசவண்ணர் சொன்னார். அதைக் கேட்ட விஜ்ஜல மன்னன் வசவண்ணரை நோக்கி, ''நீர் பழைய கதைகளையே பேச வல்லவர்!'' என்று சொல்லிவிட்டுத் தம் மாவுத்தர்களைக் கூவியழைத்து, ''நீங்கள் விரைவாகச் சென்று அந்த மடிவாலமாச்சையன்மீது மதமும் கோபமும் கொண்ட நமது யானைகளைக் கொண்டு அவனை நெருக்கிக் கொல்லுங்கள்!'' என்று கட்டளையிட்டான். மாவுத்தர்களும் அரச கட்டளையை நிறைவேற்றச் சென்று விட்டார்கள். அப்போது வசவண்ணன் அரசனை நோக்கி, ''வேந்தே! மடிவஸ்திர மூட்டையைத் தொட்டவுடனே கொன்ற மாவீரரை இவர்களால் நெருங்க முடியுமா? இதற்கு யானைகளை அனுப்பி என்ன பயன்? நீரே படைகளுடன் போர் செய்யச் சென்றாலும் அவர் முன்னே மனதிடத்தோடு போரிட்டு, மீண்டும் வருவது உமக்கே இயலாத காரியம்! அவர் அவ்வளவு தைரியமுடையவர்'' என்றார்.

இதற்குள், மடிவால மாச்சையர் நடந்து செல்லும் தெருவிற்கு யானைப்பாகர்கள் மதங்கொண்ட முரட்டு யானைகளைச் செலுத்திக் கொண்டு சென்றார்கள். அதைச் சிவபக்தரான மடிவாலமாச்சையர் கண்டார். மூட்டையை தோளில் சுமந்துகொண்டே ரௌத்ராகாரமாகக் கோபித்து, அந்த யானைக் கூட்டங்களை நோக்கி, ''கல்லிநாதன் பெற்றிருக்கும் மதத்தையும் வலிமையையுமுடைய யானைகளைப்போல எனக்கெதிரே நீங்கள் நிற்காதீர்கள். மூடர்களே! இங்கு நின்று உங்கள் உயிரை இழந்து விடாமல் போய்விடுங்கள்'' என்று ஆரவாரம் செய்து, தம் வீரகண்டா மணியை முழக்கினார். உடனே யானைகள் பயந்து திக்குகளிலெல்லாம் ஓட்டம்

பிடிக்கலாயின. அப்போது யானை மாவுத்தர்கள் பலமுள்ள யானைகளை மிக்க கோபத்தோடு வளைத்து மீண்டும் மேலே வந்தார்கள். அவை தம்மை நெருங்குவதற்கு முன்பாக அந்த மடிவாலமாச்சையர் தம் மடி வஸ்திர மூட்டையை ஆகாயத்தில் வீசி எறிந்துவிட்டு, "ஹரனே! காலகாலனே!" என்று துதித்து உள்ளங்கைகளைத் தொடையில் தட்டிக்கொண்டு, எதிர்த்துவந்த யானைப்பாகர்களை சாகும்படி எடுத்து வீசினார். யானைப் படைகளைத் தமது கைகளினால் அவற்றின் துதிக்கைகளைப் பிடித்து, அவற்றின் மதம் கலங்கும்படிச் சுழற்றி, துணிகளை வெளுப்பதுபோல வெளுத்து, நரசிங்கமூர்த்தியைச் சிவபெருமான் திருக்கைகளில் அம்மானைக் காய்களாக வீசியாடியதைப்போல, பூமியில் விழாமல் வீசியபடி, அவற்றின் கால்களை வெட்டிப் பூமியில் எறிந்தார். முற்காலத்தில் கஜமுகாசுரனைச் சிவபெருமான் உரித்தாற்போல, மாச்சையர் அந்த யானைகளின் தோலை உரித்தார். திருமாலின் முதுகுத் தண்டாகிய நீண்ட எலும்பைச் சிவபெருமான் பிய்த்ததைப்போல, யானைகளின் முதுகெலும்புத் தண்டைப் பிய்த்தார். யானைகளின் தலைகளையெல்லாம் அவற்றின் எலும்புகளால் நொறுக்கி, அவற்றின் இறைச்சிகளைத் தெருவெங்கிலும் வீசியெறிந்தார்.

இந்தச் செய்தி விஜ்ஜல ராஜனுக்கு எட்டியது. அவனது மலர்ந்த முகம் வாட்டமடைந்தது. அவன் வசவண்ணரைப் புன்னகையோடு பார்த்தான். வசவண்ணர் அவனை நோக்கி, "அரசே! அவர்மீது உனக்குள்ள கோபத்தை விட்டுவிடும். யானைகளை அனுப்பாதீர் என்று நான் அப்பொழுதே சொன்னேன். என் சொல்லைக் கேட்காததால் உன் மரியாதையும் போயிற்று, யானைகளும் செத்தன; சிவதோஷமும் சேர்ந்தது. ஆகையால் சிவபக்தர்களின் மகிமைகளைச் சொல்வது எளிதல்ல. மடிவால மாச்சையர், பரசமயவாதிகளின் பகைவராவதற்கே தாயின்றி அவதரித்தவர். அவரைச் சாதாரண மனிதர் என்று நினைக்க வேண்டாம். நீர் அவரைச் சரணடைந்தால், அவர் மகிழ்ந்து உம்மை உஜ்ஜீவிக்கச் செய்வார்!" என்று சொன்னார். விஜ்ஜல மன்னன் சம்மதித்தான். மடிவாலமாச்சையரை சரண்புகுவதே செய்யத்தக்க காரியம் என்று யோசித்து, அமைச்சர்களும் பெரியோர்களும் புலவர்களும் புடைசூழ்ந்துவர விரைந்து சென்றான். மடிவால மாச்சையரின் அருகில் செல்வதற்கும் வெட்கப்பட்ட அரசன், வெகுதூரத்திலிருந்தே மாச்சையர் இருக்கும் திசையை நோக்கிச் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தான். அதற்குள் வசவண்ணர் மாச்சையரின் திருவடிகளை வணங்கி, "இந்த அரசர் ஆலோசிக்காமல் உங்கள்மீது யானைப் படைகளை அனுப்பியபோதே, அவ்வாறு அனுப்ப வேண்டாம் என்று நான் புத்தி சொன்னேன். கோபத்தால் படைகளை அனுப்பிவிட்டு, இப்போது தன் மரியாதையை இழந்து, உமது

ஸ்ரீபாதங்களில் விழுந்து வணங்கினர். அவர் செய்த குற்றத்தை நீங்கள் தயவுசெய்து மன்னிக்க வேண்டும். சிவபெருமானுக்கு இணையான தாங்கள் ஊர்க்குருவியின்மேல் பாசுபதாஸ்திரத்தைத் தொடுப்பதால் என்ன பயனோ? பூமியை ஆளும் அரசரா தங்களுக்கு நிகராவான்? சுவர்க்கம் முதலிய உலகங்களை ஆள்கின்ற இந்திரன் முதலிய தேவர்களே உனது அனுக்கிரகத்தைப் பெற்று வாழ்வார்கள். ஆகையால் அனுக்கிரகம் செய்யுங்கள்!'' என்று வேண்டினார்.

உடனே, மடிவாலமாச்சையர் விஜ்ஜல ராஜனின் அருகில் வந்து, ''அரசனே! எழுந்திரும்'' என்றார். அரசன் எழுந்தான். பூமியிலே செத்துக் கிடக்கும் யானைப் படைகளின் எலும்புகளும் இறைச்சிகளுமாகிய அவற்றின்மேல் மாச்சையர் திருவெண்ணீறாகிய விபூதியை தெளித்தார். உடனே, இறைச்சிகள், தோல், எலும்புகள் யாவும் சேர்ந்து, யானைகள் உயிர்பெற்று எழுந்தன.

முன்பு அவர் வெட்டி ஆகாயத்தில் வீசிய பரதேசியின் தலையும் அரசனுக்கு எதிரேவந்து விழுந்தது அதற்கு உயிரளித்தார் மாச்சையர். அங்கு கூடியிருந்தோரெல்லாம் மடிவாலமாச்சையரை வணங்கித் துதித்தார்கள். அதற்குள் ஆகாயத்தில் அவர் முன் வீசிய மடிவஸ்திர மூட்டையும் வந்து இறங்கியது. பிறகு அவர் அந்த மூட்டையைத் தூக்கித் தம் திருமடத்திற்குச் சென்றார். வசவண்ணரும் அவரைப் பின்தொடர்ந்தார். அரசனும் அமைச்சர்களும் அரண்மனைக்குச் சென்றனர். யானைகள் கோட்டைக்குச் சென்றன.

அரசனும் அமைச்சர்களும் மடிவால மாச்சையரின் பெருமையைப்பற்றியே பேசிக் கொண்டிருந்தனர். மடிவால மாச்சையர் எப்போதும்போல, ஜங்கமமூர்த்திகளின் துணிகளை வெளுக்கிற வீரவிரதமாகிய நித்ய கர்மத்தைச் செய்து கொண்டிருந்தார்.

முற்றிற்று

# பழம்பெருங் கதைகள்

சிவமஹா புராணம்
முதல் பாகம் விலை ரூ. 4-50 2வது பாகம் ரூ. 4-50
துர்க்காதாஸ் எஸ். கே. ஸ்வாமி 3வது ,, ரூ. 4-50

தசகுமார சரிதம் என விழங்கும்
அவந்தி சுந்தரி கதை
வடமொழி மூலத்திலிருந்து பரிசோதித்து
எழுதியவர் எஸ். ராமநாதன் விலை ரூ 2-50

அறுபத்துமூவர் கதைகள்
(பெரிய புராணம் முழுதும் வசனவடிவில்)
பதிப்பாசிரியர் அரு. ராமநாதன் விலை ரூ 5-50

ஸ்ரீ விஷ்ணு புராணம்
துர்க்காதாஸ் எஸ். கே. ஸ்வாமி விலை ரூ 4-50

ஸ்ரீ தேவி பாகவதம் {மூன்று பாகங்கள்
துர்க்காதாஸ் எஸ். கே. ஸ்வாமி ஒவ்வொன்றும்} ரூ 4-50

வீரவன்னியர் கதை
(வன்னிய புராணம் வசன வடிவில்)
துர்க்காதாஸ் எஸ். கே. ஸ்வாமி விலை ரூ 2-00

ஸ்ரீ கருட புராணம்
துர்க்காதாஸ் எஸ். கே. ஸ்வாமி விலை ரூ 3-00
விக்கிரமாதித்தன் கதைகள்
புதிய கதைகள், புதிய சித்திரங்களுடனும் வடமொழி மூலக்கதைகளுடனும் (புதிய பதிப்பு)
பதிப்பாசிரியர்: அரு. ராமநாதன் அச்சில்
கதைக்கடல்
(மகாகவி சோமதேவரின் கதா சரிதசாகரம் ஏராளமான புதிய சித்திரங்கள் அடங்கிய அழகிய பதிப்பு)
பதிப்பாசிரியர்: சிரஞ்சீவி அச்சில்

மங்கம்மா சத்திரத்து மனமோகனக் கதைகள்
—முதல் பாகம் மட்டும் அச்சில்
எழுதியவர்கள்:
அரு. ராமநாதன்; நாக. முத்தையா
3 பாகங்கள் வந்துள்ளன (ஒவ்வொன்றும்) விலை ரூ 3-50
பாட்டி சொன்ன கதைகள்
பதிப்பாசிரியர்: சிரஞ்சீவி விலை ரூ 1-50

சார்தர்வேஷ் கிஸ்ஸா என வழங்கும்
நான்கு பக்கீர்கள் கதை
மூலபபிரதிகளை பரிசோதித்து எழுதியவர்
நாரா. நாச்சியப்பன் விலை ரு 2-00

நவீன அராபிய இரவுகள்
ஏ. கே. சேஷய்யா விலை ரு 3-50

விநாயகர் புராணம்
பதிப்பாசிரியர்: அரு. ராமநாதன்
எழுதியவர்: ரா. சரஸ்வதி விலை ரு 5-50

பைபிள் கதைகள்
பதிப்பாசிரியர்: சிரஞ்சீவி விலை ரு 4-50

சித்தர் பாடல்கள் (மூன்ருவது பதிப்பு)
பதிப்பாசிரியர்: அரு. இராமநாதன் விலை ரு 5-50

குடும்ப கீதை
(கீதைக்கு முன்னும் பின்னும்)
எஸ். வெங்கடசாமி, எம்.ஏ. விலை ரு 1-00

மதன காமராஜன் மரியாதை ராமன் கதைகள்
பதிப்பாசிரியர்: அரு. ராமநாதன் அச்சில்

ஜாதகக் கதைகள் என வழங்கும்
போதிசத்துவர் கதைகள் :
துர்க்காதாஸ் எஸ். கே. ஸ்வாமி விலை ரு 4-50

திராவிட நாட்டுக் கதைகள்
தொகுத்தவர்: சிரஞ்சீவி விலை ரு 4-50

## பலவகை நாவல்கள்

| | | | |
|---|---|---|---|
| 1 | மைனர் மதுரை வீரன் | (சந்திரமோகன்) | 1-50 |
| 2 | கட்டையசிம்மன் | ,, | 1-50 |
| 3 | மலைநாட்டு மாவீரன் | ,, | 1-50 |
| 4 | மின்சார மோகினி | ,, | 1-50 |
| 5 | சுக்கிரமண்டலத்துப் பறக்கும் சுந்தரி | ,, | 1-50 |
| 6 | மின்சார மோகினியின் மாயவலை | ,, | 1-00 |
| 7 | காந்தப்பறவை | ,, | 1-50 |
| 8 | மந்திரவாதி மகள் லீலா | ,, | 1-50 |
| 9 | மாவலிக்கோட்டை புரட்சி | (வேலவன்) | 1-50 |
| 10 | மோகனக்கிளி | (நாரா நாச்சியப்பன்) | 1-50 |
| 11 | எத்தன் சாம்பாஜி | ,, | 1-50 |
| 12 | நான்கு பக்கீர்கள் கதை | ,, | 1-50 |
| 13 | ஹாத்திம் தாய் | | 2-00 |
| 14 | ராணி மங்கம்மாள் | | 3-00 |
| 15 | பொய்க்கால் குதிரை | (ஜெகசிற்பியன்) | 1-5 |

எந்த மொழியிலும் வெளிவராத கன்னித்தமிழ் முயற்சி !

# ஜோதிட உலகிலே புரட்சி !

ஞானிகளின் பழைய சூரிய சஞ்சார ஜோதிட கணித
முறைப்படி புதிய விஞ்ஞான ஆராய்ச்சிகளோடு
முற்றிலும் புதிய முறையில் முதன் முதலாக
பிரேமா பிரசுரத்தினர் வழங்கும்
நூல் வரிசை !

## நீங்கள் பிறந்த மாத அதிர்ஷ்ட ஜோதிடம்

[சித்திரை மேஷம், வைகாசி ரிஷபம், ஆனி மிதுனம், ஆடி கடகம், ஆவணி சிம்மம், புரட்டாசி கன்னி, ஐப்பசி துலாம், கார்த்திகை விருச்சிகம், மார்கழி தனுர், தை மகரம், மாசி கும்பம், பங்குனி மீனம் எனப் பன்னிரண்டு புத்தகங்கள்,]




நீங்கள் கேட்பதற்கும் சோதிடர்கள் சொல்வதற்கும் தயங்கும் பல அந்தரங்க விஷயங்களும் இந் நூல் வரிசையில் அடங்கியுள்ளன. நீங்கள் எந்த நட்சத்திரம், எந்த ராசி, எந்த லக்கினமாக இருந்தாலும் சரி, நீங்கள் பிறந்த மாதத்தின் சூரிய சஞ்சாரத்தைக் கொண்டே உங்கள் வாழ்க்கை சம்பந்தப்பட்ட அத்தனையுமே சொல்லபடுகிறது அற்புதமாக.

விலை ரூ. 1-30